# முன்னுரை

என்னுடைய ஒவ்வொரு நாவலுக்கும் ஒரு சரித்திரம் உண்டு. அதை எப்போது எழுதினேன், ஏன் எழுதினேன், என்ன ஆராய்ச்சிகள் செய்தேன் என்று யோசித்துப் பார்க்கையில் வேடிக்கையான நிகழ்ச்சிகள் ஞாபகம் வரும்.

ஆனால் 'ஒளிவதற்கு இடமில்லை' நாவலை எழுத நேர்ந்த சம்பவம் முற்றிலும் வித்தியாசமானது.

அப்போதெல்லாம் வருஷத்துக்கு மூன்று நாலு சிறப்பிதழ்கள் வெளியிடுவார்கள். ஒவ்வொன்றிலும் ஒரு பிரபல எழுத்தாளருடைய தொடர்கதை ஆரம்பமாகும். அந்த முறை எந்த எழுத்தாளரும் உடனடியாகக் கிடைக்கவில்லை. ஆகவே அமரர் எஸ்.ஏ.பி, 'நீங்களே எழுதுங்கள்'' என்றார் என்னிடம்.

'ஏற்கெனவே ஒரு தொடர்கதை என் பெயரில் வந்து கொண்டிருக்கிறது?' என்றேன். 'சின்னக் கமலா' என்ற தொடர்கதை இருபது இருபத்தைந்து அத்தியாயங்கள் வெளியாகிக் கொண்டிருந்த சமயம் அது.

'அதனாலென்ன? அது பாட்டுக்கு அது வந்து கொண்டிருக்கட்டும். வேறு பெயரில் நீங்கள் 'எழுதுங்கள்,' என்றார் ஆசிரியர்.

என்னிடம் நாவல் எழுதுவதற்கான 'ஐடியா' எதுவும் அப்போது இருக்கவில்லை. இருந்தாலும், அவருடைய அன்புக் கட்டளையை எப்படி மீற முடியும்? 'ஒளிவதற்கு இடமில்லை' என்ற இந்த நாவலை, 'டி. துரைசாமி' என்ற புனை பெயரில் எழுத ஆரம்பித்தேன். டி. துரைசாமி என்று ஏன், எப்படிப் பெயர் சூட்டிக் கொண்டேன் என்பது எனக்கே தெரியவில்லை. 'சின்னக் கமலா' தொடர்கதை சுமார் இருபது வாரங்களில் முடிந்தது. அந்த இருபது வாரமும் 'ஒளிவதற்கு இடமில்லை'யும் வந்தது. ஒரே சமயத்தில் இரண்டு தொடர்கதைகளை எழுதிய தமிழ் எழுத்தாளன் நானாகத்தான் இருக்கும். இந்த இரண்டுக்கும் நடுவில் சிறுகதைகள், கட்டுரைகள், துணுக்குகள் முதலானவையும் எழுதிக்கொண்டிருந்தேன். அதெல்லாம் ஒரு

பொற்காலம். எப்படி என்னால் முடிந்தது என்று இப்போது நினைத்துப் பார்த்தால் பிரமிப்பாக இருக்கிறது. இதைப் படிப்பவர்களும் நம்பமாட்டார்கள். எஸ்.ஏ.பி என்ற மகத்தான மனிதரின் மந்திரக்கோல் விளைவித்த அதிசயங்களுள் இதுவும் ஒன்று.

இந்த நாவலை எழுதிக்கொண்டிருந்த சந்தர்ப்பத்தில் சுஜாதா ஒருமுறை காரியாலயத்துக்கு வந்திருந்தார். பகல் உணவுக்கு என் வீட்டுக்கு வரும்படி அவரை அழைத்திருந்தேன். வந்தார். புரசைவாக்கம் வெள்ளாளத் தெருவில் இருவரும் நடந்து போய்க்கொண்டிருந்தபோது, 'ஒளிவதற்கு இடமில்லை' என்பது ஒரு பிரமாதமான தலைப்பு! இப்படி ஒன்று எனக்குக் கிடைக்கவில்லையே என்று பொறாமையாக இருக்கிறது!' என்று சொன்னது நேற்றுப்போல் பசுமையாயும் பெருமையாயும் இருக்கிறது. 'டி.துரைசாமி' என்ற பெயர் எந்த வானத்திலிருந்து குதித்ததோ - அதே வானத்திலிருந்துதான் ''ஒளிவதற்கு இடமில்லை'யும் குதித்திருக்க வேண்டும்!

இன்னொரு வேடிக்கையும் இங்கே குறிப்பிட வேண்டும்.

ஒரு தொடர்கதையைப்பற்றி பேசுவதற்காக என் வீட்டுக்கு வந்த டைரக்டர் கே. பாக்கியராஜ், 'எனக்கு ரொம்ப நாளாய் ஒரு ஆசை. டி. துரைசாமி என்ற ஒரு தொடர்கதை எழுதினாரே, அவரைப் பார்க்க வேண்டும்,' என்றார். 'இப்போது பார்த்துக்கொண்டுதான் இருக்கிறீர்கள்' என்று நான் பதிலளித்ததும் அவர் திகைத்த திகைப்பு! 'ஒளிவதற்கு இடமில்லை' நாவலில் அவருக்கு மகா மோகம். அவருடைய 'பாக்யா' இதழில் மொத்தத் தொடர் கதையையும் வாராவாரம் மறுபிரசுரம் செய்தார்.

மேற்குறிப்பிட்ட பெரியவர்களுக்கு என் நன்றி. அழகிய முறையில் பிரசுரித்திருக்கும் அல்லயன்ஸ் பதிப்பகத்தாருக்கும், புரூப் பார்த்துத் தருவதில் எனக்கு மிகவும் உதவி செய்த திருமதி மங்கை கிருஷ்ணஸ்வாமி அவர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

ரா.கி. ரங்கராஜன்

# ஒளிவதற்கு இடமில்லை

## முதல் பாகம்



காரைத் தெருக்கோடியில் நிறுத்திவிட்டாள் அவள். கண்ணாடியை ஏற்றினாள். கதவைப் பூட்டினாள். சுற்று முற்றும் பார்த்தாள். தெரு அமைதியாக இருந்தது. மின்சாரக் கம்பங்கள் ஒன்று விட்டு ஒன்று தான் எரிந்தது. கைக் கடியாரத்தைப் பார்த்தாள். மணி பத்தேகால்.

தென்புறம் தியாகராய நகரிலிருந்து சைதாப்பேட்டைக்குச் செல்லும் பெரிய சாலை. அதிலிருந்து பிரிகிற சிறிய தெரு இது. வீட்டு இலக்கங்களைப் பார்த்துக் கொண்டே சென்றாள். மின்சாரக் கம்பங்களின் கீழே வரும் போது மட்டும் அவளுடைய முகத்தின் மீது வெளிச்சம் விழும். அந்த முகத்தில் கலவரம் குடிகொண்டிருப்பது தெரியும். அவள் ஒற்றைப் பின்னலிட்டிருப்பது கண்ணில் படும். அழகி, செல்வத்தில் செழுமையுள்ளவள் என்பது புலனாகும். கையிலிருந்த உறையை மறுபடி பார்த்துத்

கொண்டாள். பன்னிரண்டாம் இலக்கம் என்று எழுதியிருந்தது. இதோ பத்து, பதினொன்று, பன்னிரண்டு. அது தனி வீடல்ல. இரண்டு வீட்டுச் சுவர்களுக்கு நடுவேயுள்ள இரட்டைக் கதவின் மீது இலக்கம் எழுதப்பட்டிருந்தது. கதவைத் தள்ளினாள். திறந்து கொண்டது. ஒரு மாடிப்படி இருந்தது அங்கே.

செங்குத்தாகச் சென்றது மாடிப்படி. வழியெல்லாம் இருட்டுத்தான். எச்சரிக்கையாக ஒவ்வொரு படியாய் ஏறினாள். மேல்படியில் ஒரு சிறு வெராந்தா. நாலு பேர் நிற்பதற்குப் போதுமான இடம். அந்த இடத்தில் சுவர்கள் முடிந்து, கொஞ்சம் திறந்த வெளி இருந்தது. நிலா வெளிச்சம் சிறிது வந்தது.

வெராந்தாவைத் தாண்டியதும் ஓர் அறை இருந்தது. பெரிய கதவுகள் சாத்தியிருந்தன. உள்ளிருந்து வெளிச்சம் வர வில்லை. கதவுக்குப் பக்கத்தில் ஒரு பெயர்ப் பலகை மாட்டப் பட்டிருந்தது. அதில் பிளாஸ்டிக் எழுத்துக்கள் வெளிச்சம் போதவல்லை, படிப்பதற்கு. விரல்களால் தடவினாள். ஆர் ஏ எம் ஏ அவள் முகத்தில் மலர்ச்சி ஏற்பட்டது. பாடு பட்டதற்குப் பலன் கிடைத்தது என்ற நிம்மதி உண்டாயிற்று. நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டாள். பெயர்ப் பலகைக்குப் பக்கத்திலிருந்த பஸ்ஸரை அழுத்தினாள். உள்ளே எங்கேயோ இஸ்ஸ்ஸென்று வண்டு போல் ரீங்கரித்தது.

ஆனால் பதில் இல்லை. உள்ளே சற்று முன் யாரோ நடமாடும் சப்தம் கேட்டதே? பிரமையோ?

''சார்! சார்!'' என்று மெல்லக் குரல் கொடுத்தாள்.

ஒரு வினாடி நிசப்தம். பிறகு, ''யாரது?'' என்ற அதட்ட

லான ஆண் குரல்.

அம்மாடி! மனிதர் உள்ளேதான் இருக்கிறார். மறு படியும் நிசப்தம். மிக எச்சரிக்கையான பேர்வழி. அப்படிப் பட்டவர்தானே வேண்டும்?

விளக்குப் போடப்பட்டது. கதவு இடுக்கு வழியாக ஓர் ஒளிக் கீற்று அவள் புடவை மீதும் படிந்தது.

அவன் கதவைத் திறந்தான். ''என்ன வேண்டும்?'' என்று கேட்டான்.

''உங்களுடன் கொஞ்சம் தனியாய்ப் பேச வேண்டும்.''

''உள்ளே வாருங்கள்.''

அவனைப் பின் தொடர்ந்தாள். முன்னறையிலேயே அவன் உட்கார்ந்தான். அவளையும் உட்காரச் சொன்னான். அறை கொஞ்சம் கூட ஒழுங்காக இல்லை. பிரம்மசாரி வாலிபன் போலும். எத்தனை ஊழல்!

அவனை ஆராய்ந்தாள் மேலோட்டமாக. வாட்ட சாட்டமாக இருந்தான். எதற்கும் துணிந்தவன் என்பதை ஆழமான கண்கள் காட்டின. உதடுகள் தடித்திருந்தன. ரோமனியச் சிற்பம் போல முகத்தில் பலவகை மேடு பள்ளங்கள்.

''அஸிஸ்டென்ட் போலீஸ் கமிஷனர் தணிகாசலம் தான் உங்கள் பெயரையும் விலாசத்தையும் கொடுத்தார்'' என்றாள்.

அவன் வியப்போ மகிழ்ச்சியோ காட்டவில்லை. ''உங்களுக்கு அவரைத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''எங்கள் குடும்ப நண்பர் அவர். என் பெயர்

ரேணுகா.''

''என்ன விஷயமாய் உங்களை அனுப்பினார்?''

''இந்தக் கடிதத்தைப் பாருங்கள். உங்களுக்கு எழுதிக் கொடுத்திருக்கிறார்.'' அவன் அதை வாங்கிக் கொள்ள வில்லை. ''நீங்களே படியுங்களேன், என்ன எழுதி யிருக்கிறாரென்று.''

அவள் உறையின் வாயைக் கிழித்தாள். ஊதிப் பிளந்தாள். எடுத்துப் படித்தாள்.

அன்புள்ள ரமணன்,

இக் கடிதத்தை எடுத்து வரும் ரேணுகா எனக்கு மிகவும் வேண்டிய பெண். ஓர் உதவிக்காக என்னிடம் வந்தாள். ஆனால் போலீசாரால் செய்ய முடியாத உதவி அது. ஆகையால் உன்னிடம் அனுப்புகிறேன். முடிந்ததைச் செய்.

அன்புடன்,
தணிகாசலம்.

படித்தபின் அவன் முகத்தை பார்த்தாள். உணர்ச்சி யற்று இருந்தது.

''சரி, சொல்லுங்கள்'' என்றான். ரேணுகா தயங்கி னாள். ''கொஞ்சம் நீளமான விஷயம். உங்களுக்கு வேறு வேலை... சாப்பாடு...'' பக்கத்து அறைகள் சாத்தியிருந்தன. ஓட்டலில் சாப்பிடுகிறவன் போலும் வீட்டில் வேறுயாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

''சாப்பாடெல்லாம் ஆகிவிட்டது.'' அவன் பாண்ட் பையிலிருந்து சிகரெட் பெட்டியும் லைட்டரும் எடுத்தான் ''உங்களுக்கு ஆட்சேபமில்லையே?'' என்றான் சிகரெட்டைக் காட்டி.

''இல்லை. நீங்கள் தாராளமாய்ப் பிடியுங்கள்'' என்றாள் ரேணுகா. ஆனால் இரண்டு நாசித் துவாரங்களின் வழியாக நீரோடை மாதிரி சர்ரென்று புகை வெளிப்பட்ட போது, ஏன் அனுமதித்தோம் என்று வருந்தினாள். உயர்ந்த ரகமாயிருக்கும் என்று எண்ணியிருந்தாள். படுமட்டமான சிகரெட்.

அவன் இன்னொரு தரம் புகையை இழுத்தான். ''சொல்லுங்கள்'' என்றான். ஏனோ ஓர் எச்சரிக்கையும் சேர்த்துக் கொண்டான்: ''பெயர்களையெல்லாம் சொல்ல வேண்டாம். விஷயத்தை மட்டும் சொல்லுங்கள்.''

''எங்கே ஆரம்பிப்பது, என்னென்ன சொல்வது என்றே தெரியவில்லை'' கையைப் பிசைந்து கொண்டு பேசினாள் ரேணுகா. ''இன்றைக்கு ஒரே நாளைக்குள் எனக்கு எத்தனை குழப்பங்கள்! நானும் என் அக்காவும் காலேஜில் படிக்கிறோம். நான் ஒரு பெண்கள் பள்ளிக் கூடத்தில் ஆசிரியையாக இருக்கிறேன். அக்காவுக்கு, மவுண்ட்ரோடில் ஒரு கம்பெனியில் ரிஸப் ஷனிஸ்டு வேலை. வேலை செய்து தான் சாப்பிட வேண்டும் என்ற நிலை இல்லை. எங்கள் அப்பா குழ-''

''பெயர் வேண்டாமென்று சொன்னேனே?''

''எங்கள் அப்பா பெரும் பணக்காரர். தஞ்சாவூர் ஜில்லாவில், பாபனாசம் பக்கத்திலே ஏராளமான நிலம் இருக்கிறது. இங்கேயும் இரும்பு வியாபாரம். எங்கள்

இரண்டு பேருக்கும் வீட்டோடு சும்மா உட்கார்ந்திருக்கப் பிடிக்காததால் வேலைக்குச் சேர்ந்தோம்.''

''அம்மா?''

''இல்லை. எனக்குப் பத்து வயதாகும் போதே இறந்து விட்டாள். அப்பாவுக்கு நாலு வருஷமாய்ப் பக்க வாதம். படுத்த படுக்கைதான். இரண்டு நர்ஸ்கள் பகலுக்கு ஒருத்தி இரவுக்கு ஒருத்தி அமர்த்தியிருக்கிறோம் அவரைக் கவனித்துக் கொள்ள, பதினைந்து இருபது நாள் முன்பு, அக்காவுக்குத் தொண்டைக் கட்டு ஏற்பட்டு...''

''ரொம்ப அற்பமான தகவல்களை யெல்லாம் விட்டு விடலாம்'' என்றான் அவன்.

''இதுதான் முக்கியமான தகவல். என் அக்காவுக்கு ரொம்ப ரொம்ப இனிமையான குரல். அவள் ஆபீசில் அவளுக்குக் குரலழகி என்று கூடப் பெயராம். எந்தச் சினிமாவுக்குப் போனாலும் வீட்டுக்கு வந்ததுமே பாட்டுக் களைப் பாடிக்காட்டுவாள். அப்படிப்பட்டவள் தொண்டை கட்டிக் கொண்டு இரண்டு நாள் அவதிப்பட்டாள். வற்புறுத்தி ஒரு டாக்டரிடம் அழைத்துப் போனேன், டாக்டர் பா-''

''பெயர்!'' என்று அவன் நினைவூட்டினான்.

''அந்த டாக்டர் என்னோடு கல்லூரியில் படித்தவர். எம்.பி.பி.எஸ்.பாஸ் செய்து நர்ஸிங் ஹோம் கட்டியிருக் கிறார். அவன் தான் அக்காவை பரிசோதித்தார். தொண்டையில் சதை வளர்ந்திருக்கிறது, ஒரு சின்ன ஆபரேஷனில் சரியாகி விடும் என்றார். அக்காவுக்கு விருப்பமே இல்லை. நான்

தான் கட்டாயப்படுத்தினேன். போன திங்களன்று ஆபரேஷன் நடந்தது. நாலு நாள் நர்ஸிங்ஹோமில் இருந்து விட்டு இன்றுதான் வீடு திரும்பினாள்.''

''தொண்டை?''

''அதுதான் சரியாகவில்லை. கிசுகிசுவென்று பேசுகிறாள். குரலே கிளம்பவில்லை என்கிறாள். கஷ்டப் பட்டு, உரக்கக் கத்தினால் - அப்பா! கர்ணகடூரமாய்ச் சத்தம் வருகிறது. அக்கா மிகவும் மனமொடிந்துவிட்டாள். வெளியில் யாருடனும் பேசவே அவமானமாயிருக்கிறதாம். தற்கொலை செய்து கொள்ளலாம் போலிருக்கிறது என்கிறாள். எவ்வளவோ சிரிப்பும் குறும்பும் கும்மாளமுமாயிருந்த அக்கா அடி யோடு மாறிவிட்டாள்.''

''அப்புறம்?''

''அக்கா விஷயம் இன்னொன்றும் இருக்கிறது. சொல்லிவிடுகிறேன்.''

''சீக்கிரமாய்.''

''இரண்டு நாள் முந்தி நர்ஸிங்ஹோமுக்குப் போயிருந்தபோது ஒரு சைனாக்காரனைப் பார்த்தேன்.''

''சைனாக்காரனா!''

ஆமாம். அசல் சீனன். குள்ளமாய், மஞ்சளாய், தொங்கும் மீசையோடு இருந்தான். நர்ஸிங்ஹோமிலிருந்து வெளியே போய்க் கொண்டிருந்தான். டாக்டருடைய பேஷண்டு களில் சைனாக்காரன்கூட உண்டா என்று ஒரு நர்ஸைக் கேட் டேன். 'எங்கள் பேஷண்ட் இல்லை. உங்கள் ஸிஸ்டரைத் தான் பார்த்துவிட்டுப் போகிறான். அடிக்கடி வருகிறானே இங்கு?' என்றாள். அக்காவுக்கு ஒரு சைனாக்காரனிடம் போய் என்ன சினேகம்?''

''வயதென்ன இருக்கும் அவனுக்கு?''

''ஐம்பது இருக்கலாம்.''

''அக்காவிடம் கேட்டீர்களா?''

''கேட்டேன். 'உனக்கென்ன அதைப் பற்றி?' என்று கோபித்துக் கொண்டாள். பிறகு நான் கேட்கவில்லை.''

ரேணுகா மௌனமாயிருந்தாள். அவன் தூண்டினான்: ''சொல்ல வேண்டியதெல்லாம் முடிந்து விட்டதா?''

''இல்லை. முக்கியமான விடிஷயத்துக்கு இனிமேல் தான் வரப்போகிறேன்'' என்றாள் அவள். ''இன்று காலை, அப்பாவைப் பார்ப்பதற்காக ஒரு கிழவர் வந்திருந்தார். கிராமத்திலே பட்டாமணியம். அங்கே ஒரு வழக்கைப் பற்றிச் சொலவ்தற்காக வந்திருந்தார். பெரிய மைனர், சின்ன மைனர் என்று இரண்டு சகோதரர்கள். அவர்களுக்குள் பாகப் பிரிவினை ஏற்பட்டிருக்கிறதாம். பரம்பரை பரம்பரை யாக ஒரே குடும்பமாக இருந்தவர்கள் பிரிந்து விட்டார்கள். ஆயிரம் ஏகரா நிலத்தை நியாயமாகப் பிரித்தாகிவிட்டது. ஒரே ஒரு பொருள் விஷயத்தில் தகராறு ஏற்பட்டது. அது தான் வைர முருகன்.''

''வைர...?''

''வைர முருகன் என்றேன். தங்க விக்கிரகம். உள்ளங்கை அகலமிருக்கும். முழுத் தங்கம், மேனி முழுவதும் வைரம் இழைத்தது. இருபது, முப்பது லட்சம் ரூபாய் பெறுமான முள்ளது. அதை யார் வைத்துக் கொள்வது என்று இரண்டு சகோதரர்களுக்குள் தகராறாம்.''

''பெறுமானத்தை மதிப்பிட்டு, பணம் ஒருவருக்கு, விக்கிரகம் ஒருவருக்கு என்று பிரித்துக் கொள்ள வேண்டியது தானே?''

''நாம் சொல்லலாம். அவர்கள் ஒப்புக் கொள்ள வேண்டுமே?'' முதன் முறையாக ரேணுகா புன்னகை செய்தாள். ''இருவருமே விக்கிரகம் தான் வேண்டு என்கிறார்கள். பல தலைமுறைகளாக, குடும்பத்தின் மூத்த பிள்ளை தான் அதற்குப் பூசை, நைவேத்தியங்கள் நடத்துவது வழக்கமாம். அந்தப் பிரகாரம் தன்னிடம் தான் வைர முரகன் இருக்க வேண்டும் என்கிறார் பெரிய மைனர். அப்படியொன்றும் வழக்கம் கிடையாது, தன்னிடமும் இருக்கலாம் என்று வாதாடுகிறார் சின்ன மைனர். யாருக்கு உண்மையான பாத்தியதை என்கிற விவகாரம் இப்போது கோர்ட்டுக்குப் போயிருக்கிறது.''

''இதைச் சொல்லவா அந்தப் பட்டாமணியம் வந்தார்? உங்கள் அப்பாவுக்கு இதிலே என்ன சம்பந்தம்?''

''பெரிய மைனர், சின்ன மைனர் இரண்டு பேருக்கும் எங்கள் அப்பாவிடம் மதிப்பு உண்டு. நம்பிக்கை உண்டு. வழக்கு முடிவாகிற வரையில், அந்த வைர முருகனை அப்பாதான் வைத்திருக்க வேண்டுமாம். இரண்டு பேரும் சொல்லிவிட்டார்கள்.''

''அப்படியானால்-''

''பட்டாமணியம் அதை எடுத்து வந்திருந்தார். அப்பாவிடம் கொடுத்தார். நானும் பார்த்தேன். அப்பப்பா! என்ன கண்ணைப் பறிக்கும் ஜொலிப்பு! வீடு முழுவதும் விளக்குப் போட்ட மாதிரி பிரகாசம்!''

''இப்போது உங்கள் வீட்டில் தான் அது இருக்கிறதா?''

''இருக்க வேண்டும்.'' தலையைக் குனிந்து, தன் காலையே பார்த்தபடி சற்று நேரம் பேசாதிருந்தாள் ரேணுகா.

''அப்பா வைர முருகனை வாங்கி, 'இந்தா, உள்ளே வை' என்ற அக்காவிடம் கொடுத்தார். அவள் அதை ஒரு பெரி தாகவே மதிக்கவில்லை. அலட்சியமாக வாங்கிக் கொண்டு போனாள். பீரோவிலோ அலமாரியிலோ வைத்திருக்கி றாள் என்று நினைக்கிறேன். அக்காவுக்கு எப்போதுமே ஜாக்கிரதை போதாது. அதனால் தான் அவள் பாங்க் பாஸ் புத்தகத்தைக் கூட நான் பார்க்க முடிந்தது.''

''என்றைக்கு?''

''அதுவும் இன்று சாயந்தரம் தான். மேஜை மீது கிடந்தது அவள் பாஸ் புத்தகம். இரண்டு பேருமே தனித் தனியாய் அக்கவுண்ட் வைத்திருக்கிறோம். பாங்க்கில் எங்கள் சம்பளத்தை அப்படி அப்படியே கட்டிவிடுவோம். எங்கள் செலவு பூரா வீட்டுப் பணத்தில் அப்பாவின் பணத்தில் தான். அவள் கணக்கில் எவ்வளவு இருக்கிறது என்று எனக்குத் தெரியாது. இன்று பாஸ் புத்தகம் வெளியே கிடந்ததால் பிரித்துப் பார்த்தேன். தூக்கிவாரிப் போட்டது?''

''ஏன்? லட்சக் கணக்கில் இருந்ததோ?''

''நேர் எதிர். பத்தாயிரத்து முன்னூறு வரையில் போனவாரம் இருந்திருக்கிறது. இரண்டு நாள் முன்பு பத்தாயிரம் ரூபாய் வாங்கியிருக்கிறாள். எதற்காக? ஏன்? அவ்வளவு பெரிய செலவு என்ன நேரிட்டிருக்கும்? யாருக்குக் கொடுத்திருப்பாள்? எனக்கு ஒரே திகைப் பாயிருந்தது.''

''முடித்து விட்டீர்கள் என்று நினைக்கிறேன்'' அவன் எழுந்து கொண்டான்.

''எங்கள் வீட்டு நிலைமை, அமைதியாயும், இன்ப மாயும் இருந்தது போய் விட்டது. அப்பாவோ கை கால்

கூட அசைக்க முடியாத பாரிசவாயு நோயாளி. அக்காவோ குரலை இழந்து, தற்கொலை செய்து கொள்ளப் போகிறேன் என்று சொல்லுமளவுக்கு மனம் வெறுத்திருப்பவள். அவளுக்கு ஒரு சைனாக்காரனின் சிநேகம் வேறே. இந்த நிலைமையில், முப்பது லட்சம் ரூபாய் பெறுமான முள்ள வைர முருகனின் விக்கிரகம் எங்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்திருக்கிறது. எல்லாவற்றையும் நினைத்துப் பார்த்தேன். ஏதோ விபரீதம் நிகழப் போகிறது என்ற தோன்ற ஆரம்பித்து விட்டது. என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலம் எங்கள் குடும்ப நண்பர். அவரிடம் போய் விஷயத்தைச் சொன்னேன். உதவி கேட்டேன்.''

''என்ன உதவி?''

''ஆபத்து வந்தால் எதிர்க்க வேண்டும். நெருக்கடி ஏற்பட்டால் சமாளிக்க வேண்டும். அதற்கேற்ற உடலுறுதியும் மன உறுதியும் மூளையும் உள்ள ஓர் ஆண்பிள்ளை எங்கள் வீட்டோடு இருந்தால் தேவலை என்றேன்.''

''அவர் என்ன சொன்னார்?''

''முதலில் எல்லாம் வீண் பயம், காரணமில்லாத அச்சம் என்று சிரித்தார். நான் திரும்பத் திரும்பச் சொன்னேன். பிறகு யோசித்தார். போலீஸ் இலாகாவிலிருந்து ஓர் ஆள் அனுப்பி வைப்பது சுலபம். ஆனால் நாலு பேருக்குத் தெரியாமற் போகாது. யார் என்ன சதி செய்தாலும் கமுக்கமாய் அமுக்கிவிட வேண்டும். அதற்கேற்றவன் என் சிநேகிதன் ரமணன்தான்' என்றார். உங்களுக்கு கடிதமும் கொடுத்தார்.''

''அவன் புன்னகை பூத்தான். ரேணுகா தொடர்ந்தாள். ''நீங்கள் எதற்கும் துணிந்தவராம். போலீஸ் இலாகாவின்

வேலைகளைக் கூடத் தனிப்பட்ட முறையில் பார்க்கிற டிடெக்டிவாம்.''

சொற சொறப்பான மோவாயை அவன் தடவிக் கொண்டான். இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்தான். ''ஆகா, நான் உங்களுடன் வந்து இருக்க வேண்டுமென் கிறீர்கள்?''

''ஆமாம், கொஞ்ச நாளைக்குத் தான். நான் பயப்படு வதற்குக் காரணம் எதுவுமில்லையென்று தோன்றினால் திரும்பிப் போய் விடலாம்.''

''நான் யாரென்று உங்கள் அப்பாவோ அக்காவோ கேட்டால்?''

''என் தோழியின் அண்ணன் என்று சொல்லி வைக்கிறேன். பம்பாயிலிருந்து வந்திருக்கிறீர்கள், ஒரு பேட்டிக்காக சில நாள் மதறாசில் தங்கி, ஊர் சுற்றியும் பார்க்கப் போகிறீர்கள். அந்த மாதிரி சொல்லி வைக்கிறேன்.''

''சரி, போகலாம், வாருங்கள்,'' என்றான் அவன்.

அவளுக்கு ஒரே ஆச்சரியம். இவ்வளவு சுலபமாய் ஒப்புக் கொள்ளுவானென்னு எதிர்பார்க்கவேயில்லை. ''இப் படியேவா கிளம்புகிறீர்கள்?''

''ஏன்? அதற்கென்ன?''

''இல்லை, கையில் ஒரு சூட் கேஸாவது வேண்டாமா?''

''ஆமாம், ஆமாம்.'' சிகரெட்டை அணைத்துவிட்டு, ஸ்டாண்டிலிருந்த இரண்டொரு உடைகளை ஸூட்கேஸில் அடைத்துக் கொண்டான். கதவைச் சாத்திப் பூட்டினான்.

''வாருங்கள்,'' என்று மாடிப்படியில் இறங்கினான்.

அவர்கள் மாடியிலிருந்து இறங்கிச் சென்ற சில நிமிடங்கள் கழிந்திருக்கும். இருவரும் பேசிக் கொண்டிருந்த அறைக்குப் பக்கத்தில் இன்னோர் அறை இருந்தது. அங்கே கடமுடா என்ற சத்தம் கேட்டது. யாரோ உருளுகிற சத்தம் முண்டி மோதுகிற ஓசை.

கை கால் கட்டப்பட்டு, வாயிலும் துணி அடைக்கப் பட்டு, நாற்காலியோடு பிணைக்கப்பட்டிருந்த ஓர் உருவம் தான் அப்படித் திமிறிக் கொண்டிருந்தது தன்னை விடு வித்துக் கொள்ள.

அவன் தான் ரமணன். அஸிஸ்டெண்ட் கமிஷனர் தணிகாசலம் ரேணுகாவுக்குச் சிபாரிசு செய்த, ரேணுகா சந்தித்திருக்க வேண்டிய, அசல் நபர்.



## 2

கையிலும் கட்டு காலிலும் கட்டு; வாயிலும் கட்டு. ரமணனின் அறிவு மட்டும் தான் கட்டுப்படாம லிருந்தது.

பைத்தியக்காரத்தனமாய் அந்தப் பெண் எவனையோ அழைத்துக் கொண்டு போகிறாளே! அதுவும் ஒரு முதல் நம்பர் அயோக்கியனை! அவளைத் தடுத்து நிறுத்த வேண்டுமே! அதல்லவா முதல் வேலை என்று நினைத் தான் ரமணன். அந்த நினைப்பு அவனைச் சுறுசுறுப் படையச் செய்தது.

இருட்டில், தவளைத் தத்தலாக நகர்ந்து நகர்ந்து சுவரை அடைந்தான். முதுகைச் சிராய்த்துச் சிராய்த்து ஆராய்ந்தான். ஒரு மின்சார ஒயர் பாதை தட்டுப்பட்டது. முதுகால் உரசிய வண்ணமே நகர்ந்தான். சுவரில் பதிந்திருந்த 'காலிங் பெல்'லுக்கு அது அழைத்துச் செல்லும் என்று அவனுக்குத் தெரியும்.

'காலிங் பெல்' பொத்தான் தட்டுப்பட்டது. நெற்றியால் அழுத்தினான். கிர்ரென்று மாடிப்படியில் அடிக்கும். கீழ் வீட்டு ரொந்தாவில் தூங்கிக் கொண்டிருக்கும் அவனுடைய வேலைக்காரன் அப்பாவுவை எழுப்பும்.

ஆனால் -

வெளியே எவ்வித சத்தமும் காணோமே? மீண்டும் அழுத்தினான். அழைப்பு மணி ஊமையாக இருந்தது.

ஊகித்து விட்டான் ரமணன். வந்தவன் - அல்லது, சற்று முன் போனவன் - கெட்டிக்காரன். போகும் போது மெயின் ஸ்விட்சை 'ஆஃப் செய்துவிட்டுப் போயிருக்கிறான்.

அது விசாலமான அறை. ரமணனின் அலுவலக அறை. காற்றோட்டத்துக்காக ஜன்னல்கள் உண்டு; ஆனால் அடைத்திருந்தன. விசிறிகள் உண்டு; ஆனால் சுழல வில்லை. புழுக்கம் இருட்டு, தனிமை.

கிணு கிணு கிணு என்று டெலிபோன் கூப்பிட்டது. யாரோ அழைக்கிறார்கள். ரமணனுக்கு உற்சாகம் பிறந்தது. 'உள்ளங்கையைத் தெரிகிற மாதிரி தெரியும்' என்பார்களே ஆங்கிலத்தில், அது போல் தனது அறையின் இரண்டு இடுக்குகள், இருப்பு எடுப்புக்கள் அனைத்தும் அவனுக்குத் தெரியும்.

மறுகோடியில் உள்ள முக்காலி மீது டெலிபோன் இருக்கிறது. இங்கிருந்து பத்தடி தூரம்.

சுவரையே ஆதாரமாகக் கொண்டு நகர்ந்தான். டெலி போன் மணி அடித்துக் கொண்டேயிருந்தது. உருளுவது இன்னும் சுலபம் எனத் தோன்றியது. உருண்டான். இதோ டெலிபோன் எட்டியிருப்பான்.

அந்த வினாடி பார்த்து, நின்று விட்டது மணியோசை. யாரோ அவனைக் கூப்பிட்டுக் கூப்பிட்டுச் சலித்துப் போய், வைத்து விட்டார்கள். இன்னும் ஐந்து வினாடி பொறுத் திருக்கக் கூடாதோ? பொறுமை இல்லை.

இத்தனை நேரம் அசைந்ததிலும் உருண்டதிலும் ஒரு நன்மை ஏற்பட்டிருந்தது. வாய்க்குப் போட்டிருந்து கட்டுத் தளர்ந்து நழுவிவிட்டது. இப்போது பேச்சு சுதந்திரம் கிடைத்து விட்டது.

''அப்பாவு! அப்பாவு!'' என்று கத்திப் பார்த்தான் ரமணன்.

கிட்டத்தட்ட ஸௌண்ட் ப்ரூப் செய்தாற்போன்ற அறை அது. கதவுகளைச் சாத்திய பிறகு வெளியே சத்தம் கேட்பது அரிது. அப்பாவுவையும் காணோம், குப்பாவுவை யும் காணோம்.

திடீரென்று இன்னொரு யோசனை டெலிபோனில் மற்றவர் நம்மைக் கூப்பிட்டதுபோல் நாமும் மற்றவரைக் கூப்பிடலாமே?

முழுங்காலின் கீழே காலைக் கட்டியிருந்தான் வந்தவன். ஆனால் பாதம், விரல்கள் சுதந்திரமாக இருந்தன. டெலிபோனி லிருந்து தொங்கிக் கொண்டிருந்த ஒயர்களை இழுத்தான்.

முதலில் ரிஸீவர் மட்டும் விழுந்தது. பிறகு டெலிபோனும் விழுந்தது. கீழே மெத்தென்ற விரிப்பு இருந்ததால் பொத் தென்றுதான் விழுந்தது. இருந்தாலும் கொஞ்சம் சந்தேகம். ஒருகணித்துப்படுத்து, ரிஸீவரின் அருகில் காதை வைத்துக் கேட்டான். கொர்ரென்று டயல் டோன் கேட்டது. நல்ல வேளை, டெலிபோன் பழுதாகி விடவில்லை. தோளின் இடுக்கில் ரிஸீவரைக் கவ்விக் கொண்டான்.

மறுபடி நிமிர்ந்து உட்கார்ந்தான். வலது கால் பெரு விரலை டெலிபோன் டயல் மீது வைத்து 'நெகா' பார்த்துக் கொண்டான். மனக் கண்ணாலும் பார்த்தான். அது பழங் காலத்து டெலிபோன். மேல்கோடி துவாரம் ஒன்று; பிறகு இரண்டு, மூன்று; கீழ்க் கடைசியில் சைபர்.

பெருவிரலால் நம்பர்களைச் சுழற்றினான்.

''பிலியர்ட்ஸ் கிளப்,'' என்று பதில் வந்தது.

''மிஸ்டர் கல்யாணம் ப்ளீஸ்,'' என்றான் ரமணன்.

சற்று நேரத்தில் ''கல்யாணம் ஸ்பீக்கிங்,'' என்ற குரல் கேட்டது.

''நான் தான் ரமணன்,'' என்று சொன்னவுடனே மறு முனையில் ஒரே சீறல்.

''ஏண்டா டேய், கிளப்புக்கு வருகிறவனா நீ? கப்கப்பாய் டீயைக் குடித்துக் கொண்டு நாங்கள் மூன்று பேர் காத்திருக்கிறோம்...''

ரமணன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டான். அவன் இருக்கிற நிலையில் காலால்தான் பிலியர்ட்ஸ் ஆட வேண்டும்! அமைதியாகச் சொன்னான்! ''ஒரு கத்தி, இரண்டு மூன்று

சாவிக் கொத்து, டார்ச் லைட் இந்த மூன்றும் எடுத்துக் கொண்டு உடனே என் ரூமுக்கு வா. வேறு யாரையும் அழைத்து வரவேண்டாம்.''

''என்னது, என்னது! சாவிக் கொத்து, கத்தி, டார்ச் லைட்டா - ஏன்?''

''பூட்டியிருக்கிற கதவைத் திறக்கச் சாவிக் கொத்து. மெயின் ஸ்விட்ச் இருக்குமிடம் தெரிந்து ஆன் பண்ணு வதற்கு டார்ச் லைட். என் கை கால் கட்டுக்களைப் பிரிப் பதற்குக் கத்தி.''

கல்யாணம் அவசரமாக டெலிபோனை வைப்பது கேட்டது. கால் மணியில் வந்து விடுவான். அதிகம் போனால் அரை மணி.

சுவரில் சாய்ந்திருப்பதே இதமாக இருந்தது ரமணனுக்கு.

ஓட்டலில் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்கு வந்தது முதல் நடந்த நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாக நினைவு வந்தன.

ஒரு முட்டாள்தனம் — சீட்டியடித்துக் கொண்டே மாடியில் ஏறியிருக்கக்கூடாது. வந்திருந்தவன் அதனால் தான் எச்சரிக்கை அடைந்து விட்டான். தயாராகவும் காத்திருந்து விட்டான்.

வெளியே போகையில் விளக்குகளைப் போட்டு விட்டுச் செல்வதுதான் ரமணனின் வழக்கம். சாப்பாட்டுக் காகப் போனபோதும் அப்படித்தான் செய்திருந்தான்.

இப்போது ஏன் அணைந்திருக்கிறது? அந்த எண்ணம் தோன்றியதும் சந்தேகம் உதித்தது. சீட்டியை நிறுத்திக் கொண்டான். ஓசைப் படாமல் படிப்படியாக ஏறினான்.

சர்க்கஸ் ஊஞ்சலில் தொற்றுவிக்கிறவன் மாதிரி பூட்டு ஒற்றைக் காலில் தொங்கியது. கதவு திறந்திருந்தது. உள்ளே இருள். வந்திருப்பவன் யார்? திருடனா? ரமணனிடம் திருடும்படி எதுவும் கிடையாது. ரொக்கம் கொஞ்சமே. அதுவும் பாங்கில்.

சடக்கென்று கதவைத் தள்ளிக் கொண்டு பாய்ந்தான் ரமணன். கதவின் பின்புறம் மறைந்திருப்பவன் சுவரோடு சுவராய்ச் சட்டினியாகட்டும் என்று நினைத்தான்.

வந்தவன் முன் யோசனை உள்ளவன். முந்திக் கொண்டு விட்டான். ரமணனின் தலை உட்புறம் வந்ததுமே, பிடரியில் ஒன்று போட்டான். கையே இரும்பா, அல்லது இரும்புத் தடியா?

''ஐயோ! அம்மா!'' என்று அலறிக் கொண்டு விழ வில்லை ரமணன். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் அவன் கத்துவதே கிடையாது. அதனால் இரண்டு நன்மைகள் விளைவது வழக்கம். ஒன்று, கூச்சலை நிறுத்துவதற்காக மேலும் மேலும் அவன் அடிப்பான் அதிலிருந்து தப்பலாம். இரண்டு, மயங்கி விழுந்துவிட்டானென்ற எண்ணத்தோடு, தாக்கியவன் அடுத்த வேலைகளில் முனைவான். அந்த நேரத்தில் கண்ணையும் காதையும் ரகசியமாய்த் திறந்து வைத்துக் கொண்டு அவனைக் கண்காணிக்கலாம். இந்தப் தந்திரப்படி-

அடி விழுந்ததும், தொபேலென்று ரமணன் சுருண்டு விழுந்தான். மறுவினாடி அவன் இவனைத் தரதரவென்று பக்கத்து அறைக்கு இழுத்துச் சென்றான். அறை மூலையில் இருந்த கயிற்றை எடுத்து, ரமணனின் கையையும் காலையும்

வாயையும் கட்டிப் போட்டுவிட்டு கதவைச் சாத்திக் கொண்டு திரும்பினான்.

சும்மா சொல்லக் கூடாது. உயிர் போகிற வலிதான். ஆனாலும் கூச்சல் போடாமல் காத்திருந்தான் ரமணன். வந்தவன் என்ன எடுக்க நினைத்தான்? விளக்கைப் போடாமலே எதை எதையோ உருட்டும் சத்தம் கேட்டது. அதற்குள்-

இஸ்ஸென்று 'பஸ்'ஸரின் ஒலியும், அந்தப் பெண்ணின் பிரவேசமும் நிகழ்ந்தன. தொடர்ந்து அவளுடைய விருத் தாந்தமும் தெரிந்தது.

யாரந்தப் பெண்? ரமணனை முன்பின் பார்த்தி ராதவள். அவன் கெட்டிக்காரன். ஒரு வேளை ரமணனுக்கு நினைவு திரும்பி, பேச்சைக் கேட்டுக் கொண்டிருப்பானோ என்று, பெயர்களையெல்லாம் கத்திரித்து விட்டான்.

அப்படியும் தப்பி வெளி வந்தவை அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலம் என்ற ஒரு பெயர்; குழ என்று ஆரம்பிக்கும் இரும்பு வியாபாரியின் பெயர் இன்னொன்று.

இதோ மாடிப்படியில் சத்தம். நண்பன் கல்யாணம் வருகிறான். பூட்டைத் திறக்கான். உள்ளே நுழைகிறான்.

விளக்குப் பளீரென்ற எரிந்தது. ரமணனின் அறைக்கும் வாசல்புறத்து அறைக்கும் இடையே இருந்த மொற மொறப்புக் கண்ணாடிகள் மின்னின. அடுத்த நிமிடம் கல்யாணம் உள்ளே வந்தான்.

''காப்பாற்றக் கூடிய சந்தர்ப்பங்களில் காப்பாற்றி விடுகிறேன். ஆனால் முடியாமலே போகக் கூடியதும் ஒன்றுவரும்.'' முணுமுணுத்தபடியே கல்யாணம் கயிற்றைப்

பிரித்தான். ரமணனின் அபாயகரமான வேலைகள் அவனுக்குப் பிடிப்பதில்லை.

''தாங்ஸ் கல்யாணம்.'' ரமணன் கால்களை ஒரு வினாடி பிடித்துவிட்டுக் கொண்டான். பிறகு ஸ்பிரிங் போலக் குபுக்கென்று எழுந்து கொண்டான்.

''கல்யாணம், என்ன நேர்ந்தது. தெரியுமா?''

கல்யாணம் நிற்கவில்லை. படியிறங்கிக் கொண்டிருந்தான். ''நீ ஜேம்ஸ் பாண்டாகவே இரு. ஜேம்ஸ் பாண்டின் நண்பன் நான் என்பதை மெட்ராஸ் ரௌடிகளுக்கெல்லாம் காட்டிக் கொள்ள எனக்க ஆசையில்லை.''

கல்யாணம் போய்விட்டான்.

குறுந்தாடியை உருவியவாறு அறையை நோட்டம் விட்டான் ரமணன். அலங்கோலமாக இருந்தது. வந்தவன் எதையோ தேடியிருக்கிறான். எதை? அதை அடையுமுன், அந்தப் பெண் குறுக்கிட்டு விட்டாள். யாரவள்?

படியிறங்கிக் கீழே வந்தான். தெருவில் மயான நிசப்தம்.

நடையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த அப்பாவை எழுப்பினான்.

கொட்டாவி விட்டுச் சோம்பல் முறித்துக் கொண்டே, ''அடடாடாடா, ஏறா இதி தொல்ல? மனிஷி நித்தர போயே தனிகே மால்லதே!'' என்றான் அப்பாவு.

''வெளியே போகிறேன். மாடியில் போய்க் காவல் இரு.''

கண்ணைத் துடைத்துக் கொண்டு கலக்கம் தெளியவே அப்பாவுவுக்குப் பல நிமிடங்கள் பிடித்தன. ''பூட்டு உடைந்து போயிருக்கிறது. அதனால் தான் உன்னை இருக்கச் சொன்னேன்,'' என்றான் ரமணன்.

அப்பாவுவின் அப்பாவிக் கண்கள் பேந்தப் பேந்த விழித்தன. மருண்டு உருண்டன.

''என்னவோ ஸார்! எப்புடுனு மாதலருகுதான் டேஞ்சர். மீரு குஷிகா தப்பிச்சிகினி போத்தாரு.''

ரமணன் தெருவில் நடந்தான். அமைதியான முன்னிரவு நேரம். பதினொரு மணிக்குள் தான் இருக்கும். அதற்குள் இவ்வளவு பெரிய ஓசையின்றிச் செய்துவிட்டு ஒருவன் நழுவியிருக்கிறானே!

நாலாவது வீட்டினருகே ஒரு தகர ஷெட். திறந்தான். உள்ளே அவனுடைய மோட்டார் பைக் இருந்தது. இரண்டு உதையில் கிளம்பிவிட்டது.

தலையில் வாங்கிக் கொண்ட அடி ரத்தக் காயம் இல்லை. ஆனால் முதல் தரமாய்ப் புடைத்திருக்க வேண்டும். சின்ன வயசில் தந்திக் கம்பத்தில் டங்டங்கென்று கல்லால் அடித்து விட்டுக் காதை வைத்துக் கேட்பான். அந்த மாதிரி இப்போதும் மண்டைக்குள் டங்டங்கென்று கேட்டது.

பாண்ட் பையைத் தடவிப் பார்த்தான். இணை பிரியாத் தோழனான காரம் போட்ட வேர்க்கடலை இரண்டு மூன்று மிஞ்சியிருந்தது. வாயில் போட்டுக் கொண்டு [illegible] செட்டித் தெருவை நோக்கி வாகனத்தைச் செலுத்தினான். அஸிஸ்டென்ட் கமிஷனரின் வீடு அங்கே தான் இருக்கிறது. 'கடிதம் கொடுத்து அனுப்பினீர்களே,

யார் அந்தப் பெண்?' என்று ஒரே கேள்வி போதும். பூரா விவரமும் தெரிந்து விடும். தணிகாசலத்தின் புதிய பங்களாவின் வாசலில் பாராவுக்கு ஒரு போலீஸ்காரர் நின்றிருந்தார். அவர் கையை உயர்த்தியது தனக்கு வணக்கம் சொல்ல என்று ரமணன் முதலில் நினைத்தான். உள்ளிருந்து வரும் ஒரு போலீஸ் ஜீப்புக்காக என்று பிறகு தெரிந்தது.

அடடா! ஏ.ஸி. எங்கோ கிளம்புகிறாரே?

அவன் ஊகம் தவறு. ஜீப்பில் வந்தவர் அஸிஸ்டெண்ட் கமிஷனர் தணிகாசலம் அல்ல. அவருக்கும் அஸிஸ்டெண்டான வேறொருவர்.

''ஸார் இருக்கிறாரோ?'' உள்ளே கையைக் காட்டிக் கேட்டான் ரமணன்.

''நாகர்கோவிலுக்குப் போய்விட்டார்,'' என்று பதில் வந்தது.

''நாகர்கோவிலுக்கா?''

''ஆமாம். மாற்றலாகிவிட்டது. இன்று மாலை போய் விட்டார். இப்போது இங்கே இருப்பவர், புதுக் கமிஷனர்.''

ஜீப் போய்விட்டது. ரமணனன் சில நிமிடமங்கள் நின்றிருந்தான்.

அஸிஸ்டெண்ட் கமிஷனர் தணிகாசலம் ஒருவர் தான் அவனுக்குத் தெரிந்த ஒரே போலீஸ்ட அதிகாரி. தூரத்து உறவுகூட. துணிச்சலான இளைஞன் என்பதால் இவன் மீது அவருக்கு அக்கறை உண்டு. தனிப்பட்ட முறையில்

அவனுக்கு வேலைகள் கொடுப்பார். ''பேசாமல் போலீஸ் இலாகாவில் சேர்ந்துவிட்டேன்,'' என்று பலதரம் சொல்லி யிருக்கிறார். ரமணன் இணங்கவில்லை. ''யூனிபாரம் அணிந்தால் சுதந்திரம் பறிமுதல்,'' என்பது அவன் கட்சி.

தணிகாசலத்தை அவன் சந்தித்து ஒரு மாதம் இருக்கும். பார்த்திருந்தால் வேலை மாற்றலைப் பற்றிச் சொல்லியிருப்பார்.

ரமணன் நகர்ந்தான். நாலு கட்டிடம் தள்ளி ஒரு வெற்றிலை பாக்குக் கடை திறந்திருந்தது. ஒரு கிரஷ் குடித்தான். பத்து ரூபாய் நோட்டை நீட்டிச் சில்லறைக் காசுகளாக மாற்றிக் கொண்டான்.

அங்கிருந்து கிளம்பி, பிராட்வே முனையிலிருந்து பொது டெலிபோன் கூண்டுக்குள் புகுந்து கொண்டான். டெலிபோன் டைரக்டரி பெரும்பாலும் இருப்பதில்லை. அவன் அதிர்ஷ்டம் இருந்தது.

டெலிபோன் டைரக்டரியைத் திறந்து வைத்துக் கொண்டான். குழ - என்று ஆரம்பிக்கும் பெயர்களைப் புரட்டினான். அது ஆங்கில டைரக்டரி 'ழ' வரும் பெயர் ஒன்றுகூட இல்லை. 'குல' என்று வருகிற பெயர்களைப் பார்த்தான்: குலந்தைவேல். குலுந்தை பாண்டியன், குலந்தையன், குலந்தைசாமி - என்று மொத்தம் பதினொரு பெயர்கள் காணப்பட்டன.

பொறுமையாக ஒவ்வொன்றையும் டயல் செய்யத் தொடங்கினான்.

''நான் தான் பேசகிறேன்,'' ''வெளியிலே போயிருக் கிறார்,'' இப்படிப் பதில் வந்தால் உடனே போனை

வைத்து விடுவான். பாரிச வாயுவால் படுத்த படுக்கையாக இருப்பவர் இரண்டில் எதுவும் செய்ய முடியாது. தூங்குகிறார், சாப்பிடுகிறார், வேலையாயிருக்கிறார் - இது போன்ற இரண்டும் கெட்டான் பதில்கள் கிடைத்தபோது மட்டும், இன்னும் சற்றுத் தோண்ட வேண்டியிருந்தது. "நாங்கள் இங்கே தியேட்டரிலிருந்து பேசுகிறோம். நேற்று அவர் சினிமாவுக்கு வந்திருந்த போது..." என்று ஆரம்பிப்பான்; "சினிமாவுக்கு வந்தாரா? என்ன உளறுகிறீர்கள்?" என்று சீறல் வரும். வைத்து விடுவான்.

பதினொரு பெயர்களையும் பரிசோதித்து விட்டான். ரேணுகா என்ற பெண்ணின் பாரிச வாயுத் தகப்பனார் மர்மமாகவே மறைந்திருந்தார்.

வெறுப்புடன் பைக்கை உதைத்தான். ரோஷத்துடன் அது பாய்ந்தது. ஈ எறும்பற்ற சைனா பஜாரில் பறந்தான். தூங்கும் பிராட்வேயில் ஒடித்தான். மூடியிருந்த அண்ணா மலை மன்றத்தில் வளைத்தான். இருண்ட கோட்டை ஸ்டேஷனைத் தாண்டினான். ஓய்ந்து போன நர்ஸ் குவார்ட்டர்ஸில் திரும்பினான்.

யாரது அங்கே?

வேகத்தைக் குறைத்தான் ரமணன். மோட்டார் பைக்கைச் சாலையோரமாக நிறுத்திவிட்டு இறங்கினான்.

நர்ஸ்கள் தாங்களே சாலையைக் கடப்பதற்கு ஸ்விட்ச் போட்டுக் கொள்ளும் கம்பத்தை நோக்கி நடந்தான். வண்டிகளை நிறுத்துவதற்காக ஏற்படுத்தியிருந்த பொத்தானை ஏதோ செய்து கொண்டிருந்தாள் ஒரு நர்ஸ்.

ரமணன் கைக்கடியாரத்தைப் பார்த்தான். மணி பன்னிரண்டு. தானியங்கி சாலைவிளக்குகள் அணைந்து

வெகு நேரமாகியிருக்கும். சாலையிலும் போக்குவரத்துக் கிடையாது.

''என்னம்மா செய்கிறாய்?'' என்றான ரமணன். அவன் கேள்வியில் கண்டிப்பு இருந்தது. முரட்டுத் தனம் இல்லை.

அவர்கள் நின்றிருந்த இடத்தில் வெளிச்சம் போதாது. அவள் சட்டெனத் திரும்பினாள். விழியில் மிரட்சி. ''ஒன்று மில்லை, ஒன்றுமில்லை,'' என்று சங்கடத்துடன் சிரித்தாள். ''இது எப்படி வேலை செய்கிறது என்று எனக்குப் புரிவதே யில்லை. என் தோழிகள் பரிகாசம் பண்ணுகிறார்கள். இப்போது தான் டூட்டி முடிந்து திரும்பினேன். தெரிந்து கொள்ளலாம் என்று...''

''அதற்கு நல்ல நேரம் பார்த்தாய்!'' என்றான் ரமணன். ''பயங்கரமான ஹார்ட் ஆபரேஷன் நடைபெறும் போது, டாக்டர் பாலு சொல்வதை டாண்டாணென்று குறித்துக் கொள்கிறாய். ஆனால் இது தெரியவில்லை என்கிறாயே, மேரி?''

அவள் திடுக்கிட்டாள். அவனைக் கூர்ந்து கவனித் தாள். உடனே சிரித்தாள். பிலியர்ட்ஸ் கிளப்பில் அவனுடைய நண்பர், டாக்டர் பாலு. அவருடைய வார்டில் இருப்பவள் இவள்.

''பயந்தே போனேன், யாரோ கையும் களவுமாய்ப் பிடித்து விட்டார்களே என்று!'' என்றாள் அவள். ''இப்போது நான் டாக்டர் பாலுவின் கீழே இல்லை சார். டாக்டரம்மா நாமகிரியிடம் இருக்கிறேன். ஒரு வாரமாகிறது நியூராலஜி வார்டு,''

''நியூராலஜியா! சரி தான்!'' ரமணன் நகைத்தான். ''ஊரிலிருக்கிற அரைப் பைத்தியங்களெல்லாம் சினேகிதமாகி யிருக்குமே இப்போது!''

''நியூராலஜி என்றால் அது மட்டும் தானா, சார்? மூளைக் கட்டி, பாரிச வாயு...''

ரமணனுக்கு எதுவோ பளிச்சிட்டது.

''மேரி, ஓர் உதவி செய்வாயா?''

''கட்டாயம் சார். யாருக்காவது ஆஸ்பிடலிடில் அட்மிட்...''

''அதெல்லாமில்லை.'' குறுந்தாடியை நெருடிக் கொண்டு சொன்னான் ரமணன். ''டாக்டரைக் கேட்பாயோ, மற்ற நர்ஸ்களை விசாரிப்பாயோ எனக்குத் தெரியாது. டாக்டர் நாமகிரி வைத்தியம் பார்க்கிற டாப் பணக்காரர்கள் யார் யார் என்பதை விசாரித்துத் தெரிவிக்க வேண்டும் என்ன?''

''ஓ! நாளைக்கே சொல்கிறேன். உங்களுடன் எப்படித் தொடர்பு கொள்ளட்டும்?'' என்றாள் மேரி.

விஸிட்டிங் கார்டை அவள் கையில்கொடுத்தான் ரமணன். ''டாக்டர் பர்மிஷன் கிடைத்தால் நேரில் வா. இல்லா விட்டால் போன் பண்ணு.'' அவன் கண்கள் சிரித்தன. ''நீயே வந்தால் எனக்கு ரொம்ப சந்தோஷமாயிருக்கும்.''

''போங்கள் சார்!'' பளபளப்பும், செழுமையும் நிறைந்த மேரி ஒரு குலுக்கலுடன் ஓடிவிட்டாள்.

பைக்கில் தாவினான் ரமணன்.

அறைக்கு வந்ததும் தன்னைத் தாக்கியவனைப் பற்றி நினைவு ஓடிற்று.

அவன் சரியான அதிர்ஷ்டக்காரன். அவன் குட்டை உடைக்கக்கூடிய இருவர் அஸிஸ்டென்ட் கமிஷனரும், தானும் தான். ஒருவர் இப்போதைக்குச் சென்னைக்கு வர மாட்டார்தான்.

ரமணனுக்கு உற்சாகம் பிறந்தது. வந்தவன் யாரென்று இவனுக்குத் தெரியாது. அதேபோல் ரமணனின் முகத்தையும் இருட்டில் அந்த நபர் சரியாகப் பார்த்திருக்க முடியாது. ஆகவே...

''அப்பாவு!'' என்று முதுகில் தட்டினான் வேலைக்காரனை. ''நான் சொல்வதைக் கவனமாய்க் கேள்,'' என்றான். அடுத்த சில நிமிடங்களுக்கு ரமணனின் தாழ்ந்த குரல் மட்டுமே ஒலித்தது.

''அதி சரிண்டி அப்னே சேஸ்தானு,'' என்று தலையாட்டினான் அப்பாவு.

ரமணன் உதட்டைச் சுழித்துக் கொண்டான். முகத்தில் திருப்தி. மின்சார விசிறியைச் சுழல விட்டான். கட்டில் சட்டத்தின் மீது காலைப் போட்டுக் கொண்டு படுத்தான்.

சூழ்நிலையெங்கும் அமைதி. இனிமேல் இன்று இரவில் எதுவும் நடைபெறாது என்று எண்ணினான் ரமணன்.

யாரோ மாடிப்படியில் ஏறிவரும் ஓசை.



*சட்! கொஞ்சம்கூடச் சந்தர்ப்பம் தெரியாமல்!*

*ரமணன் திட்டியது தன் கட்டிலைத்தான். அதிலே தொமாலென்னு விழுங்கள்; துளியம் ஓசை கேட்காது. மெதுவாய் எழுந்திருக்கப் பாருங்கள் - நாலாயிரம் கிறீச்சுகள் பயமுறுத்தும்.*

*மாடிப்படியில் காலடியோசை கேட்டதும், ரமணன் எழுந்து கொண்டான்; இறங்கிக் கொண்டான். சின்னச் சின்ன தாகப் பல கிறிச்சுக்களை வெளியிட்டது அந்த மரக்கட்டில். மனதுக்குள் அதைச் சபித்தபடி வெளியே வந்தான். சுவ ரோடு சுவராக ஊர்ந்தான். மூச்சை அடக்கிக் கொண்டான். ஸ்லாக்கை மடக்கிக் கொண்டான்.*

*ரேணுகா என்கிற பெண்ணுடன் புறப்பட்டுப் போன பழைய திருடன் தான் திரும்பி வருகிறானோ? அப்படி யானால் எதற்காக இருக்கும்?''*

*ரமணனுடைய இருதய ஓசை, பழைய மாவு மெஷின் மாதிரி பிரம்மாண்டமாகக் கேட்டது. உருவம் ஒவ்வொரு படியாகத் தயங்கித் தயங்கித் தயங்கி... மேல்படிக்கு வந்ததும் நிற்கிறது. கவனிக்கிறது... ஆராய்கிறது...*

*சுவரில் அவனுக்கு மிக அருகில் ஒரு கையின் உருவம் தென்பட்டது. தென்பட்டது என்று சொல்வது கூடத் தவறு. சில சமயம், நம் மனத்துக்குத் தெரிவதில்லையா ஏதோ ஒன்று மிக நெருங்கினாற்போல் இருப்பதாக? அந்த மாதிரி ரமணன் உணர்ந்தான்.*

தாமதித்தால் நழுவி விடக்கூடும்.

சரேலெனத் தன் வலது கையால் அந்தக் கையைப் பற்றினான். இடது கையினால் தலைக்கு மேலிருந்த விளக்கு ஸ்விட்சைத் தட்டினான்.

''திருடன்! ஐயோ திருடன்!'' என்ற ஒரு பெண்ணின் கூச்சல்! பிடித்த கை ஒரு இளம் மங்கையினுடையது என்ற ஸ்பரிசம்; குபுக்கென்று பாய்ந்த விளக்கின் ஒளி; கண்ணிமைக்கும் நேரத்துக்குள் இந்த மூன்றும் அயர வைத்தன ரமணனை.

பிடியை உடனேயே நழுவ விட்டான். ''திருடனா? எங்கே? ஏ தோவகா ஒச்சி நாடு?'' என்று பலவாறு கத்திக் கொண்டு அப்பாவு மாடிக்கு ஓடி வந்தான். நல்ல வேளை, வேறு யாரும் எழுந்து விடவில்லை.

''ஏனம்மா நான் போட வேண்டிய கூச்சலை நீ போட்டு விட்டாயே! நானா திருடன் மாதிரி படியேறி வந்தேன்?'' ரமணனின் குரலில் சூடு இருந்தது.

அவளுக்கு வயது இருபத்திரண்டு இருபத்து மூன்று இருக்கும். அகன்ற பெரிய கண்கள், காந்தி வீசும் யௌவன தேகம். நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவள் என்று தெரிவிக்கும் எளிய ஆடை.

ஒரு படி கீழே நிற்கும் அப்பாவுவையும் ஒரு படி மேல நிற்கும் ரமணனையும் மருட்சியுடன் மாறி மாறிப் பார்த்தாள் அவள். ''இது... இது மருந்துக் கடையில்லையா?'' என்றாள்.

''மருந்துக் கடையா...'' திகைத்தான் ரமணன்.

''நைட் அண்ட் டே இருபத்து நாலு மணி நேரமும் திறந்திருக்கிற மருந்துக் கடை இங்கே ஒன்று இருந்ததே...''

''அடடா! அந்தக் கடையா? அது பக்கத்துத் தெருவில் அல்லவா இருக்கிறது? அங்கே...'' என்று ரமணன் கூற, அப்பாவு இடைமறித்தான்; ''பக்கத்துத் தெரு இல்லை, சார். இரண்டு தெரு தள்ளி...''

''நான் போய்க் கொள்கிறேன்.'' திரும்ப எத்தனித்தாள் அந்தப் பெண். ''என் குழந்தைக்கு ரொம்ப இருமல்.''

இடுப்பில் செருகியிருந்த ஒரு மருந்துச் சீட்டை எடுத்துக் காட்டினாள். ''பதினைந்து நாளாய் இதைத்தான் கொடுத்து வருகிறேன். நேற்றுத் தீர்ந்து விட்டது. கவனப் பிசகாய் வாங்காமலிருந்து விட்டேன். குழந்தைக்கு இருமல் சகிக்க முடியவில்லை. உதவிக்கு யாரும் இல்லை. ராத்திரி என்னேரமானாலும் பரவாயில்லை என்று கிளம்பி வந்தேன்.''

''உங்கள் வீடு எங்கே?'' என்று ரமணன் கேட்டான்.

''கோடம்பாக்கம் ஆற்காடு ரோடு.''

''அப்பாடா! இது நுங்கம்பாக்கம் ஹைரோடு. மூடுராயி தூரம் தனிகானா ஒஸ்தீரி?'' என்று அப்பாவு வியப்புத் தெரிவித்தான்.

''பாவம், மனக் கஷ்டத்தோடு வந்திருக்கிற உங்களை நான் வேறே கலவரப்படுத்தி விட்டேன். என்னை மன்னியுங்கள்,'' என்றான் ரமணன்.

''பரவாயில்லை. நானும் விசாரிக்காமல் கொள்ளாமல் நுழைந்தது தப்புத்தானே?''

''சீட்டை இப்படிக் கொடுங்கள். நான் போய் வாங்கி வருகிறேன். ரெஸ்ட் எடுத்துக் கொள்ளுங்கள்,'' என்றான் ரமணன்.

''சே, சே! உங்களுக்கேன் தொல்லை? இடம் தான் சொல்லிவிட்டீர்களே?''

''இருந்தாலும், அங்கேயும் இந்த மாதிரி விலாசம் தெரியாமல் தடுமாறினீர்களானால்?'' சீட்டை ரமணன் வாங்கிக் கொண்டான்.

''பணம்...''

''அதுவும் நானே போட்டுக் கொள்கிறேன். உங்களை அவதூறாய்ப் பேசியதற்கு அபராதம் ஏதாவது கட்ட வேண்டாமா?''

அவள் வேதனையுடன் சோகமாய்ச் சிரித்தாள்.

ரமணன் போய்விட்டான்.

''எங்கள் ஐயாவுக்கு ரொம்ப தாராள மனசு! ஈ மதறாஸிலோ ஐயின மாதிரி ஒக்குருனு லேது,'' என்று அப்பாவு அளந்து கொண்டிருந்தான்.

''குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் எடுத்து வருகிறாயா? ரொம்பத் தாகமாயிருக்கிறது,'' என்றாள் அவள்.

''பானைத் தண்ணீராச்சுங்களே?''

''பாதகமில்லை.''

''அதுவும் சாயங்காலம் பிடிச்சு வைக்க மறந்திட்டேன்.''

"வேறே... கீழ் வீட்டிலே போய்க் கேட்க முடியாதா..."

"அதுங்களா?" காறித் துப்பினான் அப்பாவு. "நிண்டா கருமியயிருந்தே!"

அவள் கையைப் பிசைந்து கொண்டாள். மாடிப் படியிலேயே குறுக்கும் நெடுக்கும் உலவலானாள்.

சில நிமிடங்களில் ரமணன் திரும்பினான். காவி நிற மிக்ஸ்சர் அவன் கையிலிருந்த சீசாவில் காணப்பட்டது.

"ஆட்டோ கூடப் பிடித்து வந்திருக்கிறேன். நீங்கள் பத்திரமாய்ப் போங்கள்."

மருந்துச் சீசாவைப் பெற்றுக் கொண்டாள் அவள். புறப்பட்டாள். தெருமுனையில் ஆட்டோவின் உறுமல் தேய்ந்தது?

பஜார் தெரு வழியாக, ஏரிக்கரை மைதானத்தைக் கடந்து, வித்யோதயாவைத் தாண்டி, கோடம்டபாக்கம் ஹைரோடில் ஆட்டோ! ஓடியது. இங்கொரு பால் லாரி, அங்கொரு எருமை மாடு, பிறிதோரிடத்தில் டீக் கடைத் திறப்பு - விடியவிருக்கும் காலைப் பொழுதுக்குக் கட்டியும் கூறின.

மேம்பாலத்தை நெருங்கியதும், "இப்படியே நிறுத் தப்பா," என்று இறங்கினாள் அவள். "எவ்வளவு பேசி யிருக்கிறார் அவர்?"

"கொடுத்து விட்டாரம்மா." அவன் கும்பிட்டு விட்டுத் திரும்பினான்.

ஒரு பெருமூச்சுடன் அவள் நடந்தாள். மேம் பாலத்தின் கைப்பிடிச் சுவரைத் தடவியவாறே அவள் நடை ஊர்ந்தது. கையிலிருந்த சீசாவைப் பார்த்தாள். ஒரு வெறுப்புச் சிரிப்பை வெளியிட்டன உதடுகள். பாலத்தின் கீழே எறிய நினைத்த மாதிரி சீசாவை உயர்த்தினாள்-

படபடவென்று ஒரு மோட்டார் பைக் சத்தம் கேட்டது. திடுக்கிட்டு நின்றாள்.

''நான் தான்,'' என்று புன்னகைத்தான் பைக்கில் வந்த ரமணன். ''ஆட்டோக்காரன் பத்திரமாயக் கொண்டு போய் விடுகிறானோ இல்லையோ பார்த்துவிடலாம் என்று தான் பின்னாலேயே வந்தேன்.''

''ரொம்ப நன்றி... பக்கத்திலேதான் வீடு... போய்க் கொள்கிறேன்...''

''குழந்தையையும் பார்த்து விட்டேனானால் ஆறுதலா யிருக்கும்...'' மோட்டார் பைக்கைத் தள்ளிக் கொண்டே அவள் பக்கத்தோடு அவன் நடந்தான்.

''நான் பார்த்துக் கொள்கிறேன். மருந்து கொடுத்தால் இருமல் சரியாகி விடும்.''

''அதில்லை. தலைப் புண்ணுக்குத் தடவிக் கொள்ள வேண்டிய மருந்தைக் குடித்து, இருமல் குணமாகப்போகிற அதிசயக் குழந்தையைப் பார்க்க ஆசையாயிருக்கிறது எனக்கு...''

தூக்கிவாரிப் போட்டது அவளுக்கு திடுக்கிட்டாள். விழிகொட்டாமல் ஒரு வினாடி பார்த்தாள். பிறகு வேகமாக நடையில் ஓடத் தொடங்கினாள்.

குறுக்கே சென்று வழி மறித்தான் ரமணன். 'பிடிபட்டால் சாக்கு இருக்கட்டும் என்று ஒரு பழைய மருந்துச் சீட்டை எடுத்து வந்தாய்! அந்த அளவுக்கு புத்திசாலிதான் நீ. இருந்தாலும், இன்னும் கொஞ்சம் பொருத்தமாக, இருமல் மருந்துக்கான......

கடகடவென்று கண்ணீர் பெருகி வழிந்தது அவள் கன்னங்களில். "விடுங்கள், வழி விடுங்கள். நான் போய் விடுகிறேன்."

ரமணனின் குரலில் இரக்கம் தென்படவில்லை. வேண்டுமென்றே மிரட்டினான். "இரவு இரண்டு மணிக்கு அத்து மீறி வீட்டுக்குள் நுழைந்ததற்காகப் போலீசில் புகார் கொடுக்க வேண்டுமா? உன்னைப் பற்றி எனக்கு எல்லாம் தெரியும். நீ எப்படிப்பட்டவள் என்று..."

ஒரே வினாடி. நடுச் சாலையென்றும் பாராமல் அவள் குனிந்தாள். ரமணனின் காலைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டு விட்டாள். "ஐயையோ! என்னை அப்படியெல்லாம் கழிசடை என்று நினைத்துவிடாதீர்கள். அந்தப் பாவி எனக்குத் தெரியாமல் செய்திருக்கிறான்."

"எந்தப் பாவி? என்ன செய்தான்?" இன்னொரு முறை அவள்·தன் காலைத் தொட்டு விடாதபடி விலகிக் கொண்டான் ரமணன்.

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். "ஒன்றும் தெரியாத மாதிரி பாசாங்கு செய்யாதீர்கள். அந்தப் போட்டோக்களெல்லாம் உங்களிடம் அகப்பட்டிருக்கிறது. அதை வைத்து நான் ஒரு மட்டமான பிறவி என்று முடிவு செய்திருக்கிறீர்கள்.'''

ரமணனுக்குக் கொஞ்சம் விளங்கத் தொடங்கியது. ''உன் வீட்டுக்கே போய்ப் பேசலாம், வா. உன்னை நான் கண்ணியமான பெண் என்று தான் நினைக்கிறேன். உனக்கு உதவி செய்யலாமென்று தான் பின்னாலேயே வந்தேன்.''

அவளது பார்வையில் நம்பிக்கை, அவநம்பிக்கை இரண்டு கலந்து தெரிந்தன. தயங்கித் தயங்கி முன்னே நடந்தாள். ஆற்காடு ரோடு முடிவடைகிற இடத்தருகே ஒரு சிறிய தெருவில் திரும்பினாள் அவள். பொழுது பலபல வென்று விடிந்து கொண்டிருந்தது. கண்ணியமான சிறு வீடுகள் நிறைந்திருந்த தெருவில், மூன்றாவது வீட்டினுள் நுழைந்தாள். எச்சரிக்கையுடன் உள்புறம் எட்டிப் பார்த்து விட்டு, வரலாம் என்று ரமணனுக்குச் சாடை காட்டினாள். வாசலில் மோட்டார் பைக்கை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தினான் ரமணன். அவளைப் பின் தொடர்ந்தான்.

அவன் எதிர்பார்த்த மாதிரியே குழந்தை எதுவும் காணப்படவில்லை. படித்து, வேலை பார்த்து, கௌரவ மாய்க் குடித்தனம் நடத்துகிறவர்கள் இப்படித் தான் வீட்டை வைத்திருப்பார்கள். சம்பாஷணையை விட்ட இடத்திலே தொடர்ந்தான் ரமணன்: ''அந்த பாவி யார்?''

அவள் முட்டிக்கால் போட்டமர்ந்தாள். தலையைக் கைகளில் புதைத்துக் கொண்டாள். குலுங்கக் குலுங்க விம் மினாள்.

ரமணன் பேசாமலேயிருந்தான்.

அவள் தானாக அடங்கினாள். தலையை நிமிர்த் தினாள். ''என்னை நம்புங்கள். நான் கெட்டவளல்ல. ஆசிரியைப் படிப்புப் படித்தவள். கண்ணியமாக வேலை

பார்க்கிறவள். என்னைத் தடுக்கவோ, தட்டிக் கேட்கவோ, புத்தி சொல்லவோ பெரியவர்கள் எவருமில்லை. என் சுதந்திரம் தான் என் தலைக்குத் தீம்பு கொண்டு வந்தது?''

அவளாகவே புலம்பட்டும்; அவளாகவே ஓயட்டும். மோட்டு வளையைப் பார்த்தபடி ரமணன் மௌனமாக இருந்தான்.

''அவன் ஒரு போட்டோகிராபர். பள்ளிக்கூடத்தில் ஆண்டு விழா நிகழ்ச்சிகளைப் படம் எடுத்துத் தருவதற்காக வந்திருந்தான். ஹெட் மிஸ்ட்ரஸ், என்னை நியமித்திருந் தாள் கூடமாட ஒத்தாசை செய்வதற்காக. அதனால் நெருங்கிப் பழகினேன். நஞ்சுண்டனுக்கு உடம்பெல்லாம் நஞ்சு என்று எனக்குத் தெரியாது...''

''உன் பெயரைச் சொல்லவில்லை.''

''நீலா. இவ்வளவு வயதாகியும் உலகமறியாதவளாக இருந்துவிட்டேன். அவனுடன் இங்கே குடித்தனம் நடத்தத் தொடங்கினேன்.''

''கல்யாணம்?''

அவள் விம்ம ஆரம்பித்தாள்.

''கோவிலிலா?''

''அவள் இல்லையென்று தலையை அசைத்தாள்.

''ரெஜிஸ்டரா?''

''எதுவுமில்லை, எதுவுமில்லை,'' என்று தன் தலையில் அறைந்து கொண்டாள். ரமணன் அவள் கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தினான்.

''எந்தவிதமான பாதுகாப்பும் நான் செய்து கொள்ள வில்லை. ஊரிலே யாரோ தடை சொல்கிறார்கள் என்றான். கொஞ்ச நாள் போன பின் திருமணம் சட்டப்படி செய்து கொள்ளலாம் என்றான். முட்டாள்தனமாக அவனை நம்பினேன். முறையான மனைவிபோல் வாழ்க்கை நடத்தி னேன். அது தான் எங்கள் படுக்கையறை.''

ரமணன் எட்டிப் பார்த்தான். பிளைவுட் பலகை களால் அமைந்த சிறிய அறை. சிறிய கட்டிலும் அதில் மெத்தை தலையணைகளும் இருந்தன.

''அவன் என்னை இழிவான காரியங்களுக்குப் பயன் படுத்திக் கொள்வான் என்று நான் சிறிதும் நினைக்க வில்லை.'' முகத்தை இரு கைகளாலும் மூடிக் கொண்டு நீலா தேம்பினாள். ''ஐயோ! இதற்கு மேல் நான் என்ன சொல் வேன்? எப்படிச் சொல்வேன்?''

''சொல்லத்தான் வேண்டும். மானத்தோடு தப்ப ஆசையிருந்தால் சொல்லு.''

''என்னை வைத்து ஆபாசமான புகைப்படமெல்லாம் எடுத்தான்.''

அடிவிழுந்த மாதிரி ரமணன் துள்ளி நிமிர்ந்தான். அவன் ஊகித்திருந்தது. வேறு எதுவோ. இதுவல்ல. பிரமித்து வாயடைத்துப் போனான்.

''எப்படிக் கண்டுபிடித்தாய்?'' என்றான் கடைசியில்.

''மிக நெருக்கமாக அவனிடம் பழகுவேன். திடீரென்று எழுந்து வெளியே போவான். திரும்பி வருவான். எங்கேயோ 'ட்ர்ர்-கிளிக்' என்ற மெல்லிய ஓசை கேட்கும்.

என்ன அது என்று கேட்டால், 'எனக்கொன்றும் காதில் விழ வில்லையே?' என்று சொல்லிவிடுவான். நாளுக்கு நாள் என் சந்தேகம் வலுத்தது. கௌரவமான வேலையெதுவும் பார்க்காமல், காலிகளோடு அவன் சுற்றுகிறான் என்றும் தெரிந்தது. ஒரு நாள் இந்த அறையில், அதோ ஒரு இடுக்குத் தெரிகிறது பாருங்கள்-''

ரமணன் எழுந்து சென்று பர்த்தான். பிளைவுட் தடுப் பின் உயரத்தில், சிறிய பிறை போன்ற இடம் இருந்தது. ஒரு காமிரா வைக்கக் கூடிய இடம். ஆனால் அதன் பக்கத்தில் படம், கண்ணாடி முதலியன மாட்டப்பட்டு மறைக்கப் பட்டிருந்தது.

''இரண்டு நாள் முன்பு, ஒட்டடை அடிக்கும் போது அங்கே ஒரு காமிரா வைத்திருப்பதைப் பார்த்து விட்டேன். உடனே எனக்கு அந்தப் பயங்கரம் புரிந்தது. என்னை ஆபாச மான பல நிலைகளில் படம் பிடித்துக் கொண்டிருக்கிறான் ரகசியமாய்! சரிசெய்து வைத்த பின் தானாகவே படம் எடுக்குமாமே, அது தான் அந்தக் கிர்ர்ர் ஓசை. அதெல்லாம் பிற்பாடு தான் எனக்குத் தெரிய வந்தது. ரகசியமாகப் பல செக்ஸ் வியாபாரிக்கு அவை விற்பனையாகுமாம். சொன் னார்கள்,''

திடீரென்று மறுபடி விசும்பினாள் நீலா. முன் போலவே மறுபடி சாந்தமடைந்தாள்.

''என் ரத்தம் கொதித்தது. கூசிக் குறுகினேன் அவ மானத்தால். அப்போது அவன் வீட்டில் இல்லை. காமிராவைத் தட்டி உடைத்துப் பிலிமை எடுத்து விட்டேன். அதை எப்படி அழிப்பது? கிழிக்க முடிய வில்லை. கொளுத்தினால் ஊரெல்லாம் நாறும். திகைத்து

நின்றிருந்த போது அவன் வந்து விட்டான். எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. பள்ளிக் கூடத்துக்கு ஓடி விட்டேன். மடியிலேயே கட்டிக் கொண்டிருந்தேன். இதற்கு முன் எவ்வளவு படம் எடுத்திருப்பானோ தெரியாது. இதை யாவது அழித்து விட வேண்டும் என்று தீர்மானித்தேன். பள்ளிக் கூடத்திலும் பிலிமைக் கழித்துக் கட்ட இடம் கிடைக்கவில்லை. தவிப்புடன் சாயந்தரம் இருட்டிய பிறகு வெளி வந்தேன். அந்தப் பாவி காத்துக் கொண்டிருந்தான்! அவன் கையில் அகப்படாமல் பஸ் ஏறினேன். ஓடினேன். நழுவினேன். அவன் என்னைத் துரத்தவில்லை. நானாகவே களைத்து விடுவேன் என்று நினைத்த மாதிரி அவசர மில்லாமல் என்னைத் தொடர்ந்து நிழல்போல் வந்து கொண்டேயிருந்தான்...''

மிச்சத்தை ரமணன் பூர்த்தி செய்தான். ''உன் ரூட்டில் என் வீடு இருந்திருக்கிறது. தெருவிலேயே மாடிப் படி இருந்ததால், ஏறி வந்திருக்கிறாய். நான் எங்கே வெளியே போயிருந்திருக்கிறேன்...''

''உங்கள் அறை நிலைப்படிக்கு மேல் ஓர் இடுக்குத் தெரிந்தது. அங்கே பிலிம் ரோலைச் செருகி வைத்து விட்டேன் - பிற்பாடு எடுத்துக் கொள்ளலாம் என்று. அதைத் திரும்ப எடுக்கத் தான் ராத்திரியில் வந்தேன். நல்ல காலம் அவன் அந்த இடத்தைப் பார்க்கவில்லை...''

''என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயாக்கும்?''

''ஆ! அங்கேயும் வந்து விட்டானா பாவி? அவன் கையில் சிக்கிவிட்டதா?'' என்று பதறினாள் நீலா.

''அதை இனிமேல் தான் கண்டு பிடிக்க வேண்டும்.'' எழுந்து கொண்டான் ரமணன்.

''தயவு செய்து கொண்டு பிடியுங்கள். உடனே செய்யுங்கள்.''

''ஒரே இரவில் இரண்டு கேஸ்கள்!'' ரமணன் சிரித்தான். வெளியே காலை வெய்யில் சாலையை மேய்ந்தது.

''அப்புறம் இங்கே வரவில்லையே நஞ்சுண்டன்?'' என்று கேட்டான்.

''என்னவோ தெரியவில்லை, காணோம்.''

''இப்போதைக்கு வர மாட்டான். இன்னும் பெரிய வேட்டை அவனுக்குக் கிடைத்தாகி விட்டது.'' ரமணன் விளக்கவில்லை. ''விசேடமாக ஏதேனும் நேரிட்டால் தகவல் தெரிவியுங்கள். மற்றப்படி தைரியமாக இருங்கள் கண்ணியமும் கௌரவமும் பிறர் கொடுத்து வருவதல்ல. நமக்கு நாமே கொடுத்துக் கொள்வது தான்.''

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பயந்த குழந்தை மாதிரி பரிதாபமாய்ச் சிரித்தாள்.

ரமணன் தன் நுங்கம்பாக்கம் அறைக்குத் திரும்ப வில்லை. எழும்பூரிலுள்ள ஒரு மூன்று மாடி ஓட்டலில் அவனுக்கு இன்னோர் அறை உண்டு. அங்கே சென்றான். முதல் நம்பர் தூக்கமொன்று இரண்டு மணி நேரம் போட்டான். எழுந்து குளித்தான். உடை மாற்றிக் கொண்டான். சிற்றுண்டிக்குப் பதில் சாப்பாடாகவே அருந்தினான்.

கார வேர்க்கடலை வாங்கிக் கொறித்தபடி நுங்கம் பாக்கம் ஜாகையை அடைந்த போது-

''நர்ஸ் மேரியாம். தீனி இச்சினதி.'' அப்பாவு நீட்டினான் ஒரு காகிதத் துண்டை.

டாக்டர் நாமகிரியின் எட்டு 'டாப்' பணக்கார நோயாளிகளின் பெயரும் முகரிகளும் அதில் இருந்தன.

ஐந்தாவது பெயர்: குழந்தைப்பாண்டியன். இடம். அடையாறு.

''இந்தா.'' அப்பாவுக்கு நாலு வேர்க்கடலை கொடுத்தான் ரமணன். மிக மிகச் சந்தோஷமானால் தவிர இந்தத் தாராளம் அவனிடம் ஏற்படாது.



பாவம், ரேணுகா. ரமணன் என்று நினைத்து வேறு எவனையோ அழைத்துப் போய்க் கொண்டிருக்கிறோம் என்று அவளுக்குத் தெரியாது.

''அகாலத்தில் உங்களைத் தொந்தரவு செய்து விட்டேன். இல்லையா ரமணன்?'' வண்டியைச் செலுத்திக் கொண்டிருந்த ரேணுகா கேட்டாள்.

''பரவாயில்லை.'' அவன் சிகரெட்டிலிருந்து குப் பென்று புகை வெளிப்பட்டது. ''நீ என்னைத் தொல்லை செய்யக் கூடிய விஷயம் வேறொன்றிருக்கிறது.''

''என்ன?''

''ரமணன் என்ற பெயரை உபயோகிப்பது.''

''ஸாரி.''

''உன் நன்மைக்காகத்தான் சொன்னேன். உன்னுடன் நான் தங்கியிருக்கும் வரையில் ரமணன் என்கிற பெயர் எனக்குக் கிடையாது.''

''ஆமாம். ஆமாம்,'' என்று ரேணுகா ஏற்றுக் கொண்டள். ''எல்லோருக்கும் தெரியலாமென்றால் ஏ.ஸி. ஒரு போலீஸ் ஆளையே அனுப்பியிருப்பாரே!''

''யார்?''

''தணிகாசலத்தைச் சொன்னேன்.''

''ஓ.'' அவன் முகம் இருண்டது. ஆனால் காருக்குள் வெளிச்சமில்லை. ஆகவே அது தெரியவில்லை.

''நான் அவருக்கு ரொம்பப் 'பெட்'. மாற்றலானதில் எனக்குத் தான் அதிகம் வருத்தம்,'' என்றாள் ரேணுகா.

''மாற்றல்?'' அவனையும் மீறி வியப்பு வெளிப்பட்டு விட்டது அவன் குரலில்.

''அவரை நாகர்கோவிலுக்கு அனுப்பியிருப்பதைச் சொல்லுகிறேன். கன்னியாகுமரி மாவட்டத்தில் திருட்டுக் கும்பல் வேலை செய்கிறதாம். அதைக் கண்காணிக்க ஸ்பெஷல் அதிகாரியாகப் போட்டிருக்கிறார்கள். திரும்பி இங்கே வரப் பல மாதங்கள் ஆகுமாம்.'' முகத்தை நாற்பத் தெட்டு டிகிரி அவன் பக்கமாயத் திருப்பினாள் ரேணுகா.

''உங்களுக்குத் தெரியாதா என்ன?''

''ஏன் தெரியாமல்? சொல்லிக் கொண்டுதான் இருந்தார். ஆனால் இவ்வளவு சீக்கிரத்தில் போய் விடுவார் என்று எனக்குத் தெரியாது.''

அவனுக்குப் பெரும் நிம்மதி. ஏகப்பட்ட மகிழ்ச்சி. இதைப் பற்றி இன்னும் கொஞ்சம் பேச விரும்பினான். ஆனால் ரேணுகா மாற்றி விட்டாள். ''உங்களை ரமணன் என்று கூப்பிட்டா விட்டால் வேறெப்படிக் கூப்பிடுவது?''

கார் அடையாறு பாலத்தைச் சமீபித்துக் கொண்டிருந்தது. சாலையில் ஏதோ பழுது பார்க்கிறார்கள். சிவப்பு விளக்கு நடப்பட்டிருந்தது. அதன் வெளிச்சம் அவன் முகத்தில் விழுந்தது. முகம் ரத்தமயமாயிற்று.

''நஞ்சுண்டன் என்று வைத்துக் கொள்ளேன்.''

''என்ன பயங்கரமான பெயர்!'' என்று ரேணுகா மெல்லச் சிரித்தாள்.

''நானும் பயங்கரமானவன் தானே?''

''துப்பறியும் வீரர்கள் அப்படித் தான் இருக்க வேண்டும்.'' அழகிய பங்களாக்கள் இருந்த அகன்ற வீதியொன்றில் கார் திரும்பியது.

''பெயர்களைச் சொல்லலாமா இப்போதாவது?''

''காருக்கும் காதுகள் உண்டு. ஆனால் வீட்டோடு ஒப்பிட்டால் இது தேவலை. சொல்லு.''

''என் அக்கா சுகுமாரி, என் அப்பா குழந்தைப் பாண்டியன் நான் ஆக மூன்று பேர்தான் எங்கள் குடும்பத்தில், வேலைக்காரர்களை எடுத்துக் கொண்டால் டிரைவர் முருகேசன், சமையல் காமேசுவரி, தோட்டக்காரன், அவன் மனைவி, வேலைக்காரச் சிறுமி-''

''எல்லோரும் வீட்டிலேயே தங்கியிருப்பவர்களா?''

''டிரைவர் முருகேசன் மட்டும் காலை ஒன்பது மணிக்கு டூட்டிக்கு வருவான். ஐந்துக்கெல்லாம் போய் விடுவான். மற்றவர்கள்-'' ரேணுகா கையைச் சுட்டிக் காட்டினாள். ''இதோ வீட்டுக்கே வந்தாயிற்று, ரமணன்.''

''நஞ்சுண்டன்.''

''ஸாரி, நஞ்சுண்டன்,''

மாந்தோப்பு மாதிரி இருந்தது கார் நுழைந்த இடம். அப்பா! எண்ணற்ற எத்தனை மரங்கள்! பல நூறு கெஜங் களைத் தாண்டிய பிறகே பங்களா தெரிந்தது. அந்த நாளில் வாங்கிப் போட்டிருக்க வேண்டும். பழைய பாணியான கட்டிடம். கீழே எப்படி அமைப்போ அதேபோல் மாடியும் இருக்குமென்று தெரிந்தது.

போர்டிகோவில் அவர்கள் இறங்கினார்கள். முதலில் எதிர்ப்பட்டவள், ரேணுகாவின் அக்கா சுகுமாரிதான். ரேணுகா சற்றுப் பூசினாற் போல் இருப்பாள். ஆனால் சுகுமாரிக்குக் கொடி போன்ற தேக அமைப்பு.

''எங்கேயடி நீ பாட்டுக்குப் போய்விட்டாய்?'' என்று கேட்டவண்ணம் உள்ளிருந்து விரைந்து வந்தாள் அவள்.

அந்தக் குரல்! அப்பப்பா! என்ன கோரம்! நஞ்சுண்டனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''அக்கா! மீட் மிஸ்டர் நஞ்சுண்டன். இவள் தான் என் சிஸ்டர் சுகுமாரி.'' ரேணுகா இருவரையும் அறிமுகம் செய்து வைத்தாள். ''இவரை அழைத்து வரத்தான் போனேன். அக்கா. காலேஜில் என்னோடு படித்தாளே தமயந்தி, அவள் அண்ணா இவர். எல்லோரும் இப்போது

பம்பாயில் இருக்கிறார்கள். இவர் ஒரு இன்டர்வியூக்காக வந்திருக்கிறார். கொஞ்ச நாள் நம்மோடு தங்கியிருப்பார்.''

''சொல்லவேயில்லையே நீ!''

ஆச்சரியப்படும் போது சுகுமாரியின் குரல் இன்னும் விசித்திரமாக உருவெடுத்தது. கையைத் தட்டினாள். அரைத் தூக்கத்திலிருந்த வேலைக்காரன் கொட்டாவி விட்டபடி வந்தான். ''லக்கேஜை எடுத்துப்போய், மாடியில் இரண்டாவது அறையில் வை. ஐயா அங்கே தங்க வேண்டும். சுத்தம் பண்ணி ரெடியாய் வை. வாருங்கள் மிஸ்டர் நஞ்சுண்டன். ரொம்பச் சந்தோஷம் எனக்கு,'' சொல்லி முடிப்பதற்குள், அவள் குரல் பல ஸ்தாயிகளில் சஞ்சாரம் செய்தது.

''உங்களுக்குத் தொண்டையில் ஆபரேஷன் செய்ததாகக் கேள்விப்பட்டேன். தமயந்தி சொன்னாள். தேவலையா இப்போது?'' என்றான் நஞ்சுண்டன்.

''அது தான் பார்க்கிறீர்களே. அதன் பலனை!'' வெறுப்புடன் சிரித்தாள் சுகுமாரி. ''இந்தப் பக்கம் வாருங்கள். அப்பாவைப் பார்க்க வேண்டாமா?'' முன்னே போனாள்.

அவசரமாக நஞ்சுண்டனை ஒரு பார்வை பார்த்தாள் ரேணுகா. முன்னால் செல்லும் அக்காவைச் சுட்டிக் காட்டி, தொண்டையைத் தொட்டுக் காட்டி, ''ஊஹூம்,'' என்று தலையசைத்தாள். அக்காவின் தொண்டையைப் பற்றிப் பேச வேண்டாம் என்று பொருள்.

''தெரியும்.'' கண்ணை மூடிக் காட்டினான் நஞ்சுண்டன்.

முன்னதாகச் சென்ற சுகுமாரி தகவல் தெரிவித்திருந்தாள். டூட்டியில் இருக்கம் நர்ஸ் விலகி நின்று கொண்டாள். குழந்தைப் பாண்டியனால் தலையைத் திருப்ப முடியாத விழிகளை மிகவும் கோடிக்குத் தள்ளி, வருபவர்களைப் பார்த்தார். ''வெல்கம் டு மை ஹவுஸ்,'' என்றார் ஆங்கிலத்தில்.

''ஹவ் டி டூ!'' குழந்தைப் பாண்டியனின் விரல்களைக் குலுக்கினான் நஞ்சுண்டன். ''நீங்கள் மிக மனவுறுதியுடன் இருக்கிறீர்கள். தமயந்தி அடிக்கடி சொல்வாள்.'' என்றான் நஞ்சுண்டன்.

''உங்கள் தங்கை ரொம்ப ஷை என்று நினைக்கிறேன். இங்கே அவர் வந்து நான் பார்த்ததேயில்லை.''

''தமயந்தி ஹாஸ்டலில் தங்கியிருந்தாள், அப்பா. வெளியில் வர அதிகமாய்ப் பர்மிஷன் கிடைக்காது,'' என்று குறுக்கிட்டாள் ரேணுகா.

''ஆகாரம் ஏதாவது சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள்ளப் போங்கள். மணி ரொம்ப ஆகிவிட்டது.'' சுவரிலிருந்து கடியாரத்தக்குத் தாவியது அவர் கண். ''இந்த நேரத்துக்கு வண்டி இருந்ததே ஆச்சரியம்.''

''இன்று பம்பாயிலிருந்து வரவில்லை, அப்பா. நேற்றே வந்து ஓட்டலில் தங்கியிருந்தார். தமயந்தியின் கடிதம் பிறகு தான் வந்தது. ஓட்டலுக்குப் போய்ச் சண்டை போட்டு இழுத்து வருகிறேன்.''

''நல்ல காரியம் செய்தாய்,'' என்று மகளைப் பாராட்டினார் தந்தை. ''சுகுமாரி எங்கே?''

''சாப்பாடு தயார் பண்ணப் போயிருக்கிறார்கள்.'' என்று நர்ஸ் தெரிவித்தாள்.

''நீ கொஞ்சம் போய் இவருக்கு மாடியறையைக் காட்டு.'' நர்சைக் கேட்டுக் கொண்டாள் ரேணுகா. ''அக்காவுக்கு உதவி செய்து விட்டு வருகிறேன். சமையல் பாட்டியை இன்னேரத்துக்கு மேல் எழுப்பினால் சிடுசிடுவென்று விழுவாள்.''

''எனக்குக் கொஞ்சம் பால் போதும், ரேணுகா.''

நஞ்சுண்டன் எழுந்து கொண்டான்.

''நீங்கள் தூங்குங்கள், சார்.''

''ஆமாம்... நர்ஸ். ஒரே தலைவலி... ஏதாவது மாத்திரை இருந்தால் வந்ததும் கொடு,''

''எஸ் சார்.'' நர்ஸ் மாடிப் பக்கம் சென்றாள். ரேணுகாவும் போய்விட்டாள்.

நஞ்சுண்டன் மருந்து அலமாரியருகில் சற்று நின்றான். ''ஓகோ... இது தான் மருந்துகளா...? நான் பார்மஸடிகல்ஸூம் கொஞ்சம் படித்திருக்கிறேன்.'' தனக்குத் தானே பேசிக் கொள்கிற மாதிரி சில புட்டிகளை எடுத்துப் பார்த்தான். திருப்பி வைத்தான். பின்னர் மாடியில் ஏறினான்.

எதிரில் வந்து கொண்டிருந்தாள் நர்ஸ். வீட்டில் பிரைவேட்டாக இருப்பவளாகையால் யூனிபாரம் கிடையாது. வெள்ளை வாயல் சேலையணிந்து, கனகாம்பரம் சூடியிருந்தாள்.

''வேலைக்காரன் ரெடி பண்ணி வைத்திருக்கிறான். வாருங்கள்,'' என்று அழைத்துப் போய் அறையைக் காட்டினாள்.

''நர்ஸ், டெலிபோன் எங்கே இருக்கிறது?'' என்று நஞ்சுண்டன் விசாரித்தான்.

''அதோ பக்கத்தறையில்,'' என்று நர்ஸ் காட்டினாள்.

''தாங்ஸ், நீ போகலாம்.

நஞ்சுண்டன் தனது அறைக்குச் செல்லவில்லை. டெலிபோனிடம் சென்றான். வெகு முக்கியமாக ஒரு தகவல் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. தெரிந்து கொள்ள அல்ல - ருசுப்படுத்திக் கொள்ள.

டைரக்டரியை ஒரு முறை புரட்டினாள். டயலை ஐந்து தரம் சுழற்றினான். ''ஏ.ஸி. தணிகாசலம் இருக்கிறாரா?''

''நாகாகோவிலுக்குப் போய்விட்டார்,'' என்ற பதில் வந்தது.

போனை வைத்தான் நஞ்சுண்டன். முகத்தில் திருப்தி. வெளியில் வந்தான்.

''அதென்ன சார், வந்ததும் வராததுமாய்ப் போலீஸ் ஸ்டேஷனைத் தேடுகிறீர்கள்?'' நர்ஸ்தான் கேட்டவள்.

நஞ்சுண்டன் அவளை எதிர்பார்க்கவில்லை. ''இதற்கும் சேர்த்துத்தான் உன்னை அமர்த்தியிருக் கிறார்களா?'' என்றான் கடுமையாக.

''எதற்கு சார்?''

''ஒட்டுக் கேட்பதற்கு.''

மிரண்டவளாக அவள் படியிறங்கிச் சென்றாள். நஞ்சுண்டன் சில வினாடிகள் அங்கேயே நின்றான். உதட்டைக் கடித்துக் கொண்டு தானும் கீழிறங்கிச் சென்றான்.

பாலை எடுத்துக் கொண்டு எதிர்ப்பட்டாள் ரேணுகா. ''எங்கே இறங்கி வந்தீர்கள்?''

''இரு, அந்த நர்ஸுக்குக் கொஞ்சம் ஞாபக மறதி.''

''அம்மூவா! திறமைசாலியாயிற்றே!''

''ஞாபக மறதி என்றேன். திறமை வேறே.'' நஞ்சுண்டன் குழந்தைப் பாண்டியனின் அறையில் நுழைந்தான்.

நர்ஸ் அப்போதுதான் ஒரு டம்ளரைக் குழந்தைப் பாண்டியனின் வாயினருகில் நீட்டிக் கொண்டிருந்தாள்.

''நில்லம்மா.'' விரைந்து உள்ளே நுழைந்தான் நஞ்சுண்டன். அவள் கையிலிருந்த டம்ளரை வாங்கிக் கொண்டான். ''என்ன மாத்திரை கொடுத்தாய்?''

''ஏன், சாதாரணத் தலைவலி மாத்திரை தான்.'' நர்ஸ் திகைத்தாள்.

''உனக்கு ஞாபகமறதி அதிகம். வேறேதோ நினைவில், ட்ராங்குவிலைச் மாத்திரைகளைக் கரைத்திருக்கிறாய் இந்த டம்ளரில்.''

''இல்லையே! ஒரே ஒரு தலைவலி...''

''ஞாபகமறதி மட்டுமில்லை. பிடிவாதமும் இருக்கிறது உனக்கு. அதோ நிலைப்படியருகே பார்.''

முடமுடப்பான மாத்திரைக் காகிதங்கள் மூன்று நாலு கிடந்தன அங்கே. வாஷ் பேசினில் டம்ளரைக் காலி செய்தான் நஞ்சுண்டன். ''மாடியிலிருந்து இறங்கும் போது பார்த்துக் கொண்டேயிருந்தேன். எங்கேயோ ஞாபகத் துடன் நீ பாட்டுக்குக் கிழித்துக் கிழித்து டம்ளரில் போட்டுக் கரைத்துக் கொண்டேயிருந்தாய்.''

உடனே சீறினாள் ரேணுகா.

''அப்பாவி! ட்ராங்குவிலைசரை மூன்று என்று சாப்பிட்டால் அப்பா என்ன ஆவது?''

நர்ஸின் முகமெங்கும் மிரட்சி. ''இல்லையே... நான் தலைவலி...''

''பொய் வேறு சொல்லாதே.''

குழந்தைப்பாண்டியனும் அதட்டினார் கட்டிலி லிருந்தவாறே.

''சரி, விடுங்கள். தவறுவது சகஜம். ஆளுக்கு ஆள் கண்டித்தால் குழப்பம் ஏற்படும். ஒரு நர்ஸுக்குக் குழப்பம் மட்டும் கூடவே கூடாது.'' நஞ்சுண்டன் மாடிக்குத் திரும்பினான். ரேணுகா தந்த பாலுடன்.

தான் சற்று முன் எடுத்து வைத்திருந்த மாத்திரை களுக்கு, அதன் காகிதங்களுக்கு இவ்வளவு விரைவாகப் பலனா! தன் முதுகில் தானே தட்டிக் கொள்ள வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

டைனிங் ஹாலுக்கு வெளியே தோட்டம், ஜன்னல் கம்பிகளும் மரக் கிளைகளும் கை கோத்துச் சிரித்தன காலை வெய்யிலில். சிறகடித்துப் பறக்கும் புள்ளினங்களின் கலகலப்போசை, காதுக்கு விருந்து.

சாப்பாட்டு மேஜை, நீண்ட சதுரமானது. நடுவில் வைக்கப்பட்டிருந்தது. காலைச் சிற்றுண்டி. வழவழப்பான மேஜையில் பளபளப்பான பாத்திரங்களின் நிழல்கள். பளீரென மின்னும் பீங்கான் தட்டுக்களும் ஸ்பூன்களும். மேஜையின் நாற்புறமும் நாற்காலிகள்.

மொத்தம் இருபது பேர் அமரலாம். ஆனால் இரண்டு பேர்தான் இருந்தார்கள். சுகுமாரி, நஞ்சுண்டன்.

சமையற்காரப் பாட்டி பலகாரங்களை வைத்தாள். போய்விட்டாள்.

''ஹெல்ப் யுவர்செல்ஃப்'' சுகுமாரி, உப்புமா வைத்திருந்த பாத்திரத்தின் மூடியைத் திறந்தாள்.

காலை மலர்ந்த புஷ்பம் போல் அவள் மேனி காந்தி வீசியது. ஆனால், குரல்...! ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வொரு ஸ்தாயி! நஞ்சுண்டன் எதிர் நாற்காலியில் அமர்ந்திருந்தான். நாப்கின் துண்டை மடிமீது பிரித்துக் கொண்டான்.

''ரேணுகா வரவில்லை?''

''ஏன்? அவள் வந்தால் தான் பலகாரம் சாப்பிடுவீர்களா?''

''அவளும் வரட்டுமே?''

பாத்திரத்தைத் திரும்ப மூடினாள் சுகுமாரி.

''சோம்பேறி. எட்டு மணிக்குத்தான் திருப்பள்ளி யெழுச்சி நடைபெறும்.''

டைனிங் ஹாலின் விட்டத்தை வட்டமித்தன நஞ்சுண்டனின் கண்கள்.

''என்ன பார்க்கிறீர்கள்?''

''ரொம்பப் பழங்காலத்து வீடு இல்லை?''

''ஆமாம். வெள்ளைக்கார ஐ.சி.எஸ் ஒருவர் கட்டியது. அப்பா வாங்கிக் கொஞ்சம் புதுப்பித்தார்.'' திறந் திருந்த காப்பிக் கோப்பைகளின் மீது நாப்கின் துண்டைப் போட்டு மூடினாள் சுகுமாரி. ''வாருங்களேன், பார்த்து விட்டு வரலாம்...''

''வித் ப்ளெஷர்.'' நஞ்சுண்டன் எழுந்து கொண்டான்.

வீட்டைக் காட்டிலும் தோட்டத்தில் தான் பார்க்க வேண்டியவை அதிகமிருந்தன. கனி தரும் பலவகை மரங்கள்; நிறத்திலும் மணத்திலும் வேறுபட்ட மலர் கொடிகள். இறுதியில் பங்களாவின் நடுப்பகுதிக்கு அவர்கள் வந்தார்கள்.

''அதென்ன அறை, பூட்டப்பட்டிருக்கிறது?''

''இரண்டு இரும்பு சேப்கள் அங்கே இருக்கின்றன.''

''அதாவது அன்னியர்கள் பார்க்கக் கூடாதது?''

சுகுமாரி புன்னகை செய்தாள்.

''நீங்கள் அன்னியர் அல்ல. இருங்கள்.'' இரண்டு நிமிடத்தில் சாவியுடன் திரும்பினாள்.

அந்த அறையே ஒரு பெட்டகம் போல இருந்தது எவ்வளவு பெரிய பூட்டு! ஆனால் சுகுமாரியின் கையி லிருந்த சாவிக்கு ஒரே வினாடியில் அடிமைப்பட்டது.

அறையை நோட்டம் விட்டான் அவன்.

சுவர்கள், சரியான கருங்கல் கோட்டை. ஜன்னல் களின் இரும்புத் தண்டுகள், பயில்வானின் புஜம் போலிருந்தன. கதவுகள் அடைபட்டே இருந்ததால் ஒரு புழுக்கமான நாற்றம் நாசியை நிறைத்தது. விளக்குப் போட்டாலன்றி வேறு வெளிச்சம் கிடையாது.

சுவரோரமாக, இரண்டு மூலைகளில் இரண்டு பெட்டகங்கள் இருந்தன. ''ஹூம்.'' பெருமூச்சு வெளிப் பட்டது நஞ்சுண்டனிடமிருந்து.

''ஏன்?''

''ஒன்றுமில்லை.''

''சும்மா சொல்லுங்கள்.''

''நாமும் ஒரு காலத்தில் பணக்காரனாக ஆக மாட்டோமா என்று நினைத்தேன். அவ்வளவுதான். உங்களை யெல்லாம் பார்த்துப் பொறாமைப் படுகிறேன் என்று நினைக்காதீர்கள்.''

''பிஸினஸ் பண்ணுங்கள். ஆட்டைத் தூக்கி மாட்டிலே போடுங்கள். மாட்டைத் தூக்கி யானையிலே போடுங்கள்...''

''உத்தியோகத்திலும் சம்பாதிக்கலாம். கொஞ்சம் -'' பாண்ட் பையைக் காட்டினான் நஞ்சுண்டன். ''இதிலே வாங்கிப் போட்டுக் கொள்ளத் தெரியவேண்டும்.''

''இப்போது இண்டர்வியூவுக்கு வந்திருப்பது அந்த மாதிரி வேலைதானா?''

''முதலில் கிடைக்கட்டும். பிறகு பார்த்துக் கொள்ளலாம்...''

''கட்டாயம் கிடைக்கும்.''

''எனக்கு நம்பிக்கையில்லை.'' சட்டென்று பையிலிருந்து ஓர் அரை ரூபாய் நாணயமொன்றை வெளியெடுத்தான்.

''பூவா தலையா போடலாமா!''

''எதற்கு?''

''பூ விழுந்தால் வேலை கிடைக்கும், தலை விழுந்தால் கிடைக்காது. என்ன சொல்கிறாய்?''

''ரைட்டோ!''

'கிளிங்' கென்று நாணயத்தைச் சுண்டினான் அவன். கிர்ரென்று சுற்றி, விட்டத்துக்கு உயர்ந்தது.

விழுந்தது. ஆனால் பூவா தலையா பார்ப்பதற்குத் தோதாக அல்ல. பெட்டகத்தின் பின்புறமிருந்த சிறிய இடுக்குக்கு உருண்டோடியது. ஒளிந்து கொண்டது. ''எடுக்க முடிகிறதா, பார்.''

சுகுமாரி பெட்டகத்தின் பக்கவாட்டில் குனிந்தாள். கையைத் துழாவினாள். நஞ்சுண்டன் பெட்டகத்தின் முன்புறம் குனிந்தான். ஆனால் அவன் தரையைத் துழாவவில்லை.

பெட்டகத்தின் சாவித் துவாரத்தைப் பதித்துக் கொண்டிருந்தது. அவன் உள்ளங்கையிலிருந்த மெழுகுக் கட்டி!

நாணயத்தை வெளியிலெடுத்தாள் சுகுமாரி.

''வேண்டாம் பரீட்சை.'' நாணயத்தை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டான் நஞ்சுண்டன். ''தலை விழுந்தால் வேலை கிடைக்காதென்று இடிந்து போக வேண்டும். பூ விழுந்தால் வேலை கிடைக்குமென்று கோட்டை கட்ட வேண்டும். இரண்டும் வேண்டாம்.''

அறையைப் பூட்டி, சாவியை இடுப்பில் செருகிக் கொண்டாள் சுகுமாரி. டைனிங் ஹாலுக்குத் திரும்பினார்கள்.

''எங்கே இவ்வளவு காலையில் சுற்றுலா போய் விட்டு வருகிறீர்கள்?'' என்று ரேணுகா விசாரித்தாள். காலைத் தினசரி அவள் முன்னே பிரிந்து கிடந்தது.

''அம்மாடி! இப்போது தான் குளுமையாக இருக்கிறது.'' நஞ்சுண்டன் உட்கார்ந்தவாறே சொன்னான்.

''குளுமையா? என்ன குளுமை?'' ரேணுகா திகைத்தாள்.

''ஊன் சாரீரத்தைத் தான் சொல்கிறேன். அப்போது பிடித்து சுகுமாரியின் கொடூரக் குரலைக் கேட்டுக் கேட்டுப் புண்ணாகியிருந்த காதுக்கு...''

''நஞ்சுண்டன்!'' வீரிட்டவள் சுகுமாரியல்ல. ரேணுகாதான்.

சுகுமாரி கற்சிலையாக மாறினாள் சில வினாடிக்கு. பின்னர் குபுக்கென்று ஒரு விம்மல் வெடித்தது அவள் கண்டத்தில். நாப்கின் விரிப்பினால் முகத்தைப் பொத்திக் கொண்டாள்.

''நான் தற்கொலைதான் செய்து கொள்ளப் போகிறேன்! தற்கொலை தான். தற்கொலை தான்!'' அரற்றிக் கொண்டே வெளியேறினாள் டைனிங் ஹாலிலிருந்து.

தீப்பொறி பறந்தது ரேணுகாவின் கண்ணில்.

''சே! உங்களை எவ்வளவோ பண்பாடுள்ளவர் என்று நினைத்திருந்தேனே? என்ன பேச்சுப் பேசி விட்டீர்கள்!'' படபடவென்று வெடித்தாள்.

நிதானத்துடன் மறுமொழி கொடுத்தான் நஞ்சுண்டன். ''உணர்ந்து தான் பேசினேன். வேண்டுமென்றுதான்.''

''ஏன்? எதற்காக?''

''அவளுக்கு ஓர் அதிர்ச்சி வைத்தியம் தேவை. சைகலாஜிகல் ட்ரீட்மெண்ட். அவளுடன் பழகுகிறவர்கள் அத்தனை பேரும் நாசூக்குப் பார்க்கிறார்கள். வேடம் போடுகிறார்கள். போலியாகப் பேசுகிறார்கள். சுகுமாரி உள்ளுக்குள் புழுங்குகிறாள். குமைகிறாள். என்னைப் போன்ற ஒருத்தராவது பச்சையாகச் சாடினால் போதும். தாழ்வு மனப்பான்மை போய்விடும்.'' என்றான் நஞ்சுண்டன்.

அவன் கூற்று சரியா, தப்பா? ரேணுகாவுக்குத் தெரியவில்லை. ஆனால் ஒன்று நிச்சயமாய்த் தெரிந்தது; விரைவில் இந்த வீட்டில் ஒரு புயல் வீசப் போகிறது. வானம் இருளுவது அதற்கு முன்னோடியாகத்தான்.




கைக் கடியாரத்தில் மணி முள் பன்னிரண்டுடன் குலவியது. செகண்டு முள் அதனிடம் சண்டைபோட்ட மாதிரி விலகி ஓடியது.

படுக்கையை விட்டு நஞ்சுண்டன் எழுந்தான். அறைக் கதவைத் திறந்தான். வெளியே பார்த்தான்.

பங்களா நிசப்தமாயிருந்தது. தோட்டத்து மரங்கள் கிசுகிசுத்தன.

அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டான். பையில் எப்போதும் இருக்கும் இரண்டு பொருள்களை வெளி யெடுத்தான். ஒன்று, சிறிதும் பெரிதுமான பல சாவிகளைக் கொண்ட வளையம். மற்றொன்று சிறிய மின்சார ரம்பம்.

நீண்ட பிளாஸ்டிக் ஒயரைப் பிரித்தான். பிளக்கில் செருகினான். ரம்பத்துடனிருந்த குட்டி பல்பு மினு மினுத்தது.

அடுத்து சுவரிலிருந்த ஒரு படத்தின் பின்னே கைவிட்டான். மெழுகுக் கட்டிகள் பத்திரமாயிருந்தன. எடுத்து வைத்துக் கொண்டான். மேஜையடியில் உட்கார்ந் தான். தகுந்த சாவியைத் தேர்ந்தெடுக்கச் சில வினாடிகள்.

பங்களாவெங்கும் நிசப்தம். நஞ்சுண்டனின் மின்சாரக் கருவி மட்டுமே மெல்ல ரீங்கரித்தது.

சாவிகள் தயார். ஒன்று பெட்டக அறைக்கு, மற்றது பெட்டகத்துக்கு. எச்சரிக்கையாக அறையை விட்டு வெளியே வந்தான். எச்சரிக்கையாகப் படியிலிறங்கினான்.

நோயாளி இருக்கிற வீட்டில், நித்திரை நாடு கடத்தப் படுகிறது. நோயாளி தானும் தூங்க மாட்டார். பிறரையும் தூங்க விடமாட்டார். நஞ்சுண்டனுக்கு அது தெரியும். ஆகவே இரட்டிப்பு ஜாக்கிரதை கடைப்பிடித்தான்.

ஆனால் குழந்தைப்பாண்டியனின் அறையைச் சுற்றி அமைதி தவழ்ந்தது. அவருடைய அறைக்கு வெளிய சுவரில் ஒரு விடிவிளக்கு. அதன் நேர்கீழே ஒரு கூடை நாற்காலி. நர்ஸ் அம்மு, அதில் கவிழ்ந்து உட்கார்ந் திருந்தாள். படித்துக் கொண்டிருந்தவள் அப்படியே தூங்கி விட்டாள் போலும். முழங்காலைக் கட்டிக் கொண் டிருந்தாள் அவள். மடியின் இடுக்கில் ஒரு மலையாள நாவல் எட்டிப் பார்த்தது.

ஐந்து படிகள் இறங்கியிருப்பான்.

ஒரு கிர்ர்ர்ர்...

நர்ஸ் அம்முவின் தலைக்கு மேலிருந்து மணி ஒலித்தது. குபுக்கென்று எழுந்தாள். அம்மு. அந்த வேகத்தில், மடியிலிருந்த நாவல் நாலடி எகிறி விழுந்தது.

ஒரு கணம் பின்னடைந்தான் நஞ்சுண்டன். ஒரு கணம் தான். அவன் உதடுகள் முறுவலித்தன. திரும்பி ஒடவில்லை. நிதானமாக இறங்கினான் படிகளில.

குழந்தைப் பாண்டியனின் குரல் தெளிவாய்க் கேட்டது: ''நர்ஸ்! மிஸ்டர் நஞ்சுண்டனுக்கு ஏதோ வேண்டும். இறங்கி வருகிறார், பார்.''

நஞ்சுண்டன் வியப்புற்றான். மாடிப்படியை அவரால் பார்க்க முடியாது. பின்னே எப்படி அவன் வருகையைக் கண்டு கொண்டார்?

''தாகம். ஒரு டம்ளர் தண்ணீர் வேண்டும். வேறொன்றுமில்லை.'' குழந்தைப் பாண்டியனின் கட்டிலருகே வந்தான் நஞ்சுண்டன். அம்மு கொணர்ந்த தண்ணீரைப் பருகினான்: ''இன்றைக்கு எவ்வளவு மாத்திரை கொடுத்தாய்?''

சீற்றத்துடன் பதிலளிக்க வாயைத் திறந்தாள் நர்ஸ். அவனுடைய குரூரமான புன்சிரிப்பு அவள் ரத்தத்தை உறைய வைத்தது. மௌனமானாள்.

குழந்தைப் பாண்டியன் சொன்னார்: ''மற்றப் புலன்களெல்லாம் வேலையில்லாமல் சோர்ந்திருப்பதால், எனக்குக் காது மட்டும் வெகு கூர்மையாகிவிட்டது. ஒரு பல்லி நகர்ந்தால் கூடச் சொல்லி விடுவேன்.''

அம்மு வெளியேறினாள். மலையாள நாவலில் முழுகினாள்.

''தூக்கம் வராததைப் போல வேதனை எதுவுமில்லை,'' என்றான் நஞ்சுண்டன்.

''எனக்கு அப்படியில்லை. சுவையான பொழுது போக்கு.''

''பொழுது போக்கு?''

''வீடு கட்டுவேன்'' என்று மேலும் புதிராகப் பேசினார் குழந்தைப்பாண்டியன். ''பலகை வாராவதி தெரியுமில்லையா?''

''ஆமாம். அடையாறு கடைசி... பக்கிங்ஹாம் கால்வாய்க் கரை. அங்கே?''

''நாலு கிரவுண்ட் மனை வாங்கிப் போட்டிருக்கிறேன். அங்கே ஒரு வீடு கட்டியாகிறது.''

''ஏன்? இந்த வீட்டுக்கு என்ன?''

''இது ரொம்பப் பெரிது. அங்கே சின்னதாகக் கட்டுகிறேன். மேஸ்திரி தினசரி இங்கே வந்து எவ்வளவு தூரம் வேலையாகியிருக்கிறது என்று தெரிவித்து விட்டுப் போவார். அங்கே வேலைகள் நடைபெறுவதை இங்கே படுத்தபடியே மனக் கண்ணால் நான் பார்ப்பேன்.''

'அதைத் தான் பொழுது போக்கு என்றீர்களா?''

''ஆமாம். ஒவ்வொரு செங்கல் அடுக்குவதையும் கற்பனை செய்வேன். சிமெண்ட் பூசுவது, கதவு பொருத்துவது, ஒயரிங் செய்வது - எல்லாவற்றையும் பார்ப்பேன்.''

''சுவையான கற்பனைதான்.'' நஞ்சுண்டன் எழுந்து கொண்டான். ''இனிமேலாவது சிறிது தூங்குங்கள்.''

வழக்கம் போல்தான் நடந்தான். படியேறினான். ஆனால் அந்த நடையிலே ஒரு வெறுப்பு வெளிப்பட்டது. பெட்டகத்தில் கைவைப்பது அத்தனை சுலபமல்ல. அந்த உண்மை தெரிந்ததால் ஏற்பட்ட வெறுப்பு.

வேறு பல வழிகளை ஆராய்ந்தது அவன் மனம். சிந்தனை செய்தபடியே கட்டிலில் புரண்டான்.

கண் விழித்த பிறகே புரிந்தது - அப்படியே தூங்கி விட்டோமென்று. அவனை எழுப்பியது சாளர வழியே வந்த காலை வெய்யில் மட்டுமல்ல. கீழிருந்து வந்த பேச்சுக் குரலும் தான்.

யாரது இவ்வளவு பெரிய தொண்டையுடன்?

புதிய குரல். ஆண்குரல். படிப்பில்லாத பாமரனின் கொச்சைக் குரல்.

பல்விளக்குவதைப் பிற்பாடு பார்த்துக் கொள்ள லாம். கீழே வந்தான் நஞ்சுண்டன். வரும்போதே தெரிந்து விட்டது குழந்தைப் பாண்டியன் குறிப்பிட்ட மேஸ்திரி தான் வந்திருப்பவர் என்று.

காக்கி அரைக் கைச் சட்டை. கறுப்பு சிவப்புத் துண்டு. கணுக்காலுக்கு மேல் ஏறிய வேட்டி. சிவப்புக் கடுக்கண். ஆறு நாள் தாடி.

குழந்தைப் பாண்டியனின் கட்டிலுக்கு எட்ட நின்றிருந்தார் மேஸ்திரி.

ஆனால் அவருக்குக் கோபம் எதுவுமில்லை. அவர் கைகட்டி நின்றிருந்த விதத்தில் அது தெரிந்தது. சுபாவமாகவே உரத்த குரல். அவ்வளவு தான்.

''அவங்க கேட்டுக்கிட்டேதானுங்க இருப்பாங்க. நாம் கொடுத்துக்கிட்டே இருக்கறதா? நாமளும் பிழைக்க வேணாமுங்களா?..'' என்று அவர் சொல்லிக் கொண்டிருக் கையில் நஞ்சுண்டன் அறைக்குள் நுழைந்தான்.

குழந்தைப் பாண்டியன் விழிகளை அவன் பக்கம் திருப்பினார். புன்னகை செய்தார் ''லேபர் ட்டரபிள்,'' என்றார் மெல்ல, ''நேற்று சொன்னேனே, அந்த மேஸ்திரி இவர் தான்.''

''ஓகோ.'' அவரை ஏற இறங்கப் பார்த்தான் நஞ்சுண்டன். ''ரொம்பக் கோபமாயிருக்கிறாரே?''

''பின்னே என்ன சார்? கூலிக்காரங்கனனா எவ்வளவு சம்பளம் வேணுமானாலும் கேட்டிடறதா? எதுக்கும் ஒரு அளவு இருக்கணும் சார். தொலைஞ்சு போவுது. கொடுன்னு ஐயா சொல்லுறாங்க. போன மாசம் தான் பத்து ரூவா கூட்டிக் கொடுத்தோம். இப்ப...'' மேஸ்திரி சரமாரியாய்த் தன் குறையைச் சொல்லிப் புரம்பினார்.

குழந்தைப் பாண்டியன் குறுக்கிட்டார். ''நமக்கு வேலை நடக்கணும். அது தான் முக்கியம்.''

''நீங்க சும்மா இருங்க. இந்த ஆளுங்களைக் கூண்டோடு ஒழிச்சிட்டு, காஞ்சிவரத்திலேயிருந்து புதிசாய் அழைச்சிட்டு வருகிறேன். இவங்களுக்குக் கொடுக் கிறதிலே பாதி கொடுத்தால் கூடப் போதும். சலாம் போட்டு வாங்கிப்பாங்க.''

குழந்தைப்பாண்டியன், கட்டிலில் கைக்கருகே யிருந்த பொத்தானை அழுத்தினார். வெளியே இருந்த பகல் நர்ஸ் - அம்முவல்ல; அவளைக் காட்டிலும் வயதிலும் எடையிலும் அதிகமான ஒருத்தி விரைந்து வந்தாள்.

''சுகுமாரியை வரச் சொல்,'' என்ற அவளை அனுப்பினார் குழந்தைப்பாண்டியன். ''என் பெரிய பெண்ணுக்குத் தான் இந்தக் கூலி விவகாரமெல்லாம் தெரியும். வீடு கட்டுகிற கணக்கு மொத்தமும் அவள் தான் பார்த்துக் கொள்வது,'' என்றார் நஞ்சுண்டனிடம்.

மேஸ்திரி, ''வரட்டும், பெரிய குழந்தை. அதையே நியாயம் கேட்கலாம். நீங்க தாராள மனசோட எல்லாத் துக்கும் விட்டுடுவீங்க. பெரிய குழந்தை டக்டக்னு வெட்டிப்பிடும் வெட்டி!'' என்றார். பிறகு நஞ்சுண்ட

னிடமே மீண்டம் முறையிட்டார்: ''பாருங்க சார். அக்கிரமத்தை, ஐயாவைக் கேட்டுக்கிட்டுக் கூலியைக் கூட்டித் தாரேன்னு சொல்லிக் கிட்டேயிருக்கிறேன். அதுக்குள்ளாற பொறுக்கலீங்க, கழுதைங்களுக்கு. கல்லை எடுத்தவன் கல்லை வைத்தான், கூடையைத் தூக்கியவன் கூடையைப் போட்டான். சிமெண்ட் கலந்து வைச்சிருந்து துங்களே, அதைக் கூட எடுத்துப் பூசலிங்க. அப்படியே போயிட்டானுங்க...''

அவர் பேச்சை வெட்டுகிற மாதிரி உள்ளே வந்தாள் ரேணுகா.

ஒருவினாடி நஞ்சுண்டனின் பார்வையும் அவள் பார்வையும் சந்தித்தன. அவள் விழிகளில் என்ன - அது? மிரட்சியா? கலவரமா?

''அக்காவைக் கூப்பிட்டீர்களா அப்பா? எங்கேயோ வெளியே போகிறாள் இப்போதுதான்...''

''இவ்வளவு காலையிலா? எங்கே'' குழந்தைப் பாண்டியன் வியப்போடு விசாரித்தார்.

''தெரியவில்லையே? யாரோ சினேகிதர்கள் வந்தார்கள் போலிருக்கிறது. அவர்களுடன் போகிறாள்.''

''சரி. மேஸ்திரி, இரண்டு மூன்று நாளைக்கு வேலையை நிறுத்தி வையுங்கள். உங்கள் கொள்கைப்படி அவர்கள் பணிகிறார்களா பார்ப்போம்,'' என்றார் குழந்தைப் பாண்டியன்.

''பட்டினி கிடந்திச்சுன்னா புத்தி வருமுங்க!''— வீறாப்புடன் திரும்பினார் மேஸ்திரி.

அவருக்குப் பின்னால் நஞ்சுண்டன் கிளம்பி விட்டான். ரேணுகாவின் விழியில் சில அர்ஜெண்ட் அழைப்பை அவன் படித்ததே காரணம்.

குளியலறையில் காத்துக் கொண்டிருந்தாள் ரேணுகா.

பற்பசையைப் பிதுக்கிக் கொண்டே, "என்ன?" என்றான் அவன்

"என்ன துப்பறியும் வீரரோ நீங்கள்!" படபடத்தாள் ரேணுகா.

அவன் சிரித்தான். "சொல்லு."

ரேணுகா அறைக்கு வெளியே எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பினாள். குரலைச் சிறிதாக்கிக் கொண் டாள்: "அக்கா எங்கேயும் போகவில்லை. கேட்டுக்கு வெளியே-"

"வெளியே?"

"அந்தச் சைனாக்காரனுடன் பேசிக் கொண்டிருந் தாள். அப்பாவுக்குப் பதில் சொல்லிவிட்டுத் திரும்பிப் போய்ப் பார்த்தேன். காணோம்."

நஞ்சுண்டனின் முகம் கறுத்தது. "அப்போதே சொல்வதற்கென்ன இதை?"

"நீங்கள் கண்ணையும் காதையும் திறந்து வைத்துக் கொண்டிருப்பீர்களென்று நினைத்தேன்."

தன்னை உணர்ந்தான் நஞ்சுண்டன். இவளிடம் கடுமை காட்டக்கூடாது.

புன்னகை அரும்பியது அவன் உதட்டில். நீ தான் என் கண்ணுக்குக் கண்ணாக இருக்கிறாயே?'' குறும்புத் தனமாகக் கண்ணைச் சிமிட்டினான்.

ரேணுகாவின் கடுகடுப்புக் குறையவில்லை. ''நீங்கள் கொஞ்சம் கூடப் பயப்படுவதாகத் தெரியவில்லையே?''

''துப்பறியும் வீரன் என்றும் அழைக்கிறாய். பயப்படவும் சொல்கிறாய்.'' தேங்காய்ப்பூத் துவாலையில் முகத்தைத் துடைத்துக் கொண்டான். ''நான் போய்ப் பார்த்து விட்டு வருகிறேன்.''

நஞ்சுண்டன் வாசல்புறம் வந்தான். அப்போது தான் சுகுமாரி திரும்பிக் கொண்டிருந்தாள்.

''குட்மார்னிங்,'' என்றான்.

பதில் வணக்கம் வரவில்லை சுகுமாரியிடமிருந்து. நேற்றைய அவமதிப்பை அவள் இன்னும் மறக்கவில்லை என்று தோன்றிற்று.

நஞ்சுண்டன் பின்னடையவில்லை. ''எங்கே இவ்வளவு காலை வேளையில்? தற்கொலைக்கு இடம் பார்த்து விட்டு வருகிறீர்களா?''

வெடுக்கென்று திரும்பினாள் சுகுமாரி. தீப்பொறி சீறியது அவள் பார்வையில். மறுவினாடி விடுவிடுவென்று வீட்டுகுள் போய் விட்டாள்.

ஒரு விகாரமான புன்னகை கிளை விரித்தது நஞ்சுண்டனின் முகத்தில். திருப்திக்கு அறிகுறி அது. கொடிய திட்டமொன்று வெற்றிகரமாக நிறைவேறி வரும் திருப்தி.

சுகுமாரி சீனனைத்தான் சந்திக்கட்டும். ஜப்பான் காரனைத் தான் சந்திக்கட்டும். அவசரப்படும்படியாய் எதுவும் நடைபெறவில்லை. அது நஞ்சுண்டனுக்குத் தெரியும்.

வைர முருகன் ஆபத்தில்லாமல் பெட்டகத்துக்குள் தான் இருக்கிறது.

அதுவும் அவனுக்குத் தெரியும். ஏனெனில்-

பெட்டகம் உள்ள அறையைக் கூர்ந்து கவனிப் பவருக்கே புரியும்.

அறை வாசலில் பூட்டு இருந்தது. பூட்டின் மீது ஓர் நூல் - எங்கேயோ காற்றிலே பறந்து வந்து சிக்கிக் கொண்ட மாதிரி கிடக்கிறது.

நஞ்சுண்டனின் கைக்குட்டையிலிருந்து பிரித் தெடுத்த ஒற்றை நூல் அது.

எப்போது, யார் அறைக் கதவைத் திறந்தாலும் சரி அந்த நூல் கழன்றிருக்கும். கீழே விழுந்திருக்கும்.

போட்டது போட்டபடியே அப்படியே இருக்கிறது அந்த நூல். ஆகவே யாரும் பூட்டைத் திறக்கவில்லை. அறைக்குள் புகவில்லை.

தன்னைத் தானே மெச்சிக் கொண்டான் நஞ்சுண்டன். வைர முருகனைப் பற்றி அவனுக்குக் கவலை கிடையாது. சுகுமாரியைப் பற்றிக் கவலை கிடையாது.

ஒரே கவலை ரமணன்.

அவன் என்ன ஆகியிருப்பான்? நஞ்சுண்டனைத் தான் வேட்டையாடிக் கொண்டிருக்கிறானோ?

நஞ்சுண்டனின் கால்கள் நடந்தன. சளையாமல் நடந்தன.

ரமணனின் ஜாகை உள்ள தெரு வந்தது. கோடியில் ஒரு பிள்ளையார் கோவில், அதன் மதிற் சுவர் மீது உட்கார்ந்து கொண்டான்.

ஒன்று, இரண்டு மூன்று ஒரு பாக்கெட் சிகரெட்டும் காலியாகிவிட்டது. வெய்யில் ஏறியது. பொசுக்கியது. இறங்கியது. இடத்தைவிட்டு நஞ்சுண்டன் அசையவில்லை. அருகிலிருந்து பெட்டிக் கடையில் மூன்று வாழைப்பழம், ஒரு ஐஸ் போட்ட கிரஷ். அவன் சாப்பாடு முடிந்துவிட்டது.

ரமணனின் வீடு? ஊகூம். ஈ காக்கை வெளி வரவுமில்லை. உட்புகவுமில்லை. நடு நடுவே ஓர் ஆந்திரக்கார வேலையாள் வாசலுக்கு வருவான். தெருவில் எட்டிப் பார்ப்பான். இப்படியும் அப்படியும் ஆராய்வான். உள்ளே திரும்பிவிடுவான்.

யாரையோ எதிர்பார்க்கிறான் போலும்.

பிற்பகல் நாலு மணியிருக்கும்.

அந்த வேலையாள் வெளியில் வந்தான். நஞ்சுண்டனை நோக்கி வருகிற மாதிரி இருந்தது. பெட்டிக் கடைக்கு வந்தான்.

பனியன் பைக்குள்ளிருந்து ஒரு அரைச் சுருட்டை வெளியெடுத்தான். தீ வேண்டும். கடையின் இருபுறமும் ஆராய்ந்தான்.

'ஒரு அக்கி புல்ல இய்யண்டி,'' என்றான் கடைக் காரனிடம்.

கடைக்காரன் மலையாளத்தான். உச்சரிப்புத் தான் மலையாள ராகம். சொற்கள் 'சுத்தமான' பட்டணத்துத் தமிழ். ''சீ போய்யா அப்பாலே! சரியான சாவுக்கிராக்கி, ஒரு சுருட்டை அணைச்சு அணைச்சு ஒன்பது நாளைக்கு வைச்சுக்கிறே! இதிலே நெருப்புக் குச்சி வேறே ஓசி!''

அப்பாவு அசட்டுத்தனமாக இளித்தான். கடைக்காரனின் கோபம் அவனுக்குப் பழக்கமானது.

நஞ்சுண்டன் பிள்ளையார் கோவில் மதிலிலிருந்து இறங்கினான். லைட்டரை அழுத்தினான். ''இந்தாங்க, பெரியவரே!'' அப்பாவுவின் முகம் பூரண சந்திரனாயிற்று. ''பார்த்தியா ஐயா!'' என்று கடைக்காரனிடம் பீற்றிக் கொண்டான். இஸ் இஸ்ஸென்று இழுத்து, குப் குப்பென்று புகையை வீசினான்.

''நீயே வைத்துக்கொள்.''

அப்பாவுவின் கண்கள் தெறித்து விழுந்தன. ''என்னங்க இது...'' நஞ்சுண்டன் கொடுத்த பளபளப்பான லைட்டரைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

''யார் கிட்டேயும் பிச்சை கேட்காதே. அதற்காகத்தான் கொடுத்தேன். வா போகலாம்.''

குட்டி நாய்கூட இப்படி வாலை ஆட்டாது. குழைவுடன் பின் தொடர்ந்தான் அப்பாவு.

நஞ்சுண்டன் பரிவோடு கேட்டான். ''கண்ணெல்லாம் இப்படிச் சிவந்திருக்கிறதே? எண்ணெய் கிண்ணெய் தேய்த்து முழுக மாட்டாயா நீ?''

''நாகு ஏதண்டி சேப்பு? வீட்டு வேலைக்கே நேரம் சரியாப் போயிடுதுங்களே!'' என்றான் அப்பாவு.

''ஹூம். மேனாட்டிலெல்லாம் 'டொமஸ்டிக் சர்வெனட்' என்கிற பேச்சே கிடையாது.'' தனக்குத்தானே பேசிக் கொள்கிற மாதிரி நஞ்சுண்டன் முணுமுணுத்தான்.

''ஐயா என்ன சொல்றீங்க?''

''சீமையிலேயெல்லாம் கோடீசுவரர்களால் கூட வீட்டு வேலைக்காரர்கள் வைத்துக் கொள்ள முடிவ தில்லை. இங்கே என்னடாவென்றால்...! உன் எஜமானர் என்ன வேலை பார்க்கிறார்?''

அப்பாவு தலையைச் சொறிந்தான். ''அவரை எனக்கே சரியாத் தெரியாதுங்க... ஏதோ போலீஸ் பிசேஸ் தாரன்னி செப்பதுரு...''

''ஏதாவது பலகாரம் சாப்பிடுங்கிறாயா?'' நஞ்சுண்டன் நின்றிருந்த ஓட்டலின் வாசல் மிகப் பெரிது. போவதும் வருவதுமாயிருந்தன படகுக் கார்கள். ஒதுங்கி நிற்க வேண்டியிருந்தது இருவரும்.

''என்னாங்க... இவ்வளவு பெரிய ஓட்டலிலே... நான்...'' அப்பாவுவுக்குச் சொற்கள் தடுமாறின.

''பரவாயில்லை, வா. காசை வீசினால் கழுதைக்குக் கூட உபசாரம் பண்ணுவார்கள். உனக்கென்ன?''

பச்சைக் கம்பளம் போன்ற புல்வெளி. வெண் புறாக்கள் போல் நடமாடும் வெயிட்டர்கள். பளபளக்கும் கத்தி, முள் கரண்டி. வெயிட்டர் சிரித்திருப்பார். அப்பாவுவைக் கண்டு, நஞ்சுண்டனின் கண் ஜாடை தடுத்தது.

''சாருக்கு என்ன கொண்டு வரட்டும்?'' என்று பணிந்து குனிந்து அப்பாவுவை விசாரித்தார்.

விலையுயர்ந்த உணவு வகைகள் வந்தன. மறைந்தன. ஃப்ரூட் சாலட்டுடன் கச்சேரி முடிவடைந்தது.

நடுநடுவே நஞ்சுண்டனின் நோக்கமும் நிறைவேறிக் கொண்டிருந்தது.

அப்பாவுவிடமிருந்து தகவல்கள் சரமாரியாய் வந்து கொண்டிருந்தன.

''அது தான் சொல்றேனுங்களே... எவனோடாவது அடிச்சுகிட்டு பிடிச்சுக்கிட்டு தான் இருப்பாரு... இப்ப பாருங்க, இரண்டு நாள் முந்தி எவனோ ஒரு திருட்டுப் பயல் ராவு அவர் வீட்டுக்குள்ளாற புகுந்து அடிச்சு, கையைக் காலைப் போட்டுப் போயிட்டான். இப்ப அவனைத் தேடிக் கண்டுபிடிக்கப் போகிறேன்னு போயிருக் கிறார்...''

''இப்போது ஸிடியிலே தான் இருக்கிறாரா அப்படி யானால்?''

''ஆமாங்கங்கிறேன். எதினாச்சும் வித விதமா வேசம் போட்டுக்கிட்டு, வேளை கெட்ட வேளையிலேயெல்லாம் வந்து நிற்பாரு... நேனு அன்னம், நீலு ரெடிக பெட்ட வால்,'' என்று அப்பாவு அலுத்துக் கொண்டான்.

நஞ்சுண்டன் மோவாயைத் தடவிக் கொண்டான். அவன் முகத்தில் நம்பிக்கை படரவில்லை. பீங்கான் தட்டில் பில் வந்தது. பணத்தை வைத்தான். புறப்பட்டான்.

ஓட்டல் வாசலை அடைந்தார்கள். கையெடுத்துக் கும்பிட்டான் அப்பாவு. ''நீங்க யாருன்னே சொல்லலீங்களே?''

''உன் நண்பனென்று வைத்துக் கொள்ளேன்.'' டாக்ஸியைக் கூப்பிட்டான் நஞ்சுண்டன். ''வா, உன்னை உன் வீட்டிலே இறக்கிவிட்டுப் போகிறேன்.''

டாக்ஸி சவாரியும் கிடைத்தது அப்பாவுவுக்கு. கும்பிடுகளும் இரட்டிப்பு மடங்காயிற்று. தன் வீட்டு வாசலில் விடைபெற்றுக் கொண்டான்.

டாக்ஸி நகர்ந்தது. இரண்டு வீடுகள் தாண்டியதும் டிரைவரின் முதுகில் தட்டினான் நஞ்சுண்டன். ''நிறுத்து.''

வண்டி நின்றது. ''கொஞ்சம் வெயிட்டிங்க் போட்டுக் கொண்டு இரு,'' என்றான். இறங்கினான். ரமணனின் வீட்டுக்குத் திரும்பினான்.

அடிமேலடி வைத்து மாடியை அடைந்தான். அப்பாவு பாயை உதறிப் போட்டுக் கொள்ளும் ஓசை. அதே சமயம் அடுத்த அறையில் டெலிபோன் கிணுகிணுத்தது.

அப்பாவு அதைக் கேட்க விரைந்தான். நஞ்சுண்டனும் தான். சுவரோடு ஒட்டிக் கொண்டு முன்னேறினான்.

அப்பாவுவின் குரல் நன்கு கேட்டது: ''ஹலோ, என்னங்க டிரங்காலா? கல்கத்தாவிலிருந்தா...'' இரண்டு வினாடி மௌனம். பிறகு இன்னும் பலமான குரலில்: ''ஹலோ ஆமாங்க... நான் அப்பாவுதான், சார். நீங்க சொன்னாப்போலேயே நடந்துதுங்க... கொஞ்சம் முந்தி தான் ஓர் ஆள் என்னை ஓட்டலுக்கு அழைச்சிட்டுப் போனாரு... அயின கார்சில் பாக தின்னானு... உங்களைப்

பத்திக் கேட்டாரு. மெட்றாசிலேதான் இருக்கீங்கன்னு சொல்லிட்டேன். கல்கத்தா போயிருக்கீங்கன்னு சொல்லிட்டேன்... கல்கத்தா போயிருக்கீங்கன்னு சொல்லலை. இரண்டுமூணு மாசம் ஆகும் நீங்க திரும்பி வர அப்படீங்கிற தையும் சொல்லலை.''

நஞ்சுண்டன் நழுவினான் மெதுவாய். இப்போது தான் அவன் முகத்தில் மகிழ்ச்சி நிலவியது. தெருவுக்கு வந்தான். டாக்ஸியில் ஏறியமர்ந்து, குழந்தைப் பாண்டியனின் விலாசத்தைச் சொன்னான்.

டாக்ஸி பறந்தது.

சில நிமிடங்களுக்குப் பின்னர்.

அப்பாவு கதவைப் பூட்டிக் கொண்டு மாடியிலிருந்து இறங்கினான். நஞ்சுண்டன் புறப்பட்டுப் போயாயிற்று என்பதை உறுதிப்படுத்திக் கொண்டான். தெருக் கோடிக்குப் போனான்.

பொது டெலிபோன் கூண்டிலிருந்து சிரித்தவாறே வெளிப்பட்டான் ரமணன்.

''நீங்க சொன்னாப்போலேயே அந்த ஆள் ஒளிஞ்சிருந்து கேட்டானுங்க நான் பேசினதெல்லாம்,'' என்றான் அப்பாவு.

''கல்கத்தாவுக்குப் பேசுகிற மாதிரியே நன்றாய்ச் சத்தம் போட்டுப் பேசினாயே!'' முதுகில் தட்டிக் கொடுத்தான் ரமணன்.

''ஒரு சந்தேகமுங்க. அது ஏனு முதலிலே நிஜத்தைச் சொல்லச் சொன்னீங்க?''

ரமணன் சிரித்தான் ''அப்பாவு, நிஜம் என்பது தாலி கட்டிய பெண்டாட்டி, பொய், சினிமா நடிகை. யாருக்குக் கவர்ச்சி அதிகம்?''

அப்பாவு அசடு வழியச் சிரித்தான்.

''உண்மையை அப்படியே சொன்னாய். அதிலே அவனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. பொய்யை ஒளிந்திருந்து, ரகசியமாய்ச் சொன்னாய். நம்பிக்கொண்டு போயிருக்கிறான். இருக்கட்டும் அப்படியே. நான் கண்காணாத இடத்துக்குப் போய்விட்டேன் என்று தெரிந்தால் தான் அவன் வால் நன்றாக ஆடும். ஆடட்டும்.'' என்றான் ரமணன்.




அன்று தேதி எட்டு. பரபரப்பு! சுறுசுறுப்பு! அதுதான் அன்றைய மந்திரம்.

குழந்தைப்பாண்டியனின் பங்களா, புத்துணர்ச்சி யுடன் கண்விழித்தது. மாடியில், வரவேற்பறையில், ஹாலில் தோட்டத்தில் குழந்தைப்பாண்டியனின் கட்டிலறை யில் எங்கும் எதிலும் ஓர் அவசரம், ஒரு பதற்றம்.

வாசல் கேட்டிலிருந்து பங்களா படியேறும் வரை உலர்ந்த சருகுகள் பாய் விரித்திருப்பது வழக்கம். இன்று அதைத் தோட்டக்காரன் சரசரவென்று கூட்டித் தள்ளினான். வரவேற்பறை நாற்காலிகளை வேலைக்காரன் துடைத்துத்

துடைத்து மெருகேற்றினான். சின்ன எஜமானி, பெரிய எஜமானிகளின் காலணிகள் கதவருகே இறைந்து கிடக்கும். ரேணுகா கிடுகிடுவென்று அப்புறப்படுத்தினாள். குளிர்பதனப் பெட்டி உண்டு. ஆனாலும் பழங்கள் வாடி யிருப்பதே வாடிக்கை. பிளாஸ்குகள் உண்டு. ஆனால் வென்னீர் ஆறியே இருக்கும். அப்படி இல்லாமல் இன்று சமையற்காரி எச்சரிக்கையாக இருந்தாள்.

நஞ்சுண்டனுக்கு ஆச்சரியமாக இருந்தது. வெராந்தாவில் நின்றபடி வீட்டைப் பார்த்தான். தோட்டத்தில் குழந்தை வெய்யில் தவழ்ந்தது. நாற்காலி போட்டுக் கொண்டு அமர்ந்துள்ளவள் ரேணுகா. அவள் முதுகுப்புறம் தெரிந்தது. காலைத் தினசரி, கையில்.

டூத் பிரஷைப் பல்லில் கடித்துக் கொண்டான் நஞ்சுண்டன். கீழிறங்கி வந்தான்.

பதறியெழுந்தாள் ரேணுகா. ''ஐயையோ! இதென்ன கோலம்! வாராத தலை! கசங்கிய நைட் டிரஸ்! வாயிலே டூத் பிரஷ்! போங்கள், போங்கள்!''

தண்ணீர்த் தொட்டியின் மீது காலைத் தூக்கி வைத்துக் கொண்டான் நஞ்சுண்டன். ''திடீர்ப் புரட்சிகள் எனக்குப் பிடிக்காது. என்ன இதெல்லாம்?''

''இன்றைக்குத் தேதி எட்டு. டாக்டர் நாமகிரி வருகிற நாள்.''

''டாக்டர்...?''

''நாமகிரி என்றேன். அப்பாவைக் கவனிக்கும் நியூராலஜி ஸ்பெஷலிஸ்டு. மாதாமாதம் எட்டாம் தேதி மட்டுமம் தான் வருவார். தேவையான இன்ஸ்ட்ரஷன்

களை நர்ஸிடம் குறித்துக் கொண்டுத்துவிட்டுப் போய் விடுவார்.'' ரேணுகாவின் பதற்றம் கெஞ்சலாக மாறியது. ''தயவு பண்ணி, போங்கள். வேறு டிரஸ் பண்ணிக் கொண்டு...''

நஞ்சுண்டன் சிரித்தவாறு கேட்டான்:

''டாக்டர் நாமகிரியின் வயது என்ன?''

''நாற்பதுக்கு மேல்

''அப்பாயானால் இப்படியிருப்பதே போதும். அலங்காரம் எதற்கு?'' டூத் ரஷிலிருந்து நுரை வழிய ஆரம்பித்தது.

''நீங்களும் உங்களுடைய வேடிக்கையும்!'' ரேணுகாவுக்கு மெய்யாகவே கோபம் வந்துவிட்டது. ''அந்த டாக்டர் ஒரு சுத்த சிடுசிடு. எதையாவது குற்றம் சொல்லும். முணுமுணுக்கும். நீட்டாய் இருக்கணும். கச்சிதமாய் இருக்கணும். இல்லையோ, போச்! எங்கள் எல்லோருக்கும் அதனிடம் குலை நடுக்கம். ஆனால் ஸ்பெஷலிஸ்ட் என்றால் ஒன்றாம் நம்பர் ஸ்பெஷலிஸ்ட்! ஆகவே யாரும் அவளை எதிர்த்துப் பேச மாட்டார்கள்...''

''விருந்தாளிகள் கூடவா பயப்பட வேண்டும் என்கிறாய்?''

''பயப்பட வேண்டாம். டாக்டர் சுள்ளென்று எரிந்து விழுவதற்கு இடம் கொடுக்காதீர்கள் என்கிறேன்.''

''உலகத்தில் இல்லாத டாக்டர் பிடித்தீர்களே!''

''உலகத்தில் இல்லாத டிடெக்டிவைப் பிடித்திருக்கிற போது டாக்டரைப் பிடிக்கக் கூடாதா?''

ஓரக் கண்ணால் அவளை ஆராய்ந்தான் நஞ்சுண்டன். ஏதோ உள்ளர்த்தம் வைத்துப் பேசுகிறாளோ என்ற பயம் ஏற்பட்டதே காரணம். அப்படியொன்று மில்லை. ரேணுகா புன்னகைதான் செய்து கொண்டிருந்தாள்.

''சரி. மாப்பிள்ளை மாதிரி இருக்க வேண்டும். அவ்வளவு தானே ஐந்தே நிமிடம்.'' நஞ்சுண்டன் கையைச் சொடுக்கினான். மாடிக்கு விரைந்தான்.

அவன் கீழே வந்த போது - டாக்டர் நாமகிரி வந்துவிட்டாள். அழகியென்று சொல்ல முடியாது. ஆனால் வாட்டசாட்டமான உடல் வாகு. கெடுபிடியின் அவதாரம். மூக்குக் கண்ணாடி. டாக்டர் என்பதற்கான ஒரே அறிகுறி: மடியில் கிடந்த ஸ்டெதஸ்கோப்.

''இங்கே பாருங்கள், குழந்தைப்பாண்டியன். சுத்தமும் சுகாதாரமும் தான் பாதி வைத்தியம். சொல்லி விட்டேன்.'' நர்ஸ் பயபக்தியுடன் நீட்டிய 'சார்ட்' டைப் பார்த்தவாறே டாக்டர் நாமகிரி பேசிக் கொண்டிருந்தாள். உடம்பின் வயதில் பாதி தான் இருக்கும் குரலுக்கு.

குழந்தைப்பாண்டியன் மெல்லச் சிரித்தார். டாக்டரம்மாளின் கறார்கள் அவருக்குப் பழக்கமானவை; பிடித்தமானவை. ''இப்போது என்ன அசுத்தமாக நடந்து விட்டது?''

காலின் கீழே குனிந்து எதையோ பொறுக்கினாள் டாக்டர் நாமகிரி. உள்ளங்கையில் வைத்து விரித்துக் காட்டினாள். ''பார்த்துக் கொள்ளுங்கள் - சாத்துக்குடி விதை! அறையைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளக் கூட நர்ஸுகளுக்குத் தெரியவில்லை...''

அவள் பேச்சுத் தடைப்பட்டது - சுகுமாரியின் வருகையினால்.

''குட் மார்னிங் டாக்டர்,'' என்றாள் உள்ளே நுழைந்ததும்.

நிமிர்ந்து பார்த்த டாக்டர் நாமகிரி ஒரு வினாடி பேச வில்லை. பிறகு ''உன் தொண்டை இவ்வளவு மோசமாய்ப் போய்விட்டதே! இது தான் நீ டான்ஸில் ஆபரேஷன் செய்து கொண்ட லட்சணமா?'' என்றாள்.

சுகுமாரி அப்பாவுக்கு மறுபுறமிருந்த தங்கையைப் பார்த்தாள்.

''கற்றுக்குட்டிகளிடமெல்லாம் போய் வைத்தியம் பண்ணிக் கொண்டால் இந்தக் கதி தான்! ஹூம்!'' என்றாள் டாக்டர் நாமகிரி.

ரேணுகாவினால் அதற்கு மேல் சும்மா இருக்க முடியவில்லை போலும். ''டாக்டர் பாலசந்தர்தான்...''

''ஐ நோ, ஐ நோ!'' இடைமறித்தாள் டாக்டர் நாமகிரி. ''அவன் ஒரு சின்னப் பையன் எம்.பி.பி.எஸ். டிகிரி வாங்கிவிட்டால் சரியாகிவிட்டதா? உனக்குத் தெரிந்தவன் என்பதற்காக உன் ஸிஸ்டரையே காவு கொடுக் கணுமா? அவன் சுத்த மர்டரர்...'' எட்ட நின்றிருந்தான் நஞ்சுண்டன். அவன் கவனம் வேறு திசையில் திரும்பி விட்டது. காரணம். போர்டிகோவில் ஒரு சைக்கிள் பையன் நின்றது தான்.

இரண்டெட்டில் வாசலை அடைந்தான்.

''ரேணுகா அம்மாவைப் பார்க்கணும் சார். ஒரு லெட்டர்,'' என்றான் பையன்.

''கொடுத்துவிட்டுப் போ.''

நஞ்சுண்டனின் நீட்டிய கையை அந்தப் பையன் நிரப்பவில்லை. ''ரேணுகா அம்மாகிட்டே தான் தருவேன்.''

''டேய்!'' பையனின் கையை வலித்து முறுக்கப் போனான் நஞ்சுண்டன். அதற்குள்-

''என்னடா சோமு? எங்கே வந்தாய்?'' என்று கேட்டுக் கொண்டே ரேணுகா வந்து விட்டாள்.

பையன் கடிதத்தை நீட்டினான். ரேணுகா வாங்கிக் கொண்டாள். பிரித்துப் பார்த்தாள். ''சரியென்று சொல்லு? போ,'' என்றாள்.

பையன் போய் விட்டான். ரேணுகாவும் வீட்டுக்கள் திரும்பிவிட்டாள்.

எல்லாம் இரண்டு நிமிட நேரத்துக்குள். நஞ்சுண்டன் உதட்டைக் கடித்துக் கொண்டான். ரேணுகா கூட என்னவோ மர்மமாகச் செய்து கொண்டிருக்கிறாளே! சைக்கிளில் வந்த பையன் யார்? யாரிடமிருந்து அவளுக்குக் கடிதம் கொண்டு வந்து தந்தான்? எதற்கு அவள் சரியென்று சொல்லச் சொன்னாள்?

யோசிக்க அவகாசமில்லை.

டாக்டர் நாமகிரி புறப்பட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது.

படுக்கையிலிருந்த குழந்தைப்பாண்டியன், ''உங்களுக்கு வெள்ளரிப் பிஞ்சு ரொம்பப் பிடிக்குமில்லை?'' என்று கேட்டார்.

அப்பாடா! அந்தச் சிடுசிடு முகத்திலும் ஒரு புன்னகைக் கீற்று! ''ஆமாம்!'' என்றாள் டாக்டர் நாமகிரி.

''ரேணுகா! பாஸ்கெட்டில் தனியாய் எடுத்து வைக்கச் சொன்னேனே. கொண்டு போய் டாக்டரின் காரில்வை,'' என்றார் குழந்தைப்பாண்டியன்.

''ஒரு பாஸ்கெட்டே வருகிறதா! தேவலையே!'' டாக்டர் நாமகிரியின் புன்னகை மேலும் பெரிதாயிற்று!

ரேணுகா ஒரு சின்னப் பிரம்புக் கூடையை உள்ளிருந்து எடுத்து வந்தாள். ''இரு,'' என்று கை நீட்டினாள் டாக்டர் நாமகிரி. ஒரே ஒரு பிஞ்சை எடுத்துக் கொண்டாள். சின்னக் குழந்தை போல ஆசையுடன் வெடுக்கென்று கடித்தாள். அவள் சந்தோஷத்தைக் கண்டு குழந்தைப் பாண்டியனுக்கும் ஏகப்பட்ட சந்தோஷம். ''பாபனாசத்திலிருந்து வந்தது,'' என்றார்.

''என்னது!'' என்றாள் டாக்டர் நாமகிரி. வெள்ளரியில் பாதித் துண்டு வாயிலும் பாதித் துண்டு கையிலும் நின்றது.

குழந்தைப் பாண்டியனுக்கு அவளுடைய முக மாறுதல் தெரியவில்லை. ''பெரிய மைனர், சின்ன மைனர் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களோ? எனக்கு நெருங்கிய சினேகிதர்கள். நேற்று அவர்கள் தான் இதை...''

''ரேணுகா!'' இம்முறை டாக்டர் நாமகிரியின் குரலில் சந்தேகத்துக்கு இடம் இருக்கவில்லை. ரேணுகா திடுக்கிட்டுத் திரும்பினாள். ''அது வேண்டாம். திருப்பிக் கொண்டு போய் வைத்து விடு.''

டாக்டர் நாமகிரி விருட்டென்று அடுத்த அறைக்குச் சென்றாள். அங்கே வாஷ் பேசின் உண்டு. வாயிலிருந்ததைத் துப்பிவிட்டு, கொப்புளித்தாள். கையிலிருந்ததைக் குப்பைக் கூடையில் எறிந்து விட்டுத் திரும்பினாள்.

திகைத்தபடியே நின்றிருந்தாள் ரேணுகா. வெள்ளரிப் பிஞ்சுகள் கொண்ட கூடை அவள் கையிலோயே இருந்தத.

''வேண்டாமென்று சொன்னேனே? காது கேட்க வில்லை?'' என்று டாக்டர் நாமகிரி சிடுசிடுத்தாள். பிறகு ஒரு வெட்டுப் பார்வையுடன் குழந்தைப் பாண்டியனின் பக்கம் திரும்பினாள். ''வருகிறேன்,'' என்று ஒரே வார்த்தை தான். போய்விட்டாள்.

படீரென்று கதவைச் சாத்திக் கொள்ளும் சத்தம் கேட்டது. எஞ்ஜினின் சீறல்.

டாக்டர் நாமகிரி போய்விட்டாள். நஞ்சண்டன் உள்ளே வந்தான். ''ரொம்பக் கோபக்காரி போலிருக்கிறது!'' ரேணுகாவின் கூடையிலிருந்து ஒரு பிஞ்சை எடுத்துக் கடித்தபடி சிரித்தான்.

''வெள்ளிரிப் பிஞ்சின் மீது கோபமில்லை. பாபனாசம் என்றதும் தான் கோபம்,'' என்றார் குழந்தைப் பாண்டியன்.

''கொடுமைக்கார மாமனார், மாமியார் அந்த ஊரில் இருக்கலாம்.''

''நீங்கள் ஒன்று! அந்த அம்மாளுக்குக் கல்யாணமே ஆகவில்லை.''

''இந்தச் சிடுமூஞ்சியை எவன் செய்துகொள்வான்!''

குழந்தைப்பாண்டியன் சோகத்துடன் புன்னகை செய்தார். ''கோபக்காரிதான். ஆனால் காரணமில்லாமல் இவ்வளவு தூரம் கோபித்து இப்போது தான் பார்க்கிறேன். வெள்ளரிப் பிஞ்சைக் கொடுத்த என்னையும் சேர்த்தல்லவா அவமதித்து விட்டுப் போய்விட்டாள்! ஹூம் என் ராசி அது!''

நஞ்சுண்டனின் பார்வை வாசலுக்குத் தாவியது. எங்கே போகிறாள் ரேணுகா? அவசரமாய் வெளியே வந்தான். நல்ல வேளை, ரேணுகா காரை எடுத்துக் கொண்டு போகவில்லை. இரண்டு பங்களா தள்ளியிருந்த பஸ் ஸ்டாப்பை நோக்கிச் சென்றாள். நஞ்சுண்டன் அவளைப் பின் தொடருவதற்காக வாசலுக்கு வந்த சமயம், அங்கே ஒரு பஸ் வந்து நின்றது. அதில் ஏறிக் கொண்டாள் ரேணுகா.

நஞ்சுண்டன் பஸ்ஸைக் கவனித்தான். அது தியாகராயநகர் போகிற பஸ்.

வட துருவம் தென் துருவம் என்பதுபோல, உஸ்மான் ரோடின் ரயில்வே ஸ்டேஷன் பக்கத்தையும், இந்தி பிரசார சபா பக்கத்தையும் பார்த்தால் போதும். அது அத்தனை அமளி. இது இத்தனை அமைதி.

சிற்சில குழந்தைகளின் சிரிப்பு; இரண்டொரு சைக்கிள்களின் கிண்கிணி. நாலைந்து பெண்மணிகளின் பேச்சுக் குரல். இவையன்றி வேறில்லாத பகுதியில் ரேணுகா சென்று கொண்டிருந்தாள்.

அந்தப் பகுதியின் சாந்தத்தை லேசாய்க் கலைக்கிற மாதிரி ஒரு சிறிய கட்டிடம். குட்டிக் காம்பவுண்டு. உள்ளே

ஒரு டிஸ்பென்ஸரி. கன்ஸல்ட்டிங் அறை. இரண்டுக்கும் நடுவேயுள்ள பெஞ்சுகளில் ஏழெட்டு நோயாளிகள்.

இந்தக் கட்டிடத்தின் பின் பகுதியில் ஒரு நர்ஸிங் ஹோம் இருக்கிறது. மூன்று அறைகள்; ஓர் ஆபரேஷன் அறை நோயாளியோ டாக்டரோ அங்கு தென்படக் காணோம்.

காற்றினால் பாதி சாத்தியிருந்தது. தெருப்புறத்து மர கேட். ரேணுகா அதைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தாள். மீண்டும் சாத்திக் கொள்ளாதபடி கதவின் இடுக்கில் ஒரு கல்லை நகர்த்தி வைத்தாள்.

படியினருகே 'டாக்டர் பாலசந்தர் எம்.பி.பி.எஸ்.' என்று பித்தளைப் பலகையில் பளபளத்தன எழுத்துக்கள். ரேணுகாவின் கலவரம் நிறைந்த முகத்தில் ஒரு நெகிழ்ச்சி. ஒரு மலர்ச்சி.

டாக்டர் பாலசந்தர் அவள் சகோதரிக்கு வைத்தியம் செய்தவன் மட்டுமல்ல: அவளுடைய உள்ளங் கவர் காதலனும் கூட.

அரை வினாடி தான். உள்ளங் கையில் கசங்கிக் கொண்டிருந்த காகிதத் துண்டு அவளுக்கு நினைவூட்டியது. படியேறிச் சென்றாள்.

டாக்டர் பாலசந்தர் இளைஞன்தான். லேசாய்ப் பூசின மாதிரி உடம்பு. முகத்தில் சினிமாக் கதாநாயகன் போன்ற களை. புருவங்களை ஆண்மை நிறைந்து தடித்து அடர்ந்தவை. தலையைப் படியப் படிய வாரிக் கொள்ள மட்டும் அவகாசம் இல்லாதவன் போலும்.

ஒரு குழந்தையின் அக்குளில் தர்மா மீட்டரை வைத்துக் கொண்டிருந்தவன், ரேணுகாவைக் கண்டான். ''பிடி'' என்று குழந்தையின் தாயிடம் பிடித்துக் கொள்ளச் சொன்னான். ''வா ரேணுகா,'' என்று அவள் தோளைப் பற்றினான். கன்ஸல்ட்டிங் அறைக்குள் அழைத்துக் கொண்டு சென்றான் வேகமாக.

பையனொருவன் வாஷ் பேசினைத் துடைத்துக் கொண்டிருந்தான். ''வெளியே போய் இரு.'' என்று அவனை விரட்டினான் பாலசந்தர்.

ரேணுகாவின் கலக்கம் எட்டடி பதினோரடியாகப் பாய்ச்சலெடுத்தது. கவலையுடன் பேசினாள்: ''எதற்காக இவ்வளவு அவசரமாய் என்னை வரச் சொன்னீர்கள்? டெலிபோனில் கூப்பிட்டிருக்கக் கூடாதோ?''

பாலசந்தர் ஒரே படபடப்பாக இருந்தான். அது அவன் பார்வையிலும் பேச்சிலும் செயலிலும் வெளிப் பட்டது. ''கூடாது, கூடாது. பல சமயங்களில் நான் கூப் பிட்டதும் உன் அக்கா சுகுமாரி போனை எடுத்து, 'நான் தான் ரேணுகா' என்று விளையாடியிருக்கிறாள். அவள் குரலைக் கவனிக்காமல் நானும் ஏமாந்து பேசி யிருக்கிறேன். இந்தத் தடவை உன்னிடம் மட்டும் தான் எனக்குப் பேச வேண்டும். அவளோடு நான் பேசத் தயாராயில்லை!''

ரேணுகா அவனுக்காகப் பரிதாபப்பட்டாள். ''அடடா! ஏன் தான் இப்படி உணர்ச்சி வசப்படுகிறீர்களோ, சந்தர்? ஒரு டாக்டர் இப்படி இருக்கலாமா?''

''போதும் நான் டாக்டராகி நாசமாய்ப் போனது! போச்சு! என் கேரீரே போச்சு! என் எதிர்காலமே போச்சு!

எல்லாம் உன்னால் தான்! உன் அக்காவினால் தான்!'' பின் கை கட்டிக் கொண்டு ரேணுகாவின் முன்னே குறுக்கும் நெடுக்கும் நடந்தான் பாலசந்தர்.

''சந்தர்!'' அவன் கையைப் பிடித்து நிறுத்தினாள் ரேணுகா ''நின்று நிதானமாய்ப் பேசப் போகிறீர்களா? இல்லை, நான் போய்விடட்டுமா? என்னால் என்ன நேர்ந்ததென்று கொஞ்சம் அமைதியாகத் தான் சொல்லுங்களேன்,''

அவளுடைய அதட்டலுக்கும் பேச்சுக்கும் அவன் நடுநடுவே கட்டுப்படுவதுண்டு. உஸ்ஸென்று பெருமூச்சு விட்டான். நெற்றியில் சுளீரென்று அறைந்து கொண்டான். ரேணுகாவின் எதிரில் அமர்ந்து அமைதியாகப் பேச வாயெடுத்தான்.

வெளியே ஒரு குழந்தை அலறத் தொடங்கியது. தர்மாமீட்டரைப் பிடித்திரந்த தாய், ''டாக்டர்...'' என்று மெதுவாகக் கூப்பிட்டாள்.

''காத்திருப்பவர்களைக் கவனித்துவிட்டு வாருங்கள். நான் இங்கேயே இருக்கிறேன். என் ஸ்கூல் கூட இன்று லீவு தான்,'' என்றாள் ரேணுகா.

பாலசந்தர் வெளியே சென்றான். ஆனால் அவள் கோரிக்கையை நிறைவேற்றவில்லை. ''தயவு பண்ணிச் சாயந்தரம் வாருங்கள் எல்லோரும் எனக்கு ஒரே தலைவலி. ஜுரம் வரும் போலிருக்கிறது,'' என்றான்.

நோயாளிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பாலசந்தரிடம் ஏதோ சொல்ல நினைத்தார்கள். ஆனால் அவன் உள்ளே திரும்பிவிட்டான். ''அனுப்பி

விட்டேன் எல்லோரையும்,'' என்றான் ரேணுகாவிடம். அவள் சீற்றத்தைக் கூடப் பொருட் படுத்தவில்லை.

ரேணுகா உரிமையோடு கண்டித்தாள். ''இப்படி நடத்தினால் டிஸ்பென்ஸரியையும் நர்ஸிங்ஹோமையும் இரண்டே நாளில் இழுத்து மூட வேண்டியது தான்.''

பாலசந்தர் பல்லைக் கடித்தான்.

''கவலைப்படாதே. அதற்கான உதவிகளை உன் அக்கா செய்து கொண்டு வருகிறாள். கொஞ்ச நாளில் அவள் விருப்பம் நிறைவேறிவிடும்!''

''என்னவெல்லாம் பேசுகிறீர்கள் சந்தர்!''

''இவ்வளவோடு நிற்கிறேனே, அதைப் பாராட்டு!'' பாலசந்தரின் முகம் சிவந்தது. ரேணுகாவின் தோளை உலுக்கி முகத்தை நிமிர்த்தினான். ''ரேணுகா! உன் அக்காவுக்கு நான் டான்ஸில் ஆபரேஷன் செய்தாலும் செய்தேன். சாதாரணப் பேனாக் கத்திகூடப் பிடிக்க தெரியாத மடையன் என்ற பெயர் ஏற்பட்டுவிட்டது எனக்கு!''

தோளை அழுத்தும் வலுவான கரத்தில் ஆறுதலாகத் தட்டிக் கொடுத்தாள் ரேணுகா. ''சந்தர்! ஏன் வீணான கற்பனைகளெல்லாம் செய்து கொள்கிறீர்கள்? சுகுமாரி டான்ஸில் ஆபரேஷன் செய்து கொண்டது, அதுவும் உங்களிடம் பண்ணிக் கொண்டது இந்த ஸிடி பூராவுக்குமா தெரிந்திருக்கும்?''

''டாக்டர்களின் உலகமே தனி ரேணுகா. உனக்குத் தெரியாது. கொஞ்சம் தலையெடுக்கிறவனாகத் தோன்றி

னால் நூறாயிரம் கண்கள் கூர்ந்து கவனிக்கும். ஒவ்வொரு கடுகுத் தவறையும் பூசணியாக்கிப் பேசும். ரேணுகா! உன் அக்காவுக்கு இவ்வளவு பெரிய பரந்த நகரத்தில் வேறு ஆஸ்பத்திரியா கிடைக்கவில்லையா? அவளை நீ என்னிடம் தானா அழைத்து வந்திருக்க வேண்டும்?'' முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டான் பாலசந்தர்.

''சே! ரொம்ப மோசம் நீங்கள்! ரொம்ப மோசம்!''

அவன் கோபமாகத் தலை நிமிர்ந்தான்.

''ரேணுகா! உனக்கு என் வாழ்க்கை ஓரளவாவது தெரியும். இல்லையா? என்னைப் படிக்க வைத்தவர், டாக்டராக்கியவர், இந்த நர்ஸிங்ஹோம், டிஸ்பென்ஸரி எல்லாவற்றையும் கட்டித் தந்தவர் என் மாமா! பிள்ளையில்லாக் குறையை என் மூலம் தீர்த்துக் கொண்டவர் அவர். தன் கையிலிருந்த கடைசிப் பைசா வரையில் எனக்காகச் செலவழித்து விட்டு இன்று நடுத் தெருவில் நிற்கிறார். அவரைக் கடைசிக் காலத்தில் வசதியாக வைத்துக் கொள்வதற்காவது நான் முன்னுக்கு வந்தாக வேண்டும்.''

''தாராளமாய் வருவீர்கள். ஒன்றும் கெட்டுவிடவில்லை இப்போது.''

''சுகுமாரியின் குரலைக் கேட்கிறவர்கள் என்னை என்னவெல்லாம் கிண்டல் பண்ணுகிறார்கள் தெரியுமா? நீ டாக்டருக்குப் படித்திருந்தால் இங்கேயே இப்போதே விளக்குவேன் - எப்படியெல்லாம் எச்சரிக்கை எடுத்துக் கொண்டு, என்ன கவனமாய் ஆபரேஷனைச் செய்தேனென்று...''

இடைமறித்துச் சமானதானப்படுத்தினாள் ரேணுகா. ''எம்.பி.பி.எஸ். படிக்காமலே எனக்குப் புரிகிறது சந்தர். உங்கள் மீது எவ்விதத் தவறுமில்லை. நீங்கள் விளக்கவே வேண்டாம்...''

''உன் அக்காவாயிற்றே என்பதால் சில விஷயம் சொல்லாமல் பொறுத்திருக்கிறேன் ரேணுகா. அவளுக்கு என்னென்னவோ சினேகிதங்கள், ஏதேதோ பழக்கங்கள்...''

''சந்தர்!''

''மெய்யாகத்தான் சொல்கிறேன். எவனோ சீனாக் காரன் அடிக்கடி அவளைச் சந்தித்துக் கொண்டிருந்தான். சுகுமாரிக்கு அபினிப் பழக்கமோ, கஞ்சாப் பழக்கமோ...''

''சந்தர்! நிறுத்துங்கள்!'' என்று உரத்த குரலில் கத்தினாள் ரேணுகா. ''நம் காதலை முன்னிட்டு இவ்வளவு பேச்சையும் பொறுத்தேன். என் சகோதரியைப் பற்றி நீங்கள் ஆதாரமில்லாமல் அவதூறு பேசுவதை இனி ஒரு நிமிடமும் அனுமதிக்க மாட்டேன்!''

பாலசந்தர் அடங்கிப் போனான். குரல் தணிந்தது. ''ரேணுகா! என் நிலைமை புரியாததால் ஆத்திரப் படுகிறாய். சோம்நாத் ஃபௌண்டேஷன் என்று கேள்விப் பட்டிருக்கிறாயா?''

திடீரென்று அவன் பேச்சு வேறெங்கோ தாவுகிறதே? ரேணுகாவுக்குக் குழப்பம் ஏற்பட்டது. 'சோம்நாத் ஃபௌண்டேஷனா? ஏதோ கல்வி சம்பந்தமான காரியங் களுக்கு உபகாரச் சம்பளம் கொடுப்பவர்கள் என்று...''

''அது தான், அது தான்,'' என்றான் பாலசந்தர். ''தமிழ் நாட்டிலிருந்து தகுதி வாய்ந்த மாணவர்களையும் டாக்டர்களையும் தேர்ந்தெடுத்து அமெரிக்காவுக்குப் பயிற்சிக்கு அனுப்புகிறவர்கள் அவர்கள். அவர்கள் மூலமாய் மேனாடு போய்ப் படித்துத் திரும்பினால் ஏகப்பட்ட கௌரவம் பெருமை, முன்னேற்றம்...''

''உங்களுக்கு...'' ரேணுகாவின் முகத்தில் மகிழ்ச்சியும் ஐயமும் கலந்து தென்பட்டன.

''ஆமாம், என்னையும் அனுப்பப் போகிறார்க ளென்று ஒரு பேச்சு இருக்கிறது. நானும் விண்ணப் பித்திருக்கிறேன். சென்னை நகரத்தில் இருக்கிற நாலைந்து பெரிய டாக்டர்கள் தான் அந்த செலக்ஷன் குழுவில் இருக்கிறார்கள். அவர்களுக்கு என்னைப் பற்றித் தப்பான அபிப்பிராயம் ஏற்பட்டால், அதற்கு உன் அக்கா தான் பொறுப்பு. நான் அவளைச் சும்மா விட மாட்டேன். என் வாழ்க்கையிலேயே பெரிய முன்னேற்றமாக இதை நினைத்திருக்கிறேன்...''

''நிச்சயமாய் உங்களுக்கு ஸெலக்ஷன் கிடைக்கப் போகிறது. பார்த்துக் கொண்டேயிருங்கள்.''

அவள் பேச்சை வெட்டியது ஒரு காரின் ஹாரன் ஒலி.

மூன்று முறை விட்டு விட்டு அழுத்தினார்கள் காரில் உள்ளவர்கள்.

பாலசந்தர் வாசலுக்குப் போனான். யாராயிருக்கும் என்று ரேணுகாவும் எட்டிப் பார்த்தாள்.

காரை ஓட்டி வந்தவரும் ஒரு டாக்டர் தான். பாலசந்தருக்கச் சினேகிதர் போலிருக்கிறது. சற்று வயதில் மூத்தவர்.

''ஸாரி சந்தர்!'' என்றார் அவர் பாலசந்தர் அருகில் சென்றதும், ''உனக்கு ஸெலக்ஷன் கிடைக்கவில்லையப்பா!''

''நிஜமாகவா? யார் சொன்னார்கள்?''

''கால்மணி முன்புதான் பிரைவேட்டாய்த் தகவல் கிடைத்தது. டாக்டர் நாமகிரியின் அபிப்பிராயம் பாக்கி இருந்ததாம். சற்று முன்னால் அந்த அம்மாள் உன்னைப் பற்றி செலக்ஷன் போர்டு சேர்மனுக்கு ரொம்ப மட்டமாய்ச் சொல்லி விட்டாளாம். ஆகவே உன் பெயரை நீக்கி விட்டார்களாம். ஸாரி பாய்! பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்!''

கார் பறந்துவிட்டது.

பாலசந்தர், இடிந்து போய் ஒரு நிமிடம் நின்றான். பிறகு, தள்ளாடினாற்போல் தெருவில் நடந்தான்.

ரேணுகா, கன்ஸல்ட்டிங் அறை வாசலிலேயே நின்றிருந்தாள். காதலனைக் கூப்பிடத் தோன்றவில்லை. பின்தொடரத் தோன்றவில்லை.

அவள் கால்களில் இரும்புக்குண்டுகளை யார் கட்டினார்கள்? நகர முடியாமல் நின்றாள்.

''எனக்கு ஸெலக்ஷன் மட்டும் ஆகவில்லையோ உன் அக்காவைச் சும்மா விட மாட்டேன்!'' பாலசந்தர் சற்றுமுன் சொன்ன வார்த்தை அவள் காதில் ஒலித்தது.




என்னதான் உணர்ச்சி வசப்படட்டும். எதையும் பாலசந்தர் செய்து விடமாட்டான்.

இப்படித் தான் தன்னைத் தேற்றிக் கொண்டாள் ரேணுகா.

''சும்மா விட மாட்டேன் உன் அக்காவை!'' என்று வாக்கியம் பயங்கரமானது தான். ஆனால் பாலசந்தர் பயங்கரமானவன் அல்ல. அவன் மனம் பெரிதும் புண் பட்டிருக்கிறது. மேலும், அவன் ஆசையுடன் எதிர்பார்த் திருந்த அமெரிக்கப் பயணம் நின்றுவிட்டது சுகுமாரி யினால். யாருக்குத்தான் ஆத்திரம் வராது அதற்கப்புறமும்?

ரேணுகாவின் பீதி கொஞ்சம் கொஞ்சமாக அடங் கியது. பாலசந்தரின் நர்ஸிங் ரூமை விட்டுப் புறப்பட்டாள். நேரே டாக்டர் நாமகிரியிடம் செல்லலாமா? ஒரு கணம் யோசனை செய்தாள். 'பாலசந்தரைப் பற்றி ஏன் இப்படிச் சொல்லி விட்டீர்கள்? உங்கள் கருத்தை மாற்றிக் கொள்ளுங்கள். அவர் உண்மையில் கெட்டிக்காரர் தான். அவருக்காகச் சிபாரிசு செய்யுங்கள்' என்று டாக்டர் நாமகிரியிடம் கேட்டுக் கொள்ளலாமா?

வேண்டாம் என்று முடிவு செய்தாள். நாமகிரி பிடிவாதக்காரி. சொன்ன கருத்தை மாற்றிக் கொள்ள மாட்டாள். மாற்றிக் கொண்டாலும், அது பாலசந்தருக்குக் கௌரவமல்ல.

பஸ் ஏறி வீடு திரும்பினாள் ரேணுகா. வழியில் அவள் செய்துகொண்ட முடிவு ஒன்றுதான். அக்காவை எச்சரிக்க வேண்டும். தொண்டை ஆபரேஷனைப் பற்றி அளவுக்கு மீறிப் பேசாதே என்று கேட்டுக் கொள்ள வேண்டும். வேறொரு ஸ்பெஷலிஸ்டிடம் காட்டிச் சரி செய்து கொள்ளலாம் என்று எடுத்துரைக்க வேண்டும். பாலசந்தருக்கும் தனக்குமுள்ள காதலைப் பற்றி இதுவரை அவளுக்குத் தெரிவித்தது கிடையாது. ஊகித்திருப்பாளோ என்னவோ. இப்போது அதை வெளிப்படையாக ஒப்புக் கொள்ள வேண்டும் அவளிடம். 'எனக்கும் அவருக்கும் பகைமை ஏற்படுத்தி எங்கள் காதலை முறித்துவிடாதே அக்கா,' என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

இவ்வளவு தீர்மானத்துக்கும் அவசியமில்லாமற் போய்விட்டது. சுகுமாரி வீட்டில் இல்லை. பங்களா வெங்கும் ஒருமுறை சுற்றிப் பார்த்தாள் ரேணுகா. சுகுமாரியைக் காணோம்.

''உங்களை அப்பா கூப்பிடுகிறார் அம்மா,'' என்று நர்ஸ் ஒருத்தி தெரிவித்தாள். போனாள்.

குழந்தைப் பாண்டியனின் முகத்தில் கவலை தென் பட்டது. ''சுகுமாரி ஆபீசுக்குப் போயிருக்கிறாள், ரேணுகா. இனி மேல் வேலைக்கே போகப் போவதில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தாளே! எதற்காகப் போனாள்?'' என்றார் இளைய மகளிடம்.

''விசாரிக்கிறேன், அப்பா,'' என்றாள் ரேணுகா. அவளுக்கும் ஆச்சரியமாகத் தான் இருந்தது அந்தச் செய்தி. அதே சமயம் ஓர் ஆறுதலும் ஏற்பட்டது. அக்கா நாலு பேருடன் பழகப் பழக நல்லது தான். தாழ்வு மனப்

பான்மை அகல அதுவும் ஒரு வழியல்லவா? இருந்தாலும் ஒரு 'ஹலோ' போட்டு விடலாம்.

சுகுமாரிக்கு மவுண்ட்ரோடில் ஓர் ஆறடுக்குக் கட்ட டத்தில் ரிஸப்ஷனிஸ்டு வேலை. டெலிபோன் ஆபரேட்டரும் அவளும் அருகருகே ஓர் அரை வட்ட அறைக்குள் இருப்பது வழக்கம். டெலிபோன் ஆபரேட்டர் ஸ்டெல்லாவை ரேணுகாவுக்குத் தெரியும்.

''நான்தான் ரேணுகா பேசுகிறேன். கொஞ்சம் என் ஸிஸ்டரைக் கூப்பிடுகிறாயா?'' என்றாள்.

''யார், சுகுமாரியா? அவள் இங்கே எப்போது வந்தாள்?'' என்றாள் ஸ்டெல்லா.

''அங்கே இல்லை? ஆபீசுக்குத் தானே போவதாய் அப்பாவிடம் சொல்லிக் கொண்டு கிளம்பினாளாம்?'' திகைத்தாள் ரேணுகா.

''அதென்னவோ இங்கே வரவில்லை. நீ கோபிக் காமல் இருந்தால் ஒன்று சொல்கிறேன்.''

''என்ன ஸ்டெல்லா?'' திகைப்பு அச்சமாக மாறியது. ''டான்ஸில் ஆபரேஷன் செய்து கொண்ட பிறகு சுகுமாரி முன்போலவே இல்லை. என்னிடம் எவ்வளவு நெருக்கமாகப் பழகுவாள்! என்னிடம் அவள் சொல்லாத ரகசியமே கிடையாது. அதெல்லாம் பழங்கதை. இப்போது ரொம்ப ஒளிவு மறைவு ஏற்பட்டு விட்டது. ரகசியமாய் என்னவோ செய்கிறாள். அப்புறம்... சரி, வேண்டாம்.''

''அப்புறம் என்ன? சொல்லு, ஸ்டெல்லா, தயவு பண்ணி நீயும் மறைக்காதே.''

''இன்று லஞ்ச் டயத்தில் வெளியே போயிருந்தேன் அரைமணி நேரம் முன்பு. டாக்ஸியில் உன் அக்கா போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தேன்.''

''யாரோடு?''

''நம்ப மாட்டாய்.''

''நம்புகிறேன், சொல்லு.''

''ஒரு சைனாக்காரனுடன்!'' என்றாள் ஸ்டெல்லா. ''ஆனால் சுகுமாரி மாதிரியே வேறு யாராவதொருத்தியோ என்னவோ, நிச்சயமாய் சொல்வதற்கில்லை.''

அதற்கு மேல் ஸ்டெல்லாவினால் உரையாட முடியவில்லை. இவ்வளவே பெரிது. அவள் டெலிபோன் ஆபரேட்டர். 'ஜஸ்ட் எ மினிட்' என்று நடுநடுவே யாருக்கோ கூறிய வண்ணம்தான் இதைப் பேசினாள்.

போனை வைத்துவிட்டுப் பக்கத்து அறை நோக்கி நடந்தாள் ரேணுகா. பாலசந்தரின் வீட்டில் நேர்ந்தது, சுகுமாரி எங்கோ போயிருக்கும் விஷயம் - எல்லாவற்றையும் முதலில் நஞ்சுண்டனிடம் சொல்ல வேண்டும். இனி அவன் தான் ஒரே துணை.

ஆனால் நஞ்சுண்டனின் அறை பூட்டியிருந்தது. எங்கே போய்விட்டான்?

இரண்டாம் முறையாக வீட்டைச் சுற்றிப் பார்த்தாள்.

ஒருவேளை கோபமாயிருக்குமோ? பாலசந்தரிடமிருந்து கடிதம் வந்தபோது என்ன, ஏதேன்று அவளிடம் சொல்லாமலே கிளம்பினாளே! அது அவன் சினத்தைக் கிளப்பியிருக்கலாமல்லவா?

''தவறுதான். என்னை மன்னியுங்கள். டாக்டர் பாலசந்தர்தான் தன்னை உடனே வந்து பார்க்க வேண்டு மென்று கடிதம் கொடுத்தனுப்பியிருந்தார். அவர் என் காதலர்,'' என்று ஒப்புக்கொள்ள எண்ணினாள் ரேணுகா.

நேரம் ஓடிக்கொண்டேயிருந்தது. சுகுமாரியும் திரும்ப வில்லை. நஞ்சுண்டனும்தான்.

அவள் தேடிக்கொண்டிருந்த நஞ்சுண்டன் எங்கே?

கோடம்பாக்கத்தில் இருந்தான். குதூகலத்தோடு. ஆனால், வெளியில் தெரியவில்லை அந்தக் குதூகலம், முகம் எத்தனை நீளம்! அதில்தான் எத்தனை சோகம்!

நீலாவின் வீட்டுப் படியேறினான். ஆனால் கதவைத் தட்டவில்லை. உட்கார்ந்து கொண்டான். தலையில் கை வைத்துக் கொண்டான். உறுமீன் வரும்வரை வாடியிருக்கு மாம் கொக்கு. அதேபோல் கதவு திறக்கட்டும் என்று காத்திருந்தான் வாசலிலேயே.

அப்போது பகல் ஒரு மணி இருக்கும். வெய்யில் படாத தெருவோரங்களில் இரண்டொரு காக்கைகள் தத்திக் கொண்டிருந்தன. குப்பைத் தொட்டியின் நிழலில் சொறி நாய்கள் தூங்கின. மற்ற நடமாட்டம் அனைத்தும் செத்து விட்ட நேரம்.

சாப்பிட்ட கையைக் கழுவுவதற்காக வாசலுக்கு வந்தாள் நீலா. கதவைத் திறந்ததும் கண்ணில் பட்டது. நஞ்சுண்டனின் உருவம்தான்.

அவள் முகம் வெளிறியது. எச்சில் இலையை எறிந்தாள். படீரென்று கதவைச் சாத்தித் தாளிடப்

போனாள். ஆனால் அவன் அசையாமலிருந்த தோற்றம் அவளை யோசிக்க வைத்தது. சிறிது நேரம் நின்றாள். தயங்கினாள். அதன் பிறகும் அவன் தலையை நிமிர வில்லை. அவளை ஏறிட்டுப் பார்க்க வில்லை. ஒரு வார்த்தை பேசவில்லை. நீலாவுக்குப் பரிதாபம் ஒரு பக்கம். பயம் மறுபக்கம். அவன் முகத்தை ஊடுருவிப் பார்த்திருந்தால் கண்டு பிடித்திருப்பாளோ என்னவோ. ஆனால் அவன் அதற்கு இடம் கொடுக்கவில்லை. தலையைக் குனிந்தவாறே இருந்தான்.

அவனுடைய பயங்கரச் சதியை - கேவலமான தொழிலை - அவள் மறந்து விடவில்லை. அதை நினைத் தாலே நீலாவுக்குக் குடல் நடுங்கியது. குமட்டல் வந்தது. ஆயினும், இப்போது அவன் இருந்த தோற்றத்தை, தலை குனிந்து செயலற்றுக் கிடக்கும் தோரணையை, கண்ட போது அவளுக்கு இரக்கம் பொங்கியது. பரிதாபம் மித மிஞ்சியது.

நல்ல வேளை, அதை ஒரேயடியாகக் காட்டிக் கொள்ளவில்லை. குரலில் கண்டிப்பை வரவழைத்துக் கொண்டாள். ''எதற்காக இங்கே வந்தீர்கள் மறுபடியும்?'' என்றாள் கடுமையாக.

அவன் நிமிர்ந்தான். அவளையே பார்த்தான். இமைக் கால்களின் நுனிகள் பொடிப்பொடியாய் மின்னின.

''நீலா! நான் இங்கே வராமல் எங்கே போவேன்?'' என்றான்.

நீலா தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொண்டாள். அவன்மீது இரக்கம்தான் உண்டாயிற்றே தவிர பிரியம் உதித்து விடவில்லை. இனி அவனோடு தனக்கு ஒரு நாளும் ஒட்டாது என்பதையும் உணர்ந்திருந்தாள். ஆகவே, ''நாம் சேர்ந்து வாழுவது முடியாத காரியம்,'' என்றாள் முகத்தைத் திருப்பிக்கொண்டு.

நஞ்சுண்டன் கண்ணைத் துடைத்துக் கொண்டான். ''அது தெரியும், நீலா, அதனால்தான் உன்னிடம் சொல்லிக் கொண்டு போக வந்தேன். நான் தனியாகவே இருக்கத் தீர்மானித்து விட்டேன். நீ சம்பாதிக்கிறவள். என் பிரிவினால் உனக்கு ஒரு கஷ்டமும் இருக்காது.'' என்றான்.

நீலாவின் மனத்துக்குள் ஒரு புயல் வீசியது. என்ன கொடியவனானாலும், அவளால் காதலிக்கப்பட்டவன். தாலி கட்டினானோ இல்லையோ, கணவனாகக் கூடவிருந்து வாழ்ந்தவன். அவனைப் பிரிந்து வாழுவது...

ஒரு நிமிடம்தான் தடுமாறினாள். குழம்பினாள். பிறகு பல்லைக் கடித்துக் கொண்டாள். இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டாள். ''ரொம்ப சந்தோஷம். அப்புறம் ஏன் இங்கே வந்தீர்கள்?'' என்றாள்.

''கொஞ்சம் இரக்கம் காட்டு, நீலா.'' நஞ்சுண்டன் கெஞ்சினான். ''என்னை இங்கே வரக்கூடாதென்று தடுத்து விட்டாய். சரி, போகிறேன். ஆனால் என் சட்டை வேட்டி இரண்டாவது எடுத்துக் கொண்டு போக வேண்டாமா? மறு வேளைக்கு மாற்றிக்கொள்ளக் கூட எதுவுமில்லையே?''

''அதை யாரும் தடுக்கவில்லையே?'' அவள் நகர்ந்து வழிவிட்டாள்.

நஞ்சுண்டன் தலைகுனிந்தபடியே நுழைந்தான். ஸ்டாண்டிலும் அலமாரியிலும் இருந்த உடைகளை எடுத்துக் கொண்டான். பேசியபடியே மடித்தான். ''உனக்கு வேடிக்கை காட்டுவதற்காகவே அந்தப் புகைப்படங்களை எடுத்தேன். யாருக்கும் காட்டவில்லை. நீதான் தப்பாய் நினைத்து விட்டாய்...''

நீலா பதில் கூறவில்லை. அவன் வார்த்தையை அவள் நம்பத் தயாராயில்லை. அவனுடைய இழி நோக்கம் அவளுக்கு நன்கு தெரிந்தது. இப்போது அவன் சொல்வது பொய். ஆகவே, சற்றுமுன் அவன் மீது ஏற்பட்ட இரக்கமும் மறைந்தது.

''சீக்கிரம் கிளம்புங்கள். எனக்கு வேலையிருக்கிறது,'' என்று, சமையலறையில் வேலைகளைக் கவனிக்கலானாள்.

நஞ்சுண்டன் ஒரு சூட்கேஸில் எதையோ அடைத்துக் கொண்டான். ''வருகிறேன் நீலா,'' என்றான். புறப்பட்டு விட்டான்.

வேண்டாவெறுப்பாய் விடைகொடுக்க நீலா வந்தாள். வாசற்படிக்கு வெளியே நஞ்சுண்டன் நின்றிருந்தான். இந்தண்டைப் பக்கம் நீலா நின்றிருந்தாள்.

''நீலா! என்னையா மடையனென்று நினைத்தாய்?'' திடீரென்று நஞ்சுண்டனின் முகபாவம் மாறியது. கடகடவென்று சிரித்தான்.

நீலா அதிர்ச்சியுற்று நின்றாள். நஞ்சுண்டன் தொடர்ந்தான்: ''இந்தக் கிழிசல் துணிகள் இல்லை என்றா

வந்தேன் இங்கே? பைத்தியக் காரி! ஜமீந்தார், மிட்டாதார் மாதிரி நான் வாழுகிறேனாக்கும் இப்போது! பைத்தியக்காரி! நான் எதைத் தேடி வந்தேனோ அதை எடுத்துக் கொண்டுவிட்டேன்!''

நீலாவுக்குத் தலையைச் சுற்றியது. கண்கள் இருண்டன. ''எதை...? என்ன தேடினீர்கள்...''

''இதோ!'' இடுப்பில் அணைத்துப் பிடித்திருந்த சூட்கேஸைக் காட்டினான் நஞ்சுண்டன் ''நீ எடுத்துப் போய் நாள் பூரா வைத்துக்கொண்டு தவித்தாயே ஒரே ஒரு பிலிம் ரோல், அது அப்போதே 'வீணாகிவிட்டது. வெளிச்சத்தில் பிரித்துப் பார்த்தபோதே கெட்டுவிடும் என்று பள்ளிக்கூட ஆசிரியையாகிய உனக்குக் கூட மறந்துவிட்டது, பாவம்!''

''சரி... அதனால்...?'' நீலாவுக்குத் தொண்டையில் எதுவோ சிக்கியது.

''அதனால் அந்த பிலிம் ரோலைத் தூக்கியெறிந்து விட்டேன். அதற்கு முன்னால் எடுத்த படங்கள், நெகடிவ்கள் எல்லாம் இந்த வீட்டில்தானே வைத்திருக்கிறேன்? என் நல்லகாலம், நீ அதையெல்லாம் கண்டு பிடித்து நாசம் பண்ணவில்லை... எல்லாம் பத்திரமாய் அப்படியே இருந்தது. எடுத்துக்கொண்டு விட்டேன். ரொம்பத் தாங்ஸ், நீலா!''

''நில்! நில்!'' - நீலாவின் தொண்டையிலிருந்து கூச்சல் வெளிப்பட வெகு நேரம் பிடித்தது. அந்த நேரத்துக்குள் நஞ்சுண்டன் ஒரு டாக்ஸி பிடித்துக் கொண்டு போய் விட்டான்.

நீலா மரமென நின்றிருந்தாள். நஞ்சுண்டன் அவள் தலையில் போட்ட கல், அவளையே கல்லாக்கிவிட்டது.

அவ்வளவுக்கவ்வளவு வேகமாகச் சென்று கொண்டிருந்தான் நஞ்சுண்டன. உற்சாகம் தலைகொள்ளவில்லை அவனுக்கு. கையிலிருந்த சூட்கேஸை மார்போடு அணைத்துக்கொண்டான். நடுத்தெருவிலேயே ஆடலாம் போலிருந்தது. பாடலாம் போலிருந்தது. கஷ்டப்பட்டுத் தன்னை அடக்கிக் கொண்டான்.

இந்த மாபெரும் அதிர்ஷ்டத்தை அவன் எதிர் பார்க்கவேயில்லை. தன் வேடத்தை நீலா தெரிந்து கொண்டாள். என்று உணர்ந்ததுமே அவன் தீர்மானித்து விட்டான் - வீட்டிலிருக்கிற மற்றப் படங்களையும் அவள் ஒழித்துத் தலை முழுகியிருப்பாள் என்று. ஆனால் அவ்வளவும் அப்படியே இருந்தன! ஒவ்வொரு புகைப் படமும் ஒரு தங்கப் பாளமல்லவா! எல்லாம் அந்த 'வைர முருகன் அருள்!

டாக்ஸியொன்றை அமர்த்திக்கொண்டான் நஞ்சுண்டன். சௌகார்ப் பேட்டையும் ஒற்றைவாடையும் சந்திக்கிற கசமுசா இடத்துக்குச் சென்றான். ஒரு போட்டோ ஸ்டுடியோ. அதன் வாசலில் வரிசையாய் மாட்டியிருந்த புகைப்படங்களைப் பார்த்தாலே போதும் எவனும் உள்ளே நுழைய மாட்டான். ஒவ்வொரு படமும் அவ்வளவு கர்நாடகம்! அவ்வளவு கோரம்! 'ரூபாய்க்கு எட்டுப் படம் - உங்களுக்கு விருப்பமான போஸில்' என்ற அறிவிப்புப் பலகை வேறே.

நஞ்சுண்டன் தன் சூட் கேஸுடன் நுழைந்தது இங்கேதான். ''வாங்க முதலாளி,'' என்று கிண்டலாக வரவேற்றார் ஸ்டுடியோ அதிபர். அக்கம் பக்கம் ஒருமுறை

பார்த்தான் நஞ்சுண்டன். சூட் கேஸை அவர் மேஜை மீது வைத்தான். பெருமிதத்துடன் ஒரு புன்னகை செய்தான். "மொத்தம் ஒன்பது ரோல். நூறு படத்துக்குக் குறைவில்லை! அவ்வளவும் வைரம்! கோஹினூர் வைரம்!"

பெட்டியைத் தன் பக்கத்தில் இருத்திக் கொண்டார் ஸ்டூடியோக்காரர். "முதலிலே ஒரு ரோல் கொடுத்தாயே அது போல் இதுவும் வெறும் வெள்ளையாய் இருந்தால்...! அப்புறம் வைரமில்லை. கண்ணாடிதான்!"

"டெவலப் பண்ணிவிட்டு அப்புறம் பேசும் ஐயா!" என்றான் நஞ்சுண்டன் ரோஷத்துடன்.

"இன்று ராத்திரியே செய்து விடுகிறேன்," என்றார் ஸ்டூடியோக்காரர்.

"ஆமாம், நம்ம கமிஷனையும் பேசி முடித்து விட்டால் நல்லது. ஃபிஃப்டி - ஃபிப்ஃடிதானே?" ஆசையினால் அவருடைய குறுகிய கண்கள் பளபளத்தன.

"எனக்கு அறுபது, உமக்கு நாற்பது," என்றான் நஞ்சுண்டன். "நீர் படத்தைத் தயாரித்துக் கொடுப்பதோடு சரி. வியாபாரம் பூரா நானல்லவா செய்வது?"

"ஆனால் நடுவே ஒரு போலீஸ் ரெய்ட் நடைபெற்றால், விலங்கு இந்தக் கைக்குத் தான், உனக்கில்லை!"

ஸ்டூடியோக்காரரின் பேச்சில் கடுகத்தனை மிரட்டலும் தொனித்தது. 'போலீசில் சிக்கிக் கொள்ள நேர்ந்தால், சரி பாதி விருந்து உனக்கும் வைப்பேன்!' என்று நினைவூட்டுகிறார் போலும். "சரி. காரியம் முடியட்டும். உம் இஷ்டப்படியே பண்ணலாம்," நஞ்சுண்டன் புறப்பட்டான்.

இருட்டத் தொடங்கிவிட்டது. அப்போது, ஸ்டுடியோக் காரர், சாமி படத்துக்கு அகல் விளக்கை ஏற்றினார். ஊதுபத்தி கொளுத்தி வைத்தார். கன்னத்தில் பாட்டுக் கொண்டு, தான் செய்கிற பாவத்துக்குத் தெய்வத்தையும் கூட்டாளியாக்கிக் கொண்டார்.

சூட் கேஸை எடுத்துக்கொண்டு 'இருட்டறை'க்குப் போக எழுந்தார். நஞ்சுண்டனைப் போன்ற மட்டமான பேர்வழிகள், மட்டமான காரியங்களுக்குத்தான் அவர் கடைக்கு வருவது வழக்கம். ஆனால் இப்போது கௌரவமான இருவரும் உள்ளே நுழைந்தார்கள். ஸ்டுடியோக்காரருக்கே ஆச்சரியம் தாங்கவில்லை.

இருவரும் நுழைந்தார்கள் என்று சொல்வதுகூடச் சரியில்லை. ஒருவன்தான் நுழைந்தான். அவன் ஒரு சீக்கிய இளைஞன்.

''அரே க்யா துமே இத்னா ஷரம் ஆத்தி ஹை? ஆஜா...'' என்று கையைப் பிடித்து உள்புறம் இழுத்தான், தன் மனைவியை. அவன் பேச்சு பாதி கொச்சைத் தமிழ், பாதி இந்துஸ்தானி.

அவள் கடைக்கு வெளியே நின்றிருந்தாள். ''ஊகூம்... வேண்டாம்...'' என்று முக்காட்டை இழுத்து இழுத்து விட்டுக் கொண்டு முரண்டு பிடித்தாள்.

''அட சட்! இதிலே என்னா வெக்கம்? ஆஜ் இஸ் தின் கோ மஜா நை கர்னா? வா சும்மா!''

ஸ்டுடியோக்காரர், இருவருக்கும் நடக்கும் இழுபறிப் போட்டியைச் சுவாரஸ்யமாகக் கவனித்தார். அந்த அம்மாள்

மித மிஞ்சி முரண்டு பண்ணினால், வந்த கிராக்கியும் போய் விடப்போகிறதே என்ற பயம் ஏற்பட்டது.

சீக்கிய இளைஞனின் அருகே வந்தார். ''இந்த நாளிலே பச்சைப் பிள்ளைகள், பர்தாப் பெண்கள்கூட தாராளமாய்ப் போட்டோ எடுத்துக் கொள்கிறார்கள். உங்கள் ஒய்ப் - நல்லா படிச்சவங்க போலே தோணுது - இப்படி வெட்கப்படுகிறாங்களே!'' என்றார்.

''அதில்லை சார்... யூ ஸீ... ஐ ஜஸ்ட் நௌ லேர்ன்ட் ஐ அம் கோயிங் டு பி எ ஃபாதர்... த்ரீ மந்த்ஸ்!...''

''ஓகோ! கங்கிராசுலேஷன்ஸ்! கங்கிராகலேஷன்ஸ்!'' அவன் கையைக் குலுக்கு குலுக்கென்று குலுக்கினார் ஸ்டியோக்காரர்.

''ஷாப்பிங் கிளம்பினோம். வர்றப்போ தான் சொன்னாங்கோ. வுடனே ஸெலப்ரேட் பண்ணணுமா வேண்டாமா? ஒங்கோ ஸ்டூடியோ கண்ணிலே பட்டிச்சு. வந்தேன்!''

''கட்டாயம்! அவசியம்!'' என்றார் ஸ்டுடியோக்காரர். ''இப்போ ஜோடியாய் எடுத்துக்குங்க. அப்பாலே ஃபேமிலியாய் வந்து படம் எடுத்துக்கொள்ளலாம்!''

''ஹாஹ்ஹா! ஹாஹ்ஹா!'' என்று ஆனந்தம் பொங்க நகைத்தான் சீக்கிய இளைஞன். ''மேரேப்யாரீ! வா உள்ளாற!''

அவள் ஆயிரத்தெட்டுக் கோணல்களுடன் படியைத் தாண்டி வந்தாள். ''அச்சா, அச்சா! மேரே ப்யாரீ!'' அவளை அணைத்துக் கொண்டான் அவன்.

''பஸ்ட்டா, ஃபுல் சைஸா? எப்படி எடுக்கட்டும்?'' என்று கேட்டார் ஸ்டுடியோக்காரர்.

''அரே இன்னா மேன் நீ? எத்தினி பெரிய சைஸ் எடுக்க முடியுமோ அத்னி-'' அவன் பேச்சை முடிக்க வில்லை. அவள் களக்கென்று ஒரு முறை விக்கினாள். தொண்டையைப் பிடித்துக் கொண்டாள். அங்கேயே மேஜைய்டியில் உட்கார்ந்து கொண்டாள். வாயினருகே இரு கையையும் குவித்துக் கொண்டாள்.

ஸ்டுடியோக்காரருக்குப் புரிந்துவிட்டடது. மூன்று மாதக்காரி, வாந்தியெடுக்கப் போகிறாள்! அட கடவுளே! இந்த இடத்திலேயா?

''அம்மா... அம்மா! அதோ குழாய்ப் பக்கம் போங்கள்!'' என்று அவளைத் தொடப் போனார்.

வீலென்று கூச்சலிட்டு அவள் ஒதுங்கிக் கொண்டாள். ஆனால் எழுந்து குழாயடிக்குச் செல்லவில்லை. இதுவே வசதியான இடம்தான் என்று தீர்மானித்து விட்டாள் போலும்.

''அட, நீ என்னய்யா!'' அவர் மீது எரிந்து விழுந்தான் சீக்கிய வாலிபன். ''இதர் க்யா சோக்ரா நை ஹை? பாய், பாய்!''

''சாப்பாட்டுக்குப் போயிருக்கிறான். என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்றார் ஸ்டுடியோக்காரர். உண்மையில், அந்தக் கடையில் பையனே கிடையாது.

''அடே என்னய்யா, தொணதொணன்னு கேட்டு கிட்டு!'' அவன் தன் இளம் மனைவியை அணைத்துக் கொண்டான். ''ஸ்டெடி டியர், ஸ்டெடி...''

அவள் பயங்கரமாக மேலும் இரண்டு முறை சத்தமிட்டாள்.

''ஒரு சோடா வாங்கி வா மேன்!'' இளைஞன் பர்ஸைத் திறந்து கவிழ்ந்தான். நூறு ரூபாய் நோட்டுக்கள் சில விழுந்தான். ஒரு நோட்டை ஸ்டூடியோக்காரரின் பக்கம் தள்ளினான். ''பையன் இல்லாட்டி நீயாச்சும் போய் வாங்கி வா!''

நூறு ரூபாய் நோட்டா! ஸ்டூடியோக்காரரின் விழி தெறித்தது. தூக்கிக் கொண்டு ஓடினார். ஆனால் இருபது பைசா போகப் பாக்கி தரக்கூடிய எந்தக் கடையும் இல்லை. எதிர்க் கடை, பக்கத்துக் கடை, மூன்றாவது கடை என்று விசாரித்துக் கொண்டே சென்றார்.

சிக்கியத் தம்பதிகளிடம் ஒரு திடீர்ச் சுறுசுறுப்புப் பிறந்தது. இருவரும் குபுக்கென எழுந்தார்கள். அவன் சரேலெனப் பாய்ந்து நஞ்சுண்டனின் சூட்கேஸை எடுத்துக் கொண்டான்.

இருவரும் வாசலுக்குத் தாவினார்கள். எட்டிப் பார்த்தார்கள். ஸ்டூடியோக்காரர் கடை கடையாய்ப் போய்க் கொண்டேயிருந்தார். அவருடைய முதுகுப்புறம் தெரிகிற சமயம் பார்த்து அவர்கள் தெருவில் இறங்கினார்கள். பிறகு ஒரே ஓட்டம்தான், தெருக் கோடியை அடைகிறவரையில், அங்கேயிருந்த மோட்டார் பைக்கின் மீது ஆரோகணம். ஓர் உதை. ஒரு டர்ர். ஒரு பிடி புகை. சீறல். தாவல். பறந்தது பைக்.

''சாமி! நீர் கெட்டிக்காரர்தான் ஐயா!'' பின் ஸீட்டி லிருந்த 'பெண் மணி' பாராட்டினாள். 'அவள்' கையில் பத்திரமாக இருந்தது சூட்கேஸ்.

"நீ அருகில் இருக்கிறபோது என் கெட்டிக்காரத் தனத்துக்கென்ன குறைவு!" என்று சிரித்தான் அந்தச் சீக்கியக் கணவன். "பஞ்சாபி மனைவி மாதிரி நீயும் அருமையாய் நடித்துவிட்டாயே!"

"அன்னைக்கு ராவு வந்திருந்தாங்களே, அந்தப் பெண்ணோட படம் தானே இதிலே இருக்கிறதெல்லாம்?"

"ஆமாம். நாளைக்கு உனக்கு இது தான் வேலை. வீட்டின் பின்பக்கம் இதை எடுத்துக்கொண்டு போகணும். ஒவ்வொரு டப்பாவாய்ப் பித்து, வெய்யிலிலே நன்றாய் இரண்டு பக்கமும் காட்ட வேண்டும். பிறகு குப்பைத் தொட்டியிலே தூக்கி எறிந்துவிட வேண்டும். என்ன?"

"சரி, முதலாளி" என்றான் அப்பாவு. பைக் அதே சமயம் நின்றது. "எதுக்கு நிறுத்தறீங்க!" என்று அப்பாவு கேட்டான்.

"தெனாலிராமன் குதிரை, தண்ணீரைக் கண்டால் நின்றுவிடும். நம்ம குதிரை வேர்க்கடலைக் கடையைக் கண்டால் நின்றுவிடும்!" பர்ஸிலிருந்து சில்லறை எடுத்துத் தந்தான் ரமணன். "போய் வாங்கி வா. அதோ இருக்கிறது. பார், கடை."

அப்பாவு காசை வாங்கிக் கொண்டு போனான். கையிலிருந்து சூட்கேஸைத் திருப்தியுடன் பார்த்தான். ரமணன். அவனை நம்பினாள் அபலைப் பெண் நீலா. முடிந்த வரையில் அவளைக் காப்பாற்றிவிட்டான்... பைத்தியக்கார ரமணன்!

ஒரு பெண்ணைக் காப்பாற்றிவிட்டோம் என்ற பெருமையிலே மூழ்கியிருந்தான். அதற்குச் செலவான அதே நேரத்தில், வேறோரிடத்தில் ஒரு பெண் பலியாகிக் கொண்டிருக்கிறாள் என்று அவனுக்குத் தெரியாது.

அப்பாவு வாங்கி வந்த வேர்க்கடலையை அவன் ஆனந்தமாய்க் கொறித்தான். ஆனால், தான் காப்பாற்றக் கடமைப்பட்டுள்ள இன்னொரு பெண் பேராபத்தில் சிக்கியருக்கிறாள் என்று அவன் அறியான்.!



வாசலில் எத்தனை நேரம் நிற்பது? தோட்டத்தில் எத்தனை முறை சுற்றுவது? மாடிப்படியில் எவ்வளவு தடவை ஏறி இறங்குவது. கைக் கடியாரத்தையும் சுவர் கடியாரத்தையும் எத்தனை காலம் மாறி மாறிப் பார்ப்பது?

ரேணுகாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. நேரம் ஓட ஓட அவளுக்கு அடி வயிற்றில் ஒரு சங்கடம் உதித்தது. இருட்டி இத்தனை நேரமான பிறகும் அக்கா வராமலிருக்க மாட்டாளே? தோட்டாக்காரனையும் வேலைக்காரனையும் சமையற்காரப் பாட்டியையும் திரும்பத் திரும்ப விசாரித்துக் கொண்டேயிருந்தான். அவர்களில் யாருக்கும் தெரிய வில்லை சுகுமாரி எங்கேதான் போயிருப்பாள் என்று. அவளுடைய அலுவலகத் தோழியான் ஸ்டெல்லா சொன்ன செய்தி! யாரந்தச் சீனாக்காரன்? அவனுடன் சுகுமாரிக்கு என்ன தொடர்பு?

நினைக்க நினைக்கத் தலை சுற்றியது ரேணுகாவுக்கு. அக்காவுக்குக் காதல் கீதல் என்று உண்டோ? யோசித்துப் பார்த்தாள். அப்படி யொன்றும் தென்படவில்லை. ரேணுகாவைக் காட்டிலும் அவள் கலகலப்பானவள். எல்லோருடனும் தாராளமாய்ப் பழகுவாள். அரட்டை, குறும்புத்தனம், துணிச்சல் எல்லாம் உண்டு. ஆனால் காதல் விவகாரங்களில் சிக்கிக் கொண்டதில்லை. யாருடனாவது சினிமாவுக்குப் போனாள், கடற்கரைக்குப் போனாள் என்பது கிடையாது.

பின்னே?

''அப்பா கூப்பிடுகிறார்.'' என்று நர்ஸ் வந்து தெரிவித்தாள். மணி ஏழாகிறது. வீட்டோடு கொண்டுவந்து வைத்துக்கொண்டே துப்பறியும் வீரரையுமல்லவா காணோம்? அப்பா எதற்குக் கூப்பிடுகிறார்? சுகுமாரியைப் பற்றிக் கேட்டால் என்ன சொல்வது? அப்பாவின் அறைக்குள் நுழைந்தாள். புது வீடு கட்டிக் கொண்டிருக்கும் மேஸ்திரி வந்திருந்தார். குழந்தைப் பாண்டியனின் கட்டிலுக்குச் சற்று எட்ட நின்றிருந்தார். ''சுகுமாரி இன்னும் வரவில்லையா ரேணு?'' படுக்கையிலிருந்த குழந்தைப் பாண்டியன் கேட்டார்.

''இல்லையே, அப்பா? என்ன வேண்டும் சொல்லுங்கள். நான் செய்கிறேன்.'' ''வேறென்ன? இந்த மேஸ்திரி சமாசாரம்தான். என்னைப் போட்டுக் குழப்புகிறார். சுகுமாரி இருந்தால் தான் இவருக்குச் சரிப்படும். டக் டக்கென்று இவர் விவகாரத்தை முடித்துவிடுவாள்,'' என்றார் குழந்தைப் பாண்டியன்.

''பார்த்தீர்காளா? கடைசியிலே என் தலையிலேயே போட்டுட்டீங்களே, குழப்புறேன்னு? நான் நல்லதுக்குத் தானே சென்னேன்...''

மேஸ்திரியின் பேச்சை இடை மறித்தாள் ரேணுகா. ''சரி சரி. அப்பா கொஞ்சம் நிம்மதியாய்த் தூங்கட்டும். வெளியில் வாருங்கள், பேசிக் கொள்ளலாம்.'' மேஸ்திரி பெருமூச்சு விடுத்தார், உதட்டைப் பிதுக்கினார். ரேணுகாவைப் பின்தொடர்ந்து வெளியே வந்தார். வெராந்தாவில் நின்றுகொண்ட ரேணுகா, ''என்ன விஷயம்? இப்போது சொல்லுங்கள்,'' என்றாள். அவள் பார்வை வாசலுக்கே தாவிக் கொண்டிருந்தது. சுகுமாரியை எதிர்பார்த்து.

''நான் ஒண்ணுமே சொல்லலீங்கம்மா. காவலுக்கு ஒரு ஆள் போட்டு வைப்போமேன்னு சொன்னேன்... உங்கப்பா பாவம், சீக்காளி, சின்ன விஷயம் கூட அவருக்கு உபத்திரவமாய் இருக்குது...''

''எதுக்குக் காவல்?, பலகை வாராவதி வீட்டுக்கா?''

''ஆமாங்க. அட, அங்கே ஒண்ணும் பெரமாதமாய்க் கிடையாதுண்ணாலும் கொஞ்சம் சிமெண்டு, நாலு செங்கல் ஆணி கீணி, கட்டை மட்டை இப்படி ஏதாச்சும் நாலு சாமானாவது போட்டு வைச்சிருக்க மாட்டோமா? வேலை தான் அப்படியே நின்றிருக்குது. பாவிப் பசங்க அப்படியே போட்டுட்டுப் போயிருக்கிறாங்க...''

ரேணுகாவுக்குப் பொறுமையில்லை, அவர் பிரலாபத்தைச் செவிமடுக்க. ''இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்? காவலுக்கு ஆள் போட வேண்டும். அவ்வளவுதானே? இதைப் போய் அப்பாவைக் கேட்பானேன்? அவரைத் தொந்தரவு பண்ணணுமா?''

''உங்கப்பாருக்காகச் சொல்லலை அம்மா! அவரு தங்கக் கட்டி என்னை எத்தனை லட்சத்துக்கு வேணு

மானாலும் நம்புவார். ஆனால், உங்க அக்கா இருக்கிறாங்களே, சுகுமாரி அம்மா! அப்பாடியோ! அதன்கிட்டே சொல்லாமல் கொள்ளாமல் ரெண்டு பைசா செலவழிச்சிட்டாலும் போச்சு!''

''நான் அக்காகிட்டே சொல்லிக் கொள்கிறேன். காவலுக்கு ஆள் போ என்ன செலவாகும் என்கிறீர்கள்?'' ''என்ன மாசத்துக்கு இருபது ரூபாயாவது கொடுக்க வேண்டாமுங்களா?'' ''அவ்வளவுதானே? ஆள் போட்டுக் கொள்ளுங்கள், இன்று முதலே.'' ''அப்பாலே உங்கள் அக்கா...''

''நான்தான் சொல்லிக் கொள்கிறேன் என்றேனே?'' ரேணுகாவின் குரலில் சிடுசிடுப்புத் தென்படலாயிற்று. ''வரேம்மா,'' என்று கும்பிட்டுவிட்டு விடை பெற்றார் மேஸ்திரி. வெறித்துப் பார்த்துக்கொண்டு வெகு நேரம் நின்றாள் ரேணுகா. மணி ஏழே முக்கால். நஞ்சுண்டனைக்கூட இன்னும் காணோமே? ஒருவேளை இருவரும் சேர்ந்து...

நினைத்த மறுவினாடியே அந்த எண்ணத்தை உதறித் தள்ளினாள் ரேணுகா. இருவருக்குமிடையே எந்தவிதமான ஒட்டுறவும் கிடையாது. இருக்கவும் முடியாது. 'சைகலாஜிகல் ட்ரீட்மெண்ட்' என்று சொல்லி முரட்டுத் தனமாகப் பேசுகிறவர் அவர். அக்காவோ யாரையும் லட்சியம் செய்யாதவள்.

''சாப்பிட வரவில்லையா ரேணு?'' சமையற்காரி காமேசுவரி கூப்பிட்டாள். ''அக்காவும் வந்துவிடட்டுமே என்று பார்த்தேன். சரி.'' பாட்டியைப் பின் தொடர்ந்தாள் ரேணுகா. தன் கலவரத்தை அனாவசியமாய் விளம்பரப்

படுத்திக் கொள்ள அவள் விரும்பவில்லை. அக்கா எங்கே போனாள் என்று ஒவ்வொருவரிடமாகக் கேட்டுப் பீதியைப் பரப்பக் கூடாது...

ஆனால் சமையல் பாட்டிக்கு நீளமான நாக்கு, டைனிங் ஹாலில் ரேணுகா அமர்ந்ததும் தட்டை வைத்தாள். தண்ணீர் தந்தாள். சாதம் போட்டுச் சாம்பாரும் தொட்டுக் கொள்ளவும் ஊற்றினாள். ஆனால் பின்னர் சமையலறைக்கு நகரவில்லை. ரேணுகாவின் அருகிலேயே நின்று கொண்டாள். ''சுகுமாரி வர இத்தனை நேரமாகிறதே இன்று? ஏன் தெரியவில்லையே?'' என்றாள்.

ரேணுகா பதிலொன்றும் தரவில்லை. விட்டு விடுவாளா பாட்டி? ''வழக்கமாகச் சீக்கிரமாக வந்து விடுவாளே? என்னமோ அந்தத் தொண்டை ஆபரேஷனுக்குப் பிறகு அவள் அடியோடு மாறி விட்டாள். என்ன சொல் கிறாய்?'' என்றாள். ரேணுகாவுக்கு எரிச்சல் வந்தது. ''அப்படியொன்றும் இல்லை. வழக்கம் போல்தான் இருக்கிறாள். நீங்கள்தான் கற்பனை செய்கிறீர்கள்.''

''கோபிக்காதே என் மேலே. வரவர என்னவோ அவள் செய்கிறதும் பேசுகிறதும் திகிலாகவே இருக்கிறது. இன்று காலையிலே என்ன நடந்ததென்று சொன்னால் நீ நம்பவே மாட்டாய்.''

''என்ன நடந்தது?'' என்று ரேணுகா கேட்டாள். பாட்டியின் நோக்கம் வெறும் அரட்டையல்ல, ஏதோ விஷயம் வைத்திருக்கிறாள் தன்னிடம் சொல்ல என்று தோன்றியது. பாட்டி ஒருமுறை வெளியே எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பினாள். ரேணுகாவின் தோளுக்குப் பக்கமாகக் குனிந்தாள். ''சுவாமி சன்னதியிலேயே

வைக்கணுமென்று இரண்டு பன்னீர்ப் பூ பறிப்பதற்காகக் கொல்லைப்புறத் தோட்டத்துக்குப் போயிருந்தேன். காலையிலே எட்டு மணி இருக்கும். அங்கே குளிக்கிற ரூம் இருக்கிறதில்லையா? உள்ளே யாரோ குளிச்சிட்டிருந் தாங்க. நான் வெளியே பூப்பறிச்சுக்கிட்டிருந்தேன். திடீர்னு-'' பாட்டி சுற்று முற்றும் மறுபடி பார்த்தாள். குரலை மேலும் தாழ்த்திக் கொண்டாள். ''என்ன பாட்டி?'' என்றாள் ரேணுகா. சாப்பாட்டுத் தட்டை நகர்த்தி வைத்து விட்டாள். அது ஆறியும் போய் விட்டது. ஆர்வமும் இல்லை.

''திடீர்னு யாரோ பாடுகிற மாதிரி ஒரு குரல் கேட்டது. குளிக்கிற சத்தமும் கேட்கிறது. குழாயிலே தண்ணி கொட்டற சத்தமும் கேட்கிறது. யாரோ பாடற மாதிரியும் இருக்கிறது. யாரோட குரல் என்கிறாய். முன்னே ஆபரேஷன் செய்து கொள்வதற்கு முன்னாலே இருந்ததே உன் அக்காவுக்கு, அதே போலக் குரல்!''

''பாட்டி! என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?'' ரேணுகாவுக்குத் திகைப்பு மூச்சடைத்தது. காமேசுவரியின் கண்கள் பயத்தினால் வெளுத்தன. நரைத்த கேசம் குத்திட்டு நின்றது. பொக்கை வாயில் உதடுகள் துடித்தன. ''நிஜம்மாத்தான் சொல்றேன், ரேணு. என்னாலேயே நம்ப முடியவில்லை. ஒரே ஒரு நிமிஷம்தான் அதக்குள்ளே என் காலிலே ஒரு செம்பு பட்டு உருண்டு, சத்தம் ஏற்படுத்திவிட்டது. அதனாலே டக்குனு அந்தப் பாட்டுச் சத்தமும் நின்று போச்சு. நான் போகிற மாதிரி போய்விட்டு, சமையலறைக்குள் ஒளிஞ்சு கொண்டேன். ஜன்னல் மறைவிலே நின்று கவனிக்கிறேன்...''

''கவனித்து?''

''உன் அக்கா சுகுமாரிதான் குளித்து விட்டு வெளியே வருகிறாள்! எனக்குத்தான் மனசிலே ஒரு பிரமை ஏற்பட்டதோ, இல்லை, நிஜமாகவே அவள்தான் பாடிக் கொண்டிருந்தாளோ தெரியாது. ஆனால், அவள் என்னவோ மாயமும் மர்மமும்மாய்க் காரியங்கள் பண்ணு கிறாள் என்று மட்டும் தோன்றிப் போச்சு. எனக்கு உடம் பெல்லாம் வெடவெடன்னு நடுங்கிட்டுது. தலையைச் சுற்றி அடிச்சுது. மயக்கம் வருகிற மாதிரி இருந்தது. சிவனேயென்று சமையற்கட்டில் உட்கார்ந்துவிட்டேன். உன் அக்கா வந்த போதுகூட ஒரு வார்த்தை பேசவில்லை. நான் யாரையோ குற்றம் சொல்கிறேன் என்று நினைத்துக் கொள்ளாதே, அம்மா. இப்போ அவளைக் காணோமே என்று நீ தேடியதாலே காலையிலே நடந்தது நினைவு வந்தது...''

தட்டிலே சாதம் அப்படியே இருந்தது. ரேணுகா கையைக் கழுவிக் கொண்டாள். ''இப்ப என்ன ஆகிவிட்டது? சாப்பாட்டைச் சாப்பிடு முதலிலே,'' என்று பாட்டி சொல்வது அவள் காதில் விழவில்லை. அவள் மனம் குழம்பியிருந்தது. பாட்டி கேட்டது அக்காவின் குரலாகத்தான் இருக்குமா? குளிக்கும்போது மட்டும் எப்படிப் பழைய குரல் வர முடியும்? பன்னீர்ப் பூ மரம் உள்ள இடத்தில் வேறு சில செடி கொடிகளும் உண்டு. சற்று அடர்த்தியான இடம். சுகுமாரி குளித்துக் கொண்டிருந்தபோது, குளியலறைக்கு மறுபுறத்தில் வேறு யாராவது பாடிக் கொண்டும் இருந்திருக்கலாம். வீட்டில் இருக்கும் இன்னொரு பெண். வேலைக்காரிதான். ஆனால் அவள் வயதானவள். சினிமாவுக்குக்கூடப் போக மாட்டாள். பாடுவதாவது...! நர்ஸ்களில் யாராவது. இருக்க முடியாது. அவர்கள் பின் கட்டுக் குளியலறைப் பக்கம்

வரவே தேவையில்லை. முன் கட்டிலேயே எல்லா வசதிகளும் கொண்ட அறை அவர்களுக்கு இருக்கிறது. பாட்டி கேட்டதாகச் சொல்லும் பாட்டு வெறும் மனப் பிரமைதான்...

''சுகுமாரி இன்னும் வரவில்லையா என்று ஐயா கேட்கிறார்.'' வேலைக்காரன் வந்து வினவினான். அப்பாவின் கவலையை ரேணுகா வளர்த்த விரும்ப வில்லை. தானே சென்றாள். ''ஏதோ சினிமாவுக்குப் போக வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தாளாம். சமையல் பாட்டி சொன்னாள். எப்போது வருவாளோ என்னவோ. நீங்கள் மருந்து சாப்பிட்டீர்களா? தூங்குங்கள் கவலைப்படாமல்,'' என்றாள். ''என்னிடம் சொல்லாமல் போக மாட்டாளே...'' என்று குழந்தைப் பாண்டியன் புலம்பினார்.

''அக்கா என்ன பச்சைக் குழந்தையா, - படியை விட்டு இறங்கினால்கூடச் சொல்லிக்கொண்டு போக?'' வலுக்கட்டாயமாக ஒரு சிரிப்பை உதிர்த்தாள் ரேணுகா. தந்தைக்கு ஒரு போர்வை எடுத்துப் போர்த்தினாள். நர்ஸை நோக்கி ஒரு புன்முறுவல் - போலியாக.

வெளியே வந்தாள். யாரது தோட்டத்தில் தள்ளாடினாற் போல் வருவது? நஞ்சுண்டனா! கலைந்த கிராப்பு! கசங்கி அழுக்கேறிய சட்டை! வலது கால் செருப்பு அறுந்து விட்ட மாதிரி ஒரு பக்கமாய்த் தொங்குகிறது. முகத்தில் வியர்வை வெள்ளம். புறங்கையால் துடைத்துக் கொள்கிறான். ஏற்கெனவே அப்படித் துடைத்துத் துடைத்து முழுக்கைச் சட்டையின் முன்பாதி பூரா அழுக்கு. ''உஸ்!'' உதட்டின் குறுக்கே விரல் வைத்து எச்சரித்தான் நஞ்சுண்டன். இப்போது வேண்டாம், அப்புறம் பேசலாம்

என்று ஜாடை காட்டினான். ரேணுகாவுக்கு ஒரே திகைப்பு. ஓசையெழுப்பாமல் அவனைப் பின் தொடர்ந்து சென்றாள். மாடியில் நஞ்சுண்டனின் அறையை அடைந்தார்கள். அதன் பிறகே அவன் வாய் திறந்தான். "எல்லாம் உன் அக்காவினால் வந்தது தான். இங்கேயே இரு. அப்புறம் வந்து சொல்கிறேன்."

மாடியிலிருந்த பாத்ரூமை நோக்கி அவன் நடந்தான். ரேணுகாவின் ஆர்வக்மிக்க குரல் அவனைத் தடுத்து நிறுத்தியது. "அக்காவா? எப்போது, எங்கே பார்த்தீர்கள் அவளை? இன்னும் வீடு திரும்பக் காணோமே என்று திகில் பட்டுக் கொண்டிருக்கிறேனே நான்!"

குளியலறை வாசலில் நின்று திரும்பிப் பார்த்தான் நஞ்சுண்டன். "சுகுமாரி இன்னுமா வரவில்லை? நான் அவளைப் பார்தது சாயந்தரம் நாலு மணிக்கல்லவா? இப்போது ஒன்பதாகிறதே?"

"என்னவோ தெரியவில்லை. இன்னும் வரவில்லை. நீங்கள் அவளை..."

"விவரமாய் வந்து சொல்கிறேன். இங்கேயே இரு." அவன் கதவைச் சாத்திக் கொண்டான். மாடி வெராந்தாவில் கையைப் பின் புறம் கட்டிக் கொண்டு நின்றாள் ரேணுகா. வெளியே கரி வானத்தில் நட்சத்திரங்கள் கண் சிமிட்டின. இருண்ட தோட்டம் எண்ணற்ற கோரங்களைக் காட்டியது. சில்லென்ற காற்று அவள் கூந்தலைச் சிலுசிலுப்பியது. ரேணுகாவின் உள்ளம் எண்ணாததெல்லாம் எண்ணியது. நஞ்சுண்டன் அக்காவைச் சந்தித்தான் என்ற வகையில் ஓர் ஆறுதல். ஆனால், 'எல்லாம் உன் அக்காவினால்தான்' என்ற சொற்களில் மறைந்திருந்த மர்மம்?

எப்போதுதான் இவர் குளித்து உடை மாற்றிக் கொண்டு வெளிவருவார்? குறுக்கும் நெடுக்குமாக உலவினாள் ரேணுகா. இருபது நிமிடங்கள் கழித்துத்தான் வெளிவந்தான் நஞ்சுண்டன். அவனது வழக்கமான டிப்டாப் திரும்பி விட்டது. முகத்தில்கூட ஒரு புதுக்களை.

''நான் சாப்பிட்டுவிட்டேன். சமையற்காரப் பாட்டி காத்துக் கொண்டிருக்கிறாளா?'' என்று கேட்டான். ''இல்லை,'' என்றாள் ரேணுகா. ''நல்லது, என் அறைக்கு வா.'' அவன் முன்னே சென்று விளக்கைப் போட்டான். அவள் கட்டிலின் முனையில் உட்கார்ந்து கொண்டாள். சிகரெட்டொன்றைப் பற்ற வைத்துக் கொண்டான் நஞ்சுண்டன். குப் குப்பென்று புகையை வெளிவிட்டான் சில வினாடிகளுக்குப் பிறகு.

''சுகுமாரி ஆபீசுக்குப் போகிறேனென்று புறப் பட்டாள் இல்லையா? நானும் அவளுக்குத் தெரியாமல் பின் தொடர்ந்தேன். அதை எப்படியோ தெரிந்து கொண்டு விட்டாள் போலிருக்கிறது. என் கண்ணில் மணைத் தூவி விட்டாள். மயிலாப்பூர் லஸ் வரையில் தான் அவளைப் பின்தொடர முடிந்தது. ஒரு பெரிய துணிக் கடைக்குள் நுழைந்தவள், இன்னொரு வாசல் வழியாக நழுவி விட்டாள். ரொம்ப நேரம் கழித்துத் தான் நான் ஏமாந்தது தெரிந்தது.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன பண்ண முடியும்? தற்செயலாய் எங்காவது கண்ணில் படுகிறாளா பார்க்கலாம் என்று ஊர் பூரா சுற்றினேன். எனக்கு நம்பிக்கையேயில்லை. ஆனால் திடீரென்று ஒரு டாக்ஸியில் அவள் போய்க் கொண்டிருப் பதைப் பார்த்தேன்...''

ரேணுகா குறுக்கிட்டாள்: ''கூட ஒரு சைனாக்காரன் இருந்திருப்பானே?''

நஞ்சுண்டனின் பார்வையில் ஒரு மினுமினுப்பு ஏற்பட்டது. ''சைனாக்காரனா... அ...ஆமாம், ஆமாம். உனக்கு எப்படித் தெரிந்தது?''

டெலிபோன் ஆபரேட்டரான ஸ்டெல்லா தன்னிடம் கூறியதைத் தெரிவித்தாள் ரேணுகா.

நஞ்சுண்டன் ஏதோ யோசனை செய்தான். மெதுவாகப் பேசலானான்: ''ஓகோ... அந்தச் சைனாக் காரனுடன் தான் நாள் பூரா சுற்றிக் கொண்டிருக்கிறாளோ... சரி. நான் செய்ததைக் கேள். அவளை எப்படியாவது பின்தொடர நினைத்தேன். தூரத்தில் இன்னொரு டாக்ஸி நின்றிருந்தது.

அதை நோக்கி ஓடினேன். அப்போது வேகமாக வந்த ஒரு கார் என்னை இடித்துத் தள்ளியது!''

''ஐயையோ!''

''நல்ல வேளை. என்மீது ரொம்ப மோதவில்லை. நான் அலறியடித்துக் கொண்டு விழுந்தேன். ஓரமாக. அங்கே மழைத் தண்ணீர் சேறும் சகதியுமாக இருந்தது. அதுதான் என் சட்டை பாண்ட்டெல்லாம் அப்படி ஆகி விட்டது.'' இதைக் கூறிவிட்டு, ரேணுகாவின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான் நஞ்சுண்டன். அவள் முகத்தில் கவலை படர்ந்திருந்தது. அனுதாபமும் நிறைந்திருந்தது.

''ஓகோ, அதுதானா? அப்புறம்?''

''சுகுமாரியின் டாக்ஸி பார்வையிலிருந்து மறைந்து விட்டது. பிறகு என்ன செய்ய முடியும்? புழுதியைத்

தட்டிக் கொண்டு புறப்பட்டேன். அந்த அலங்கோலத் துடன் வெளிச்சத்தில் நடுச்சாலையில் வர அவமான மாயிருந்தது. இருட்டட்டும் என்று காத்திருந்துவிட்டு வந்தேன்.''

ரேணுகா கடியாரத்தைப் பார்த்தாள். ''மணி பத்தரை யாகிறது... ஈவனிங் ஷோவுக்குப் போயிருந்தால்கூட இன்னேரம் திரும்பியிருக்க வேண்டாமோ...''

விரலிடுக்கில் சிகரெட்டுடன் அசையாது நின்றான் நஞ்சுண்டன். ''யாராவது அவளை வரச் சொல்லியோ, பார்க்கவேண்டுமென்றோ கடிதம் போட்டிருக்கலாம் இல்லையா? ஏன், சுகுமாரியின் அறையைச் சோதனை போட்டால் என்ன?''

''அக்கா இல்லாதபோதா?'' நஞ்சுண்டன் பரபரத் தான். ''இல்லாதபோதுதானே பார்க்க முடியும்?'' ''நடுவில் அவள் திடுப்பென்று வந்து வந்துவிட்டால்?''

''வரமாட்டாள்.''

''ஐயோ! ஏனப்படிச் சொல்கிறீர்கள்?'' ரேணுகா கூவிவிட்டாள்.

''ஸ்! ஒரு பேச்சுக்குச் சொன்னேன். நீ என்ன இவ்வளவு பயந்தாங்கொள்ளியாக இருக்கிறாய்?''

''இருங்கள், நான் போய் வாசல் கேட்டைச் சாத்திவிட்டு, வேலைக்காரனிடமும் சொல்லிவிட்டு வருகிறேன்.'' என்று புறப்பட்டுச் சென்றாள், ரேணுகா. இரண்டு நிமிடத்தில் திரும்பினாள். சுகுமாரி அறை பூட்டப்பட்டிருக்கவில்லை. திறந்ததுமே ஓர் இனிய மணம்.

கலையழகுடன் கூடிய சூழ்நிலை. படிப்பும் பண்பாடும் பிரதிபலிக்கும் அலமாரிகள்.

நஞ்சுண்டன் கேட்டான்: ''ரேணுகா, உன் அக்காவுக்கு ஏதோ நேர்ந்துவிட்டதென்று வைத்துக் கொள்...''

''ஐயையோ! வேண்டாம், வேண்டாம்! ஏன் அந்த வார்த்தை யெல்லாம் சொல்கிறீர்கள்?''

''நீயும் நானும் பச்சைப் பாப்பாவா? பிரத்தியட்ச நிலைமையைப் பார்க்க வேண்டாமா? சும்மாவானும் நல்லதையே கற்பனை செய்து கொண்டு நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதா?''

''இல்லை, இல்லை. அக்காவுக்கு ஒன்றும் நேர்ந்திராது. ராத்திரியே வந்துவிடுவாள் பாருங்கள்!''

''சரி, வரட்டும். வேண்டாமென்றா சொல்கிறேன்? எதற்கும் என் கேள்விக்குப் பதில் சொல்லு. சுகுமாரிக்கு அப்படி ஏதேனும் நேருமானால், உனக்கு யார் மீது சந்தேகம் ஏற்படும்?''

''சந்தேகமா? எதற்கு?'' திகில் ரேணுகாவின் முகத்தைக் கறுப்பாக்கியது.

''சுகுமாரிக்கு ஆபத்தை ஏற்படுத்தியவர் என்று யாரை நினைப்பாய்? அவள் மீது கொடும் பகை கொண்டவரென்று யாரையாவது நீ குறிப்பிட முடியுமா?''

'பாலசந்தர்! டாக்டர் பாலசந்தர்!' என்று ரேணுகாவின் உள்ளம் கூவியது. 'சுகுமாரியைச் சும்மா விட் மாட்டேன்!' என்று அவன் சினந்து சொன்ன சொற்கள் அவள் செவியில் எதிரொலித்தன.

''சொல்லு ரேணுகா, யார் மேல் உனக்குச் சந்தேகம்?''

''இல்லை, யார் மேலும் இல்லை. அக்காவுக்கு யாரிடமும் பகை கிடையாது!'' என்றாள் ரேணுகா.

''சரி, பொழுது விடியட்டும்.'' நஞ்சுண்டன் அறையைச் சாத்தினான்.

''அதுவரை?''

''படுத்துத் தூங்கு. இரவு சுகுமாரி திரும்புகிறாளா பார்ப்போம்.''

ரேணுகா தன் அறைக்குத் திரும்பினாள். படுத்தாள் மஞ்சத்தில்.

தூக்கம்? அது ஏன் வருகிறது? பயங்கரக் கனவுகள். பைத்தியக்கார எண்ணங்கள். கண்ணை மூடினால் கொடிய தோற்றங்கள். தோட்டத்தில் இலைகள் உதிரும் ஓசைகூட அவள் செவிக்குக் கேட்டது. அக்காவுக்கு ஏதாவது நேர்ந் திருந்தால்...! ஏதாவது நேர்ந்திருந்தால்...! பாலசந்தர்! பாலசந்தர்! சே, சே! இருக்காது... ஐயோ! என்னென்ன கொலைகார நினைவுகள்! படுக்கையை விட்டு மெல்ல எழுந்தாள். வெளியே வந்தாள். அடிமேலடி வைத்து நடந்தாள்.

தெருவுக்கு வந்தாள். கரி மூட்டைக்குள் நடக்கிற மாதிரி, கப்பிக் கொண்டிருந்த இருளில் வேகமாக சென்றாள். சென்று கொண்டேயிருந்தாள். டாக்டர் பாலசந்தரின் நர்ஸிங் ஹோமை அடைந்ததும் அவள் நடை நின்றது.

நின்று கவனித்த்தாள்.

அங்கே யாரும் காணோம்.

கேட் உள்பட எல்லாம் பூட்டியிருந்தன.

பக்கத்திலேதான் பாலசந்தரின் வீடு. ஒன்றிக் கட்டையாகத் தனியே வசிக்கிறான் அவன். மாமா என்று ஒருவர் உண்டாம். ஆனால் அவர் எங்கே இருக்கிறாரோ, ரேணுகாவுக்குத் தெரியாது. பாலசந்தரின் வீட்டை அடைந்தாள். அதுவும் பூட்டியே இருந்தது.

கைக்கடியாரத்தைப் பார்த்தாள். பன்னிரண்டுக்கு மேலாகிவிட்டது.

எங்கே போயிருப்பான் பாலசந்தர்? அவள் மனம் திக் திக்கென்று அடித்துக் கொண்டது. பயம் நரம்புகளைச் சுண்டியிழுத்தது. திடீரென்று ஓர் உருவம் அவள் எதிரில் நின்றது. பெரிதாய்ச் சிரித்தது. அதன் பற்களுக்குத்தான் எத்தனை வெண்மை! பனிக் கட்டிபோல் அந்த இருட்டில் பளபளத்தது. ரேணுகாவின் உடம்பு படபடத்தது. ''யார்? யார் நீ?'' என்று அலறினாள். சட்டென அவள் வாயைப் பொத்தியது இரும்புக் கரம்.




''யார்? யார் நீ?'' மீண்டுமொரு முறை அலற முயன்றாள் ரேணுகா. இரும்புக் கரம் அதற்கு இடம் கொடுக்கவில்லை. அவள் வாயைப் பொத்தியவாறே தெருவின் மறுபுறத்துக்கு இழுத்துச் சென்றது.

''முட்டாள் ரேணுகா! மூளையில்லாத ரேணுகா!'' கையை எடுத்துவிட்டு, கோபித்தது உருவம்.

அழுத்திய அழுத்தத்தில் கன்னங்கள் இரண்டும் விண்ணென்று தெறித்தன. ''நீங்களா?'' என்றாள் குரலை அடையாளம் கண்டுகொண்டு. தெரு வெளிச்சத்தில் முகத்தையும் ஐயமறக் காண முயன்றாள்.

''நானேதான்! நானேதான்!'' பாம்பு போல் சீறியது அந்தக் குரல். ''யார் மீது சந்தேகம் என்று கேட்டேன். ஒருவர் மீதும் இல்லை என்றாய். இப்போது நீ செய் திருக்கும் காரியம். எனக்கே தெரியாமல் நீ வந்திருக்கும் ரகசியப் பயணம்? என்ன அர்த்தம் இதற்கு ரேணுகா?''

''என்னை மன்னியுங்கள்.'' ரேணுகா தலை குனிந்தாள். யாரோ என்னவோ என்று பயந்த உருவம் கடைசியில் நஞ்சுண்டன்தான். அந்த வகையில் ஆறுதல் ஆனால் அவனுக்கும் தெரியாமல் ஒரு காரியம் செய்ய முயன்று தோற்றாளே! அது தலைக் குனிவு.

நஞ்சுண்டன் சொன்னான்: ''நீ அழைத்ததன் பேரில் தான் நான் உன் வீட்டுக்கு உன் உதவிக்கு வந்தேன். நீ போகச் சொன்னால் நான் போய்விடுகிறேன். என்மீது நம்பிக்கை இல்லை என்பதை வாயால் சொல்லிவிடு. இப்படிக் குறிப்பால் காட்டாதே.''

''இல்லையில்லை, உங்கள்மீது எனக்குப் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. ஆனால்... ஆனால்...''

''சொல்லு. யார்மீது உனக்குச் சந்தேகம் என்று இப்போதுதான் தெரிந்து விட்டதே!''

''என்ன?''

''டாக்டர் பாலசந்தரை எச்சரிக்க வந்தாயா?''

ரேணுகாவுக்கு விம்மல் வெடித்துக் கொண்டு வந்தது. ஆனால் அந்த நட்ட நடுநிசியில் நட்ட நடுத்தெருவில்...! யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்?

''வாருங்கள் போகலாம்.'' என்றாள். ''போய்க் கொண்டே பேசலாம்.''

பாலசந்தரின் வீட்டை ஏறிட்டுப் பார்த்தான் நஞ்சுண்டன். ''உன் அக்காவும் வீட்டுக்கு வரவில்லை. இவனும் வீட்டில் இல்லை. இரண்டையும் தொடர்பு படுத்தி நீ பார்ப்பது சரிதான், ரேணுகா?''

''பார்த்தீர்களா? இதற்குத்தான் நான் பயந்தேன். நீங்கள் துப்பறியும் வீரர். குற்றவாளி என்று முதலில் தீர்மானம் செய்துவிடுவீர்கள், பிறகு அதற்கான ஆதாரங் களைத் தேட ஆரம்பிப்பீர்கள். டாக்டர் பாலசந்தர் விஷயத்தில் அப்படிச் செய்துவிடக் கூடாதென்றுதான்...''

''என்னை முந்திக்கொண்டு இங்கே வந்தாயாக்கும்? உன்னைப் பின்தொடர்ந்து நான் வருவேன் என்று நீ எதிர்பார்க்கவில்லை. இல்லையா?''

''ஆமாம்.''

''சரி. ஆதாரங்களைக் கண்டுபிடித்த பிறகு பாலசந்தர் மீது குற்றம் சாட்டுகிறேன். ஆனால் அவனிடம் சந்தேகம் விழுந்த காரணத்தை நீ சொல்லலாமில்லையா?''

தயங்கித் தயங்கி நடந்ததையெல்லாம் சொன்னாள் ரேணுகா.

'சுகுமாரியைச் சும்மா விடமாட்டேன்.' - அந்த இடத்தைச் சொன்ன போது, ரேணுகாவின் குரல் நடுங்கியது. நிமிர்ந்து நோக்கியிருந்தால் இன்னொன்றைக் கண்டிருப்பாள் - நஞ்சுண்டனின் முகத்தில் மலர்ச்சி பரவுவதை; குரூர மகிழ்ச்சி இடம் பெறுவதை.

சொல்லி முடித்ததும் ரேணுகா கெஞ்சினாள்: ''உணர்ச்சி வசப்படுகிறவர் அவர். அதனால் அப்படிப் பேசிவிட்டார். அதைப் பெரிதாய் எடுத்துக் கொள்ளாதீர்கள்.''

''இந்த விபரீத பாசத்தை விட்டு விடு, ரேணுகா.''

''என்ன... என்ன...''

''சுகுமாரிக்கு ஒன்றும் நேர்ந்திராது என்றே நம்புவோம். ஆனால் அப்படி நேர்ந்திருந்தால் - நிச்சயம், முதல் விலங்கு பாலசந்திரன் கைக்காகத்தான் இருக்கும்.''

''ஐயோ!''

''அப்படியொரு சந்தர்ப்பம் நேரிட்டால், நீ இரக்கம் காட்டக் கூடாது டாக்டர் பாலசந்தர் மீது உனக்குள்ள... உள்ள... என்ன சொல்லட்டும்?''

''காதல்.'' ஒப்புக் கொண்டாள் ரேணுகா. ''காதல் உன் கண்ணை மறைக்கக் கூடாது. அதற்குத்தான் இப்போதே எச்சரிக்கிறேன். வா.'' நடையை வேகமாய்ப் போட்டான் நஞ்சுண்டன். விடிகாலையின் வெளிச்சம் வான இடுக்கில் சிரித்தது.

பங்களாவை அடைந்ததும் சுகுமாரியின் அறைக்கு ஓடினாள் ரேணுகா. ஊகூம். சுகுமாரி இல்லை. ஏமாற்றமே

காத்திருந்தது. ஒரு பெருமூச்சுடன் கூறினாள்: "இனி மேலும் அப்பாவிடம் மறைப்பதில் பயனில்லை. காலையில் சொல்லி விட வேண்டும், அக்காவைக் காணோ மென்ற தகவலை."

"ஆமாம்," என்று ஆமோதித்தான் நஞ்சுண்டன். ஆனால் காலையில் அவள் சொன்ன போது. "நீ சுத்த அசடு?" அவ்வளவுதான் சொன்னார். குழந்தைப் பாண்டியன். ரேணுகாவினால் நம்ப முடியவில்லை. தந்தையின் முகத்தைக் கூர்ந்து ஆராய்ந்தாள். கலவரம் காணப்படவில்லை. கவலைக்கும் அதற்கும் வெகு தூரம். புன்னகை இருந்தது என்றுகூடச் சொல்லலாம். "என்னப்பா சொல்கிறீர்கள்? அக்காவைக் காணவில்லையே என்று பயம் என்னைக் கொல்கிறது. நீங்களானால்..." குழந்தைப்பாண்டியன் புன்சிரிப்புடன் நஞ்சுண்டன் பக்கம் தலையைத் திருப்பினார். "நான்கூட நேற்று ராத்திரி கவலைப்பட்டேன். என்னிடம் சொல்லாமல் போக மாட்டாளே என்று புலம்பவில்லையா? அப்புறம்தான் ஞாபகம் வந்தது."

"என்ன ஞாபகம் வந்தது?"

"சுகுமாரியின் குறும்புத்தனம்." ரேணுகா குழப்பத்து டன் நஞ்சுண்டனைப் பார்த்தாள். அவன் எவ்வித உணர்ச்சியும் காட்டாமல், "சுகுமாரி அப்படியெல்லாம் குறும்பு செய்வது உண்டா?" என்றான்.

"அதையேன் கேட்கிறீர்கள்?" மெல்லச் சிரித்துக் கொண்டே கண்களை மூடிக் கொண்டார் குழநதைப் பாண்டியன், மூத்த மகளைப் பற்றிய இனிய எண்ணங்கள் அவர் மனத்தில் ஓடின போலும். முகத்தில் அந்த இனிமை

பிரகாசித்தது. ''உனக்கு எல்லாம் மறந்து போய்விட்டது. மூன்றாம் வருடம் கிறிஸ்துமஸின் போது சுகுமாரி என்ன ஒரு கலாட்டா பண்ணிவிட்டாள்! நினைவு வரவில்லை?''

ரேணுகா நெற்றியைச் சுருக்கிக் கொண்டாள். ''அ... ஆமாம்... வந்து... சினேகிதி அம்புஜவல்லியின் வீட்டுக்குப் போய்...''

''அதேதான், அதேதான்!'' குதூகலம் குமிழிவிட்டது குழந்தைப் பாண்டியனின் பேச்சில். ''கேளுங்கள், நஞ்சுண்டன் கிறிஸ்துமஸ் லீவின்போது ஒரு நாள் சுகுமாரி எங்கேயோ வெளியில் போயிருந்தாள். காலையிலே போனவள் ராத்திரி ஒன்பது மணிக்குத்தான் வந்தாள். நான் ஒன்றும் கேட்கவில்லை.''

''கோபிக்கவுமில்லை?'' என்றான் நஞ்சுண்டன்.

''இல்லை. அதுதான் சுகுமாரிக்கும் கோபம். 'காலையிலே போய்விட்டு, ராத்திரி வருகிறேன். எனக்கு என்ன ஆயிற்றோ எங்கே போனேனோ என்று ஒரு ஆத்மா கவலைப்படவில்லையே இந்த வீட்டில்!' என்றாள். நான் உடனே, 'நீ என்ன பச்சைக் குழந்தையா, காணாமற் போய் விட்டாயோ என்று கவலைப்பட?' என்று சொல்லி விட்டேன். அவளுக்கு இன்னும் ரோஷமாகப் போய் விட்டது. 'ஓகோ! பச்சைக் குழந்தைதான் காணாமற் போகுமா?' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள். இதையெல்லாம் நாங்கள் மறந்து ஒரு மாதம் இருக்கும். திடீரென்று ஒரு நாள் சுகுமாரியைக் காணோம்!''

நஞ்சுண்டன் சிரித்தான். ''வேண்டுமென்றே?''

''பின்னே? நன்றாய்ப் இவர்களெல்லோரும் தேடித் தவிக்கட்டும் என்று ஒளிந்து கொண்டுவிட்டாள். ஒரு பகல் பூரா, ஒரு ராத்திரி பூரா வரவில்லை. நாங்கள் பயந்து நடுங்கிவிட்டோம். போலீசிலே சொல்ல வேண்டியதுதான் என்று தீர்மானமும் செய்துவிட்டோம். 'அழுதீர்களா? தவித்தீர்களா? வேண்டும் நன்றாய்!' என்று கை கொட்டிச் சிரித்துக் கொண்டே உள்ளே நுழைகிறாள்! எப்படி இருக்கும் எங்களுக்கு?''

''குறும்புத்தனம் தான்,'' என்றான் நஞ்சுண்டன்.

ரேணுகா பரபரப்புற்றாள். ''அப்போது அவள் சினேகிதி அம்புஜவல்லியின் வீட்டில் தங்கியிருந்தாளே? இப்போது அங்கேதான் இருப்பாளோ?''

''அப்படித்தான் தோன்றுகிறது. அவர்கள வீட்டுக்குப் போன் பண்ணிப் பார்.''

''இதோ.'' ரேணுகா ஆர்வம் துடிக்க எழுந்தாள்.

''போலீசில் தெரிவிக்கலாமோ என்று நான் நினைத் தேன்.'' நஞ்சுண்டன் அவர் முகத்தின்மீது பார்வையை நாட்டினான். அப்பாவின் பதிலுக்காக ரேணுகாவும் அறை வாசலில் நின்றாள்.

''நோ, நோ! போலீசும் இன்னொன்றும் எதற்கு? வீண் கலவரம்,'' என்றாள் குழந்தைப்பாண்டியன்.

அம்புஜவல்லியின் வீட்டுக்காக டெலிபோனை ஒருமுறை சுழற்றினாள் ரேணுகா. 'எங்கேஜ்'டாக இருந்தது. மீண்டும் சுழற்றினாள். அப்படியே பொறுமையிழந்து டப் டப் என்று நாலைந்து தரம் தட்டினாள் போனிலுள்ள

'குதிரை'யை. பிறகு சுழற்றினாள். எதிர்பாராத விதமாய்க் கனெக்ஷன் கிடைத்துவிட்டது. "நான்தான் ரேணுகா பேசுகிறேன். சுகுமாரியின் தங்கை."

அம்புஜவல்லியின் அப்பாவான அழகிரிசாமியே மறுமொழி கொடுத்தார். "சௌக்கியமா அம்மா? அப்பா நல்லாயிருக்கிறாரா? ஏது, இவ்வளவு காலங்கார்த்தாலே கூப்பிடுகிறே?"

"அம்புஜவல்லி இருக்கிறாளா? கொஞ்சம் கூப்பிடுங்களேன்."

அவள் முகம் சுருங்கியது.

"என்ன... ஓகோ... சரி." டெலிபோனை வைத்தாள். "அப்பா சொன்னதும் சரிதான் போலிருக்கிறது," தனக்குத் தானே பேசிக் கொண்டாற்போல் நடந்தாள் - குழந்தைப் பாண்டியனின் அறையை நோக்கி.

"ஏன்? என்ன சொன்னார்கள்?" ஆர்வத்துடன் பின்னாலேயே வந்தான் நஞ்சுண்டன்.

குழந்தைப்பாண்டியனின் அறையில் தான் அவனுக்குப் பதில் கிடைத்தது. "அம்புஜவல்லி மகாபலி புரம் போயிருக்கிறாளாம், யாரோ சினேகிதிகளுடன்."

பாவம், குழந்தைப்பாண்டியன் சற்று முன் தெம்பாய்ப் பேசியதெல்லாம் வெளிப் பார்வைக்குத்தான். உள்ளுக்குள் ரொம்பக் கவலைப்பட்டிருப்பார் போலிருக் கிறது. ரேணுகாவின் தகவலைக் கேட்டதும் "பார்த்தாயா, பார்த்தாயா? நான் என்ன சொன்னேன்?" என்றார்.

"ஆனால் சுகுமாரி அவளுடன் போயிருக்கிறாளா இல்லையா என்று அவருக்கு தெரியாதாமே? அழகிரிசாமி சொல்கிறாரே?"

"ஐயோ, ஐயோ! இவள் ஒரு பாப்பா!" குழந்தைப் பாண்டியன் நஞ்சுண்டனை நோக்கி விழிகளைத் திருப்பினார், "என்ன சார், நான் சொல்வது?"

"கரெக்ட், கரெக்ட். பாப்பாவிலும் ஒன்றரை வயசுப் பாப்பா!" நஞ்சுண்டன் கடகடவென்று சிரித்தனா.

அந்தச் சிரிப்பிலே ரேணுகா பங்கு கொள்ளக் காணோம். "அப்பா! ஆயிரம் தான் சொல்லுங்கள். எனக்கு மனம் சமாதானமாகவில்லை. நான் போய்..."

"எங்கே போய்?"

"மகாபலிபுரத்துக்குத்தான், அப்பா. அக்காவைக் கண்ணால் பார்த்தாலொழிய எனக்கு நிம்மதி ஏற்படாது."

"பைத்தியக்காரி, பைத்தியக்காரி." பாசத்துடன் சிரித்தார் குழந்தைப்பாண்டியன். "நஞ்சுண்டனை வேண்டு மானால் துணைக்கு அழைத்துப் போகிறாயா?"

"வேண்டாமப்பா."

கார் ஷெட்டை நோக்கி விரைந்தாள் ரேணுகா. தோட்டத்தில் பீடி பிடித்துக் கொண்டிருந்த டிரைவர் எறிந்து விட்டு ஓடிவந்தான். அவனை முந்தினான் நஞ்சுண்டன். "நீ வேண்டாம். நான் அழைத்துப் போகிறேன்," என்றான்.

"நீங்களும் வேண்டாம்," என்றாள் ரேணுகா.

திடுக்கிட்டான் நஞ்சுண்டன்:

''ஏன்?'' ''என் திகில் நிமிடத்துக்கு நிமிடம் அதிகமாகிறதே தவிர, குறையவில்லை. இந்த நிமிட முதல் நம் வேலையை இரண்டு பங்காகப் பிரித்துக் கொள்வோம். நீங்கள் இங்கே இருந்து கொள்ளுங்கள். விசேடமாக என்ன நேர்ந்தாலும் கவனிக்கலாம். நான் மகா பலிபுரத்துக்குப் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்.''

''தனியாகப் போகிறேன் என்கிறாயே?''

''வேறு வழியில்லை. இரண்டு பேரும் சேர்ந்து வெளியே போய்விட்டால் சதிகாரர்களுக்குக் கொண்டாட்டமாகிவிடும்.''

டர்ரென்று கார் சீறிக்கொண்டு புறப்பட்டது. ''கண்ணைத் திறந்து கொண்டு இருங்கள்.''

''நீயும்தான். கண்ணைத் திறந்து கொண்டு ஓட்டு,'' அவன் நகைத்தான். கார் மறைகிற வரையில் அந்த நகைப்பு அவன் உதட்டில் குடியிருந்தது. பிறகு திடீரென ஜாகையைக் காலி செய்து விட்டது.

பின்கை கட்டியவாறு சில வினாடிகள் அங்கேயே நின்றான் நஞ்சுண்டன். பிறகு புகைந்து கொண்டிருந்த சிகரெட்டைத் தரையில் எறிந்தான். குதிகாலால் அழுத்தித் தேய்த்தான். லாரி அரைத்த கோழிக் குஞ்சுபோல் அது பிய்ந்து சிதைந்தது. குடல் வெளிபட மாண்டு மடிந்தது.

ரேணுகாவின் கார் பறந்து கொண்டிருந்தது. சிறிய சாலையிலிருந்து பெரிய சாலை; வளைவுகள்; திருப்பங்கள்; ஸ்டீரிங்கை இறுகப் பிடித்துப் பிடித்து, உள்ளங்கைகள் ரத்தச் சவப்பாகிவிட்டன.

மகாபலிபுரம்.

உல்லாசப் பிரயாணிகள் தங்கும் அரசாங்க ஒட்டலுக்குத்தான் முதலில் சென்றாள் ரேணுகா. ஆனால் அங்கே அவள் தேடியவளைக் காணோம். அடுத்து, பாண்டவர் ரதத்துக்குப் போனாள். இளநீர் வியாபாரி பிடித்துக் கொண்டான். கிரஷை உடைத்து ஸ்ட்ரா போட்டு எடுத்து வந்தான் ஒரு பையன். கைடு ஒருவன், ''எல்லா இடமும் நான் காட்டறேன், வாங்கம்மா,'' என்று ஓடிவந்தான்.

விதவிதமான கார்கள், வேன்கள், மோட்டார் சைக்கிள்கள், ஸ்கூட்டர்கள் எல்லாம் இருந்தன - ரேணுகா தேடிய காரைத் தவிர். வெள்ளைக்காரர்கள், கறுப்பர்கள், குழந்தைகள், கிழவர்கள் எல்லோரும் இருந்தனர் - அம்புஜவல்லியைத் தவிர.

பிற்பகல் நேரம். குள்ள நிழல்கள் நெட்டையாகின. வெம்மை மாறி, குளிர்ச்சி பரவியது. சிரிப்பும் கொம்மாளமும் பிள்ளை பெற்றன. மகாபலிபுரத்தின் கவர்ச்சி, காய்ச்சல்போல் ஏறிக் கொண்டிருந்தது.

''கடற்கரைக் கோவில்,'' என்று யாரோ எதற்கோ சொன்னார்கள். ரேணுகா, அங்கு ஓடினாள்.

அதே! அதோ! அம்புஜவல்லியின் க்ரீம் நிறக் கார் நிற்கிறது. ஆம். அதே எண். சரிதான். அம்புஜவல்லியின் குரல் அவளை நிறுத்தியது. இரட்டை நாடிக்காரி. ஆப்பிளைக் கடித்தவள், அப்படியே வாயைத் திறந்து அதிசயித்தாள்.

ரேணுகா பதறினாள்:

''அம்புஜம்! என் அக்கா எங்கே? உன்னோடு வரவில்லை?'' அம்புஜவல்லியைச் சூழ்ந்து நிற்கும் மூன்று தோழிகளையும் அவள் கண்கள் வட்டமிட்டன. மூவரும் யார் யாரோ, அக்காவல்ல. சுகுமாரி அல்ல.

''சுகுமாரியா? நான் அவளைப் பார்க்கவில்லையே? என்னுடன் வந்திருப்பதாகவா சொன்னாள்? அவளைத் தேடிக்கொண்டா வந்தாய்?''

இடிந்து சரிந்து போனாள் ரேணுகா. முட்டாள்தனம். எந்தவித ஆதாரமுமில்லாமல் ஒரு வசதியான கற்பனையை அவளாகவே செய்து கொண்டாள்; அவளாகவே அதை வளர்த்தாள்; பெரிதாக்கினாள். அவ்வளவும் மாயைதான் என்று இப்போது புரிந்துவிட்டது. கண்கள் ஏன் இருளாது? கால்கள் ஏன் தள்ளாடாது?

அம்புஜவல்லியின் பருமனான தோள்களை அவள் பற்றிக் கொண்ட அதே சமயம் -

யார் யாரோ அவர்களைக் கடந்து கொண்டு வேகமாக ஓடினார்கள். அவர்களுடைய பேச்சு அரைகுறையாகக் காதில் விழுந்தது. படகிலே... இங்கே இல்லை... மதறாஸி லிருந்து படகு வருகிறது இல்லையா, கால்வாய் வழியாக, அதிலே. இப்போது தான் பார்த்தார்களாம்...

ரத்தம் உறைந்தது ரேணுகாவின் முகத்தில். 'யாரோ எதுவோ பேசிக் கொணடு போகிறார்கள். நமக்கென்ன' என்றிருக்க அவளால் முடியவில்லை. உள்ளறிவொன்று கூறியது - உன் அக்காவைப் பற்றித்தான் ஊரெல்லாம் பேச்சென்று.

காருக்குத் திரும்ப ஓடினாள். ஊரின் மறுபுறத்திலிருந்த கால்வாய்க் கரைக்குப் பறந்தாள். பின்னாலேயே அம்புஜவல்லியின் காரும் துரத்தினாற்போல் வருவது கூடத் தெரியாது.

கால்வாய்க் கரையில் பல படகுகள் நின்றிருந்தன. பழையவை, சிறியவை, புதியவை, பெரியவை. விறகுக் கட்டும், கரிமூட்டையும் சுமந்து செல்பவை. ஒரு படகைச் சுற்றி ஏகப்பட்ட கூட்டம். அங்கிருந்து திரும்பு வோர்களின் பேச்சு அவள் செவியைப் பிளந்தது.

'பாவம்... கண்ணராவி... இளம் வயசு...'' பேயால் விரட்டப்பட்ட மாதிரி ஓடினாள் ரேணுகா. காற்றெனப் பறந்தாள் படகுக்கு. தாவி ஏறினாள் அதன் மீது. பரபரவென்று விலக்கினாள் கூட்டத்தை. எட்டிப் பார்த்தாள்.

''அக்கா!'' என்று வீரிட்டாள் மறு வினாடி.

படகின் தரையில் சுகுமாரி கிடந்தாள் - பிரேதமாக. பயங்கரமாக விழித்துக் கொண்டிருந்தன அவள் கண்கள். ஆடாமல் அசையாமல் கொட்டக் கொட்ட விழித்தன - எந்தப் பயங்கரத்தையோ நம்ப முடியாமல் பார்க்கிற மாதிரி. நன்றாய்ப் புலப்பட்டது: ரேணுகாவின் அருமை அக்காவை யாரோ கழுத்தை நெறித்துக் கொன்றிருக்கிறார்கள்.



மறுநிமிடம் எக்கச்சக்கமாய்க் கூட்டம் கூடி விட்டது ரேணுகாவைச் சுற்றி.

''அக்கா! அக்கா!'' என்று கதறினாள் அவள். காலின் கீழ் பூமி நழுவியதா? திடீரென்று அமாவாசை இருள் பரவியதா? தொய்ந்து விழவிருந்தவளைச் சரேலென அம்புஜவல்லி தாங்கிக் கொண்டாள். இப்போது அவளும் அவள் தோழிகளும் கூட்டத்தினரிடம் சிக்கிக் கொண் டார்கள்.

''இறந்து போனது யாரம்மா? இந்தப் பொண்ணு அவ்ங்க தங்கச்சியா? எந்த ஊர்?''- இதுபோன்ற விசாரணைகள் அவர்களைச் சூழ்ந்து கொண்டன.

அம்புஜவல்லி சுறுசுறுப்புக்குப் பெயர் பெற்றவள், பிறவித் தலைவி. நிலைமையை உணர்ந்து நடவடிக்கை மேற்கொண்டாள்.

''இந்தா, இவளுக்குக் கொஞ்சம் தண்ணீர் தெளித்து மயக்கம் தெளிவி,'' என்று ரேணுகாவைத் தோழி யொருத்தியிடம் ஒப்படைத்தாள்.

படகில் ஏறிவிட்டவர்களையும் ஏறமுயலுபவர் களையும் நோட்டம் விட்டாள். வெறும் அதட்டலுக்கு விலகுகிறவர்கள் அல்ல என்று தெரிந்தது.

''தயவு செய்து எல்லோரும் இங்கேயே இருங்கள். நடந்திருப்பது சாதாரண விஷயமல்ல. கொலை. போலீஸ்காரர்கள் வருவார்கள். உங்களுக்குத் தெரிந்ததைச்

சொல்ல வேண்டும். பிறகு சாட்சி பதிவு செய்து கொள்வார்கள். தட்டிக் கழிக்கக்கூடாது.'' என்றாள்.

அவ்வளவுதான். மந்திரக்கோல்கூட அந்த வேலையைச் செய்திருக்காது. ஒவ்வொருவராக நழுவலாயினர். படகுக் காரர்கள் இரண்டொருவர் மட்டுமே எஞ்சி நின்றார்கள். அவர்களில் ஒருவன், ''என்னம்மா கோணிமூட்டை யெல்லாம் கரையிலே இறக்கக்கூடாதா? யாரோ சொன்னாங்க கூடாதுன்னு,'' என்றான்.

''ஆமாம், போலீஸ் வருகிறவரையிலும் எதையும் தொடாதே. சரி, போலீசுக்குச் சொல்லியனுப்பினாயா இல்லையா?'' என்றாள் அம்புஜவல்லி. பாவம், படபட வென்று காரியம் செய்ததில் இரட்டை நாடிச் சரீரம் மூச்சு வாங்கியது.

''தனியா சொல்லியனுப்பணுமா, அம்மா? அதான் அரை அவரா இங்கேயே அமளிப்படுதே! யாராச்சும் போய்ச் சொல்லியிருப்பாங்க. ஹூம். எங்க பிழைப்புப் போச்சுது இன்னைக்கு,'' என்று பெரு மூச்சு விட்டான் ஒருவன்.

அம்புஜவல்லி, படகின் அடிப்புறத்தில் அலங் கோலமாய்க் கிடக்கும் சுகுமாரியின் பிரேதத்தைக் கண் ணெடுக்காமல் பார்த்தாள். துக்கம் அவள் தொண்டையை அடைத்தது. 'சுகுமாரி! நீ எவ்வளவு கலகலப்பான குறும்புக்காரி! உன்னோடு இருந்தால் நேரம் போவதே தெரியாதே! உனக்குக் கூடவா விரோதி ஒருவன் இருக்க முடியும்? உன் அழகிய மேனியைத் தொட்டுக் கொலை செய்ய எப்படித்தான் ஒருத்தனுக்கு மனம் வந்தது?' என்றெல்லாம் புலம்பினாள்.

ரேணுகா மயக்கம் நீங்கிக் கண் விழித்தாள். இன்ஸ்பெக்டர்களில் ஒருவர் படகுக்காரனொருவனை விசாரித்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

''இல்லீங்க... இங்கே வந்தப்புறந்தான் கவனிச் சோமுங்க...'' என்றான் படகுக்காரன்.

''ஏண்டா, ராத்திரி படகிலே சரக்குகள் ஏற்றுகிறபோது கண்ணா அவிந்து போய்விட்டது? பொய் கிய் சொன்னாயோ, லாக்அப்பிலே தள்ளி விடுவேன், ஜாக்கிரதை!'' என்று மிரட்டினார் இன்ஸ்பெக்டர்.

''ஐயையோ! சாமிசத்தியமாச் சொல்றேனுங்க.'' படகுக்காரனின் கால்கள் உதறலெடுத்தன. ''இந்தப் படகை நாங்க எடுக்கிறதேயில்லீங்க. ரொம்ப நாளாய்ப் பலகை வாராவதி ஓரமாயத் தள்ளி வச்சிருந்தோம். கூரை புதுசாப் போடணுமுங்க. அதுக்குத் துட்டு இல்லீங்க. வேறே படகை எடுத்து, கோணி மூட்டையெல்லாம் ஏத்திட்டுக் கிளம்பறப்போ சின்னையன் தகராறு பண்ணினான்.''

''யாரவன் சின்னையன்?''

''புரோக்கருங்க. படகுகளை வாடகைக்குப் பிடிச்சுத் தருவான். திடுப்புனு வாடகைப் பணம் ரெண்டு ரூவா அதிகமாய்த் தரணுமின்னு கெடுபிடி பண்ணினானுங்க. 'உன் படகை நீயே வைச்சுக்க. கூரை ஓட்டையாய் இருந்தாலும் பரவாயில்லே, எங்க படகையே எடுத்துப் போறோம்'னு சொல்லிட்டோம். அப்பாலேதான் அதிலே ஏத்தியிருந்த கோணி மூட்டைகளையெல்லாம் இந்தப் படகுக்கு மாத்தினோம்.''

''அப்போது இந்த அம்மாள் படகிலே கிடந்தார்களா? அது கூடவா கவனிக்கவில்லை நீங்கள்?''

''எந்தப் பாவியோ முன்னாலேயே கொணாந்து போட்டிருக்கானுங்க. அம்மாசி இருட்டிலே எதுவும் தெரியலீங்க. எங்க சரக்கு என்னாங்க, வெறுமே சுள்ளிக் கட்டும் கரி மூட்டையும் தானே? அந்தப் படகிலேருந்து எடுத்தாந்து இந்தப் படகிலே தொப்பு தொப்புன்னு போட்டுட்டோம்.''

''ராத்திரி பூரா படகிலேதான் இருந்தீர்களா? எங்கேயும் போகவில்லையா?''

''ஒரு இஞ்ச் கூட நகரலீங்க. உடனேதான் புறப்பட்டிட்டோமே? நான் கோல் போட்டு வளச்சேன். இவன் கரையோரமா, இடுப்பிலே கயித்தைக் கட்டிக்கிட்டு இழுத்துக்கிட்டே வந்தான். அப்பாலே நான் கரைக்குப் போனேன். இவன் கோல் போட்டான். இப்படி மாத்தி மாத்தி நாங்களேதான் இருந்தோம்.''

''இங்கே வந்த பிறகுதான் இதைப் பார்த்தீர்கள்?'' இன்ஸ்பெக்டர் சுகுமாரியின் உடலைக் காட்டினார். ''ஆமாங்க. கோணியை ஒவ்வொண்ணா இறக்கினப்போ, ஏதோ ஒரு பொம்பளையோட கைமாதிரி தெரிஞ்சுது. உடனே சத்தம் போட்டோம். மத்தவங்க ஓடிவந்தாங்க. எல்லாருமாய் மூட்டைங்களைத் தள்ளிட்டுப் பார்த்தோம்... ஊரிலே உலகத்திலே சாவறதுக்கு இடமா இல்லீங்க? இந்தப் பாழாப் போன பொம்பளைக்கு எங்க படகுதானா கிடைத்தது உயிரை விட?''

ரேணுகாவினால் அதற்குமேல் கேட்கப் பொறுக்க வில்லை. ''என் அக்காவைத் திட்டாதே... சுகுமாரி!

அக்கா!'' பிடித்திருந்தவர்களைத் திமிறிக்கொண்டு ''அக்கா! அக்கா!'' என்றலறியவாறு ஓடிவந்தாள் படகுக்கு.

ஒரு போலீஸ் அதிகாரி படகுக்குள் இறங்கியிருந்தார். சுகுமாரியின் உடலுக்கருகே குந்திக்கொண்டு அமர்ந் திருந்தார். சிறிய பாக்கெட் டைரியில் கிடுகிடுவென்று குறித்துக் கொண்டிருந்தார். மற்ற அதிகாரி அம்புஜவல்லியை விசாரித்தார்: ''இறந்தவர் உங்களுக்கு உறவா?'' என்று.

விம்மலும் கேவலுமாக நின்றிருந்த ரேணுகா, ''எனக்குத்தான் அக்கா... நேற்றிலிருந்து காணோம் என்பதால் தேடிக்கொண்டு வந்தேன்.'' என்றாள். மடை திறந்த வெள்ளமாகக் கண்ணீர் கொட்டியது. மேற்கொண்டு பேச முடியவில்லை.

அம்புஜவல்லி குறுக்கிட்டாள். ''நான் சொல்கிறேன் மற்ற விவரங்களை. இவள் பெயர் ரேணுகா. பள்ளிக்கூட ஆசிரியையாக இருக்கிறாள். இறந்தவள் பெயர் சுகுமாரி. ரிஸிப்ஷனிஸ்டாக இருக்கிறாள் - இருந்தாள் ஒரு கம்பெனியில். இவர்கள் அப்பா குழந்தைப்பாண்டியன் மதறாசில் பெரிய வியாபாரி. மூன்று நான்கு வருஷமாய்ப் பக்கவாதத்தில் படுத்த படுக்கையாய்க் கிடக்கிறார்.''

சவத்தைப் பார்த்துக் குறிப்பெடுத்துக் கொண்டிருந்த மற்ற அதிகாரி எழுந்து வந்தார். ''மர்டர் என்றுதான் தோன்று கிறது.'' என்றார். ரேணுகாவை நோக்கி, ''உங்களுக்கு யார் மீதாவது சந்தேகம் உண்டா?'' என்று கேட்டார்.

முதல் அதிகாரி அதற்குள், ''நீங்கள் விரும்பாவிடில் பதிலளிக்கத் தேவையில்லை. இப்போது நீங்கள் எது சொன்னாலும் உங்களுக்கே எதிராக அது பயன்படுத்தப் படலாம்,'' என்று எச்சரித்தார்.

''அக்காவை என்னுடன் வீட்டுக்கு அனுப்பி விடுங்கள். ஐயோ! எப்படி நான் அப்பாவிடம் இதையெல்லாம் சொல்வேன்?'' என்று கேவினாள் ரேணுகா.

''பிரேதத்தைச் சவப் பரிசோதனைக்கு அனுப்ப வேண்டும், அம்மா. பிறகுதான் உங்களிடம் ஒப்படைப் பார்கள்,'' என்று இரண்டாவது அதிகாரி நினைவூட்டினார்.

''நீங்கள் போங்கள். சென்னை போலீசாருக்கு நாங்கள் தகவல் தெரிவிக்கிறோம். உங்கள் வீட்டுக்கு வந்து மேல் விசாரணையை நடத்துவார்கள்,'' என்றார் முதல் அதிகாரி.

கடைசி முறையாகச் சுகுமாரியைப் பார்த்து விட்டு அம்புஜவல்லியைக் கட்டிக் கொண்டாள் ரேணுகா. ''நீங்களெல்லோரும் என் காரில் வாருங்கள். நான் ரேணுகாவை அழைத்துக் கொண்டு முன்னே போகிறேன்,'' என்று அம்புஜவல்லி தன் தோழிகளிடம் தெரிவித்தாள்.

வீட்டுக்குள்ளே, கட்டிலில் கிடந்ததும் ஒரு பிரேதம்தான். அதற்கென்ன, மூச்சு வந்து கொண்டிருந்தது, கண்கள் அடிக்கடி இமைத்தன, உடம்பு சில்லிடவில்லை - அதனால் உயிரோடு இருப்பதாகச் சொல்லிவிட முடியுமா? குழந்தைப்பாண்டியன் கிட்டத்தட்ட சவமாகிவிட்டார். வாதநோயினால் அசையாமல் கிடந்தவர், மனத்தாலும் மரத்துப் போய்விட்டார். பார்வை வெறிச்சோடியிருந்தது. உதடுகள் உலர்ந்திருந்தன. ''அப்பா! அப்பா! சுகுமாரி மோசம் பண்ணிவிட்டாள், அப்பா! நம் எல்லோர் தலையிலும் கல்லைப் போட்டுவிட்டாள் அப்பா!''

- இப்படி அலறிக்கொண்டுதான் பங்களாவுக்குள் நுழைந்தாள் ரேணுகா. மகாபலிபுரத்திலிருந்து காரை ஓட்டி வந்த அம்புஜவல்லி, ''இரு, ரேணு. நானும் வருகிறேன்,'' என்று தடுத்ததுகூட அவள் காதில் விழுவில்லை.

சமையற்காரப் பாட்டி ஹோவென்று கதறிக் கொண்டே ஓடிவந்தாள். ரேணுகாவைக் கட்டிக்கொண்டாள். குழந்தைப் பாண்டியனின் அறைக்கு அழைத்துச் சென்றாள். நர்ஸும் வேலைக்காரனும் வாயில் துணியைப் புதைத்துக் கொண்டு மூலையில் நின்றிருந்தார்கள். அவர்கள் சென்னை வரு முன்பே போலீஸ் மூலமாய்ச் செய்தி வந்துவிட்டது. செய்தி கேட்டதும் குழந்தைப் பாண்டியன் என்ன துடித்தாரோ! எப்படிக் கதறினாரோ! இப்போது ரேணுகா வந்த சமயம் அவரிடம் எவ்வித அசைவும் இல்லை. நேர்மேலே விட்டத்தில் ஒன்றியிருந்தது அவர் பார்வை. கட்டிலின் கீழே அலங்கோலமாய் விழுந்தாள் ரேணுகா. படுக்கையின் சட்டத்தைப் பிடித்துக் கொண்டாள். ''அக்கா! அக்கா!'' என்று கதறினாள்.

''அழாதே.'' குழந்தைப் பாண்டியனின் உதடுகள் மெல்ல அசைந்தன.

''அப்பா! எப்படியப்பா அழாமலிருப்பது?'' தந்தையின் முகத்தைப் பார்த்தாள். திடுக்கிட்டாள். அதிலே சோகத்தின் அறிகுறிகள் மறைந்து விட்டன. வெண் கலத்தில் செய்தமாதிரி அவர் முகம் இறுகியிருந்தது.

''சுகுமாரி என் செல்ல மகள். எறும்புக்கும் தீங்கு நினைக்காதவள். அவளைப் படுகொலை செய்தவன் எவனாயிருந்தாலும் இந்தக் குழந்தைப்பாண்டியன் விட மாட்டான், ரேணு. இதை நம்பு.'' அவர் கண்கள்

பளபளத்தன நெருப்பில் காட்டிய பட்டாக் கத்திபோல. "என்னைக் கையாலாகாதவன், முடக்குவாதக்காரன் என்று எண்ணியிருக்கிறான் அவன். ஆனால் இந்த முடக்கு வாதக்காரன் செய்யக்கூடியதை ஆயிரம் கை படைத்த வனால்கூடச் செய்ய முடியாது. சீக்கிரத்தில் நிருபித்துக் காட்டுகிறேன், பார். என் குழந்தை, ஆயிரம் காலம் வாழ வேண்டிய இளம் குருத்து அதைக் கதறக் கதற நெருப்பிலே போட்ட பாவியை லேசிலே விடமாட்டேன் ரேணு, லேசிலே விடமாட்டேன்."

அங்குலம்கூட அப்புறம் இப்புறம் நகர முடியாத ஒருவர், ஆடாமல் அசங்காமல் இப்படி உறுமினால்...!

"அப்பா! வேண்டாமப்பா! அப்படியெல்லாம் பேசாதீர்கள்! எனக்குப் பயமாயிருக்கிறது." குழந்தைப் பாண்டியனின் கழுத்தைக் கட்டிக்கொண்டு விம்மினாள் ரேணுகா? அறை வாசலில் நிழலர்டியது. "நஞ்சுண்டனா! வா, நல்ல சமயத்துக்கு வந்தாய்," என்று வரவேற்றார் குழந்தைப் பாண்டியன்.

"நஞ்சுண்டன்! நீங்கள்... நீங்கள் இருந்தும்..." பாய்ந்தெழுந்து அவனிடம் தாவினாள் ரேணுகா.

"ஸ்." கண்களை ஓர் உருட்டு உருட்டினான் நஞ்சுண்டன். கடகடவென்று அவள் சொல்லவிருந்ததை அவன் விழிகள் தடுத்து நிறுத்தின.

"என்னால் நம்ப முடியவில்லை. டெலிபோனில் யாரோ விளையாட்டுப் பண்ணுகிறார்கள். என்று தோனறிற்று. நேரில் அங்கேதான் போய் விசாரித்தேன்," என்றான் நஞ்சுண்டன்.

''நான்தான் கண்ணாலேயே பார்த்தேனே அக்காவை.'' முகத்தை மூடிக் கொண்டு தேம்பினாள் ரேணுகா.

குழந்தைப் பாண்டியனின் குரல் இரக்க மற்று ஒலித்தது: ''என்ன சொன்னார்கள், நஞ்சுண்டன்? பாடிய எப்போது கொடுப்பார்களாம்?''

''நாளைக்குத்தான்.''

''இப்படி வா. என் அருகில் உட்கார்.'' குழந்தைப் பாண்டியன் அழைத்தார்.

''என்ன சார்?''

''கவனமாகக் கேள். எதற்காக நீ பம்பாயிலிருந்து வந்தாயோ அதை இன்றோடு மறந்து விடு.''

''மறந்து விட்டு?''

''ஆயிரம் வேலை உனக்கு நான் பண்ணி வைக்கிறேன். அது பெரிதில்லை. என் பெண்ணைத் துடிக்கத் துடிக்கக் கொன்றானே அவனை நீ கண்டுபிடி. இந்த நிமிடம் முதல் பணம், கார் பங்களா, ஆட்கள் - எதுவானாலும் உன் வசதிக்குப் போக மிஞ்சினால்தான் மற்றவர்களுக்கு, அல்லும் பகலும் அனவரதமும் நீ இது ஒன்றே குறியாக...''

''அப்பா! அதற்காகத்தான் அவர்...'' என்று ரேணுகா மறுபடியும் குறுக்கிட முயன்றாள். நஞ்சுண்டன் மறுபடி அவளைத் தடுத்துவிட்டான் சைகையால்.

''போலீசில் தீவிரமாய் இருக்கிறார்கள் சார்,'' என்றான் நஞ்சுண்டன.

''அவர்கள் கிடக்கிறார்கள். வடிவத்தை விட்டுவிட்டு நிழலைத் துரத்துகிற புத்திசாலிகள். நீ உன் பாட்டுக்கு வேலை செய். என்னுடைய கை நீ. கால் நீ. கண் நீ. செவி நீ. மூளையும் இருதயமும் மட்டும் தான் என்னுடையவை. எப்படியாவது இந்தக் கொலைகாரன் யார் என்று நீ கண்டு பிடிக்க வேண்டும். அதுவரையில் நீ உத்தியோகம் தேடுவதற்காக வந்தவன் என்பதையே மறந்துவிடு.''

குழந்தைப் பாண்டியனுக்கு மூச்சு இரைத்தது. இவ்வளவு நீளமாயும் வேகமாயும் பேசியதில். நர்ஸ் அம்மணி நெருங்கி வந்தாள். அவர் முகத்தில் வியர்வையை ஒற்றியெடுத்தாள். ஒரு கிளாஸ் தண்ணீர் கொடுத்து அருந்தச் செய்தாள்.

''அமைதியாயிருங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன்.'' அவர் கைகளைத் தட்டிக் கொடுத்துவிட்டு வெளியே வந்தான் நஞ்சுண்டன. பின்னாலேயே வேகமாய் வந்தாள் ரேணுகா. ஒருமுறை திரும்பிப் பார்த்துக் கொண்டாள். தாழ்ந்த, பதைபதைப்பான குரலில், ''பார்த்தீர்களா? அப்பாகூட உங்களைத் தான் நம்புகிறார்,'' என்றாள்.

''சே! சே!'' தலையைப் பலமாக அசைத்து, உள்ளங்கையில் குத்திக்கொண்டான் நஞ்சுண்டன். அவன் பேச்சில் வெறுப்புக் கொப்பளித்தது. ''என்ன முட்டாள் நான்! ஒரே நிமிஷம்தான் - கண்ணயர்ந்துவிட்டேன். எத்தனை பெரிய விபரீதம் நிகழ இடம் தந்துவிட்டேன்! ரேணுகா, உன் முகத்தில் விழிக்கவே வெட்கமாயிருக்கிறது. நான் போகிறேன் - தோல்வியை ஒப்புக்கொண்டு. நீ அசல் போலீசை அமர்த்திக்கொண்டு இனிமேலாவது ஜாக்கிரதையாக இரு.''

''நஞ்சுண்டன்!'' ரேணுகா தன்னையும் அறியாமல் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டாள். ''நீங்கள் ஓரடியும் எடுத்து வைக்கக்கூடாது. என் விருப்பம் மட்டு மல்ல. அப்பாவின் கட்டளையும் கலந்திருக்கிறது.''

உதட்டைக் கடித்துக்கொண்டு குறுக்கும் நெடுக்கும் உலவினான் நஞ்சுண்டன். பிறகு நின்றான். ''அப்படி யானால் சரி. ஆனால் ஒரு நிபந்தனை.''

''எதுவானாலும் கட்டுப்படுகிறேன்.''

''உன் காதலன் பாலச்சந்தரின்மீது மட்டுமல்ல - எனக்கு யார்மீதெல்லாம் தோன்றுகிறதோ அவர்களை யெல்லாம் சந்தேகப்படுவேன்.''

''தாராளமாய்..''

''உன் அப்பாவேகூட என் சந்தேகத்துக்கு ஆளாகக் கூடும்.''

ரேணுகா திடுக்கிட்டாள். ''அப்படியா?''

''ஏன் இருக்கக்கூடாது? சுகுமாரியின் மர்மமான நடவடிக்கைகள் அவர் காதுக்கு எட்டியிருக்கலாம். சைனாக்காரனின் நட்பைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பார். அது தன் குடும்பத்துக்கே பெரிதும் அவமானமென்று எண்ணியிருக்கலாம். உனக்குத் தெரியாமல் சுகுமாரியைக் கண்டித்தும் அவள் கேட்கவில்லையோ என்னவோ, ஆகவே ஆள் வைத்து அவளைக் கொலை செய்துவிட்டு நம் முன்னே நடிக்கிறார்...''

''சே, சே! என்ன பயங்கரக் கற்பனை உங்களுக்கு!''

''அதேபோல், உன்னையும் தான் நான் சந்தேகப்பட வேண்டியிருக்கிறது.''

''என்ன! என்ன! என்னையா?''

''அதிலென்ன தவறு? உன்னைப்பற்றி எனக்குத் தெரிந்ததெல்லாம் நீயாகச் சொன்னதுதானே? அதைத் தவிர எனக்கு என்ன தெரியும் உன்னைப்பற்றி? என் போல் ஒரு டிடெக்டிவை வரவழைத்து வைத்துக்கொண்டதே ஒரு சாமர்த்தியமாக இருக்கலாம் குற்றச்சாட்டு உன் மீது திரும்பாதிருப்பதற்கு இது ஒரு பாதுகாப்போ என்னவோ, யார் கண்டது?''

''போதும், நிறுத்துங்கள். அக்காவை நான் கொலை செய்யக் காரணம்?''

''நிறைய இருக்கிறதே! உன் காதலனின் மருத்துவ மனையில் அவள் தங்கியிருந்தாள். பாலச்சந்தருக்கும் அவளுக்கும் என்னென்ன விதமான உறவுகள் ஏற்பட்டதோ, உனக்குத்தானே தெரியும்?''

''கேட்கவே நாராசமாயிருக்கிறது.'' காதைப் பொத்திக் கொண்டாள் ரேணுகா.

''உன்னை வருத்தப்படுத்துவதற்காகச் சொல்ல வில்லை. பிரத்தியட்சமாய்ப் பார்ப்பவர்கள் எப்படி யெல்லாம் நினைக்கக்கூடும் என்பதை உனக்கு விளக்கு வதற்காகச் சொன்னேன். சுகுமாரி, உன் காதலனைப் பற்றி அவதூறாப் பல சமயங்களில் பேசியிருக்கிறாள். அதுவும் உனக்கு ஆத்திரமாய் இருந்திருக்கும்... அப்புறம்...''
''அப்புறம்?'' ரேணுகாவின் முகம் வெளுத்திருந்தது.

''சுகுமாரி கொலை செய்யப்பட்ட நேரத்தில் நீ எங்கே இருந்தாய்?''

''ஏன்? இங்கே வீட்டில்தான் இருந்தேன்...''

''என்று நீ சொல்கிறாய். அதை உண்மை என்று நான் எப்படி நம்புவது? இங்கே இருக்கவில்லையே நான்?''

ரேணுகாவுக்கு உடம்பெல்லாம் சில்லிட்டமாதிரி ஆகிவிட்டது. வெறும் கற்பனையான குற்றச்சாட்டுத்தான். அது தெரிந்தபோதிலும், அதிலுள்ள கடுமை சுரீலென உறைத்தது.

''எதற்காக இவ்வளவும் சொன்னேன்?'' நஞ்சுண்டனிடம் ஒரு திடீர்ப் புன்னகை. ''எல்லாம் என் பாதுகாப்புக்காகத் தான்.''

''உங்கள் பாதுகாப்பா?''

''ஆமாம். ஒவ்வொருவரை ஒவ்வொருவிதத்தில் சந்தேகிக்க வேண்டியவனாக நான் இருக்கிறேன். ஆகவே, என்னைப் பற்றிய உண்மையை எவரிடமும் சொல்லாதே.''

''போலீசில் நீங்கள்தான் ரமணன் என்று...''

''இல்லை. என்னை ரொம்பப் பேருக்குத் தெரியாது. நீயாக யாரிடமும் குறிப்பாகக்கூடச் சொல்லாதே. உன் சினேகிதியின் அண்ணன் - வேலை தேடி வந்திருப்பவன் - இதையே திரும்பத் திரும்பச் சொல்லு. அதுதான் எனக்கு உதவி - உண்மையைக் கண்டுபிடிக்க.''

''சரி.'' ரேணுகா தலையசைத்தாள். உண்மையைக் கண்டுபிடிக்க! உண்மையைக் கண்டுபிடிக்க! அந்த

வாக்கியத்தை நினைக்க நினைக்க அவளுக்குத் தலை சுற்றிற்று. சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டாள்.

''நஞ்சுண்டன், உங்கள் முதல் சந்தேகம்...''

நஞ்சுண்டனின் உதட்டில் ஒரு விகாரப் புன்னகை நெளிந்தது. ''உன் முதல் சந்தேகம் எதுவோ அதுதான்.''

ரேணுகா கையைப் பிசைந்தாள். ''இருக்காது... அவர்... பாலச்சந்தர் இதை ஒரு நாளும் செய்திருக்க மாட்டார்...''

''அதை நீ சொல்லக்கூடாது. நான் சொல்ல வேண்டும்.'' சிகரெட்டொன்றை எடுத்தான் அவன். நெருப்புப் பெட்டியின் மீது டப் டப்பென்று தட்டினான். வாயில் பொருத்திக் கொண்டான்.

பீதி ரேணுகாவின் விழிகளைப் பீடித்துக் கொண்டது. ''அக்கா கொலையுண்டதற்குக் காரணம் வேறு ஏதாவது இருக்கலாம்...''

''உதாரணமாக?''

''வைர முருகன்... அதை அவள் எடுத்துப் போனாளோ என்னவோ...''

நஞ்சுண்டன் சிரித்தான். ''பெட்டகத்திலே அது பத்திரமாய்த் தூங்குகிறது. நிச்சயமாய்ச் சொல்வேன்.''

''பார்த்து விடலாமா?''

''சந்தோஷமாய்.''

பெட்டக அறையின் வாசல்வரை இருவரும் சேர்ந்து சென்றார்கள். ''சாவி எடுத்து வருகிறேன்'' என்று ரேணுகா மட்டும் பிரிந்து போனாள்.

அலட்சியமாகப் பூட்டை நோக்கினான். உடம்பு ஒருமுறை விதிர்த்தது.

அடையாளமாகப் பூட்டின் மீது அவன் போட்டிருந்த நூலைக் காணோம். விழிகளைச் சுழற்றினான்.

'மியாவ்.'

ஒரு கரும்பூனை அவனைத் தாண்டிக் கொண்டு ஓடிற்று. அதன் வேலையாக இருக்குமோ? பூட்டின்மீது தாவி, நூலைத் தள்ளியிருக்குமோ?

ரேணுகா திரும்பி வந்தபோது காணப்பட்ட நஞ்சுண்டன், அவள் பிரிந்தபோது இருந்த நஞ்சுண்டன் அல்ல. இவனிடம் அமைதி விடைபெற்றிருந்தது.

"திறவேன்," என்று அவசரப்படுத்தினான் ரேணுகாவை.

அவள் அறைக் கதவைத் திறந்தாள். பெட்டகத் தையும் திறந்தாள். மேல் பலகையில், வைர முருகனின் பெட்டி இருந்தது.

"பார்த்தாயா?" என்றரன் நஞ்சுண்டன். திருப்திப் புன்னகை அவன் இதழில் ஜனித்தது. "இது திருட்டுப் போகாது என்றுதான் சொன்னேனே?"

ரேணுகா எதுவும் கூறவில்லை. பெட்டியைக் கையிலெடுத்தாள். திறந்தாள்.

"என்ன!" கூவினான் நஞ்சுண்டன். ஏனெனில் பெட்டிக்குள்ளே வைர முருகன் இருக்கவில்லை. காலியாக இருந்தது.




''வைர முருகனைக் காணோமா? நன்றாகத் தேடிப் பார். பெட்டியில் இல்லாவிட்டாலும், தனியாய் வேறெங்கானும் இருக்கும். பார், பார்!'' என்றான் நஞ்சுண்டன்.

வைர முருகனைக் காணவில்லை என்று தெரிந்ததும் அவனுக்கு எவ்வளவு பரபரப்பு! ரேணுகாவுக்கே ஆச்சரியமாயிருந்தது. அதிகமாய்ப் பேசாதவன், நிதானம் தவறாதவன், உணர்ச்சிகளைக் காட்டாதவன் - அவனுக்குக் கூட ஏன் இப்படியொரு பதற்றம்? சற்று முன்னால்கூட அமைதியாகப் பேசினானே?

அவளுக்குத் தெரியாது - சற்று முன்னால் வரை தெரிந்ததெல்லாம் நடிப்பு, இப்போது வெளிப்படுவது அசல் என்று.

ரேணுகா பல நகைப் பெட்டிகளை நகர்த்தினாள். சிறு அறைகளைத் திறந்து மூடினாள். பரிசோதித்தாள். ஊகூம். வேறு என்னென்னவோ டாலடித்தன; எதெதுவோ கண்ணைப் பறித்தன.

உள்ளங்கை அகலமுள்ள அந்த வைர முருகன் மட்டும் எங்கேயும் இருக்கவில்லை. ரேணுகாவின் மனத்தில் ஏதோவொரு மகிழ்ச்சி. லட்சக்கணக்கான பெறுமானமுள்ள பதுமையைக் காணவில்லை. ஆனால் அந்தக் கவலைகூட இந்த மகிழ்ச்சியில் சற்று மறைந்தது போலும்.

''என்ன சிரிக்கிறாய்?'' என்று அதட்டினான் நஞ்சுண்டன்.

''சிரிப்பா?''

''புன்சரிப்பு. எதை நினைத்து?''

அதற்குமேல் ரேணுகா மறைக்கவில்லை.

''பாலசந்தர் மீது இனி சந்தேகப்பட வேண்டாம். இல்லையா?''

''ஏன்?''

''இது களவுக்காக நடந்து கொலை என்று நிரூபணமாகி விட்டதே! அக்கா எதற்காகவோ வைர முருகனைத் தன்னுடன் எடுத்துக்கொண்டு சென்றிருக்கிறாள். அதை எடுத்துவரும்படி கொலைகாரனேகூடச் சொல்லி யிருக்கலாம். அக்காவைக் கொலை செய்துவிட்டு வைர முருகனைக் களவாடிக்கொண்டு சென்றிருக்கிறான் அவன்!''

''சரி. அதனால்?''

''பாலசந்தருக்கு ஆத்திரமும் கோபமும் உண்டே தவிர, திருட்டு அவர் நோக்கமல்லவே? ஆகவே அவர்மீது ஏற்பட்ட சந்தேகம் குறைந்துவிட்டது.''

''அது உன்னைப் பொறுத்தவரையில்,'' என்றான் நஞ்சுண்டன் அழுத்தமாக. ''என் சந்தேகப் பட்டியலிருந்து அவனை இன்னும் நான் நீக்கவில்லை.''

''ஏன்?''

''ஒருவேளை உன் அக்காவைக் கொலை செய்தான பிறகு, அவள் வைர முருகன் வைத்திருப்பதை பாலசந்தர் பார்த்திருக்கக் கூடும். கிடைத்ததை விடுவானேன் என்று எடுத்துச் சென்றிருக்கலாமில்லையா?''

''உணர்ச்சி வசப்படுகிறவரேயொழிய பாலசந்தர் திருடனாகிவிட மாட்டார்.''

''கொலை பரவாயில்லை, திருட்டுத்தான் மட்டம் என்று நீ நினைக்கிறாயா?''

இதற்குப் பதில் சொல்லத் தெரியவில்லை ரேணுகாவுக்கு. ஆனால் அவள் உள்மனத்தின் ஆறுதல் ஓங்கித்தானிருந்தது. 'என் காதலன் கொலைகாரனல்ல! அவராயிருக்க முடியாது!' என்று குதூகலிக்கவே செய்தது.

பெட்டகத்தின் கதவுகளை மூடினான் நஞ்சுண்டன். அந்த ஓசை ரேணுகாவை விழிப்புக் கொள்ளச் செய்தது. ''அப்பாவிடம் எப்படிச் சொல்வேன்? மத்தியஸ்தமாக வைத்துக்கொள்ளும்படி மூன்றாம் மனிதர் கொண்டு வந்து தந்த விலையுயர்ந்த பொருளாயிற்றே அந்த வைர முருகன்! மகள் போன துயரத்தைக் காட்டிலும், பொறுப்புக்குத் துரோகம் செய்ததையல்லவா அதிகமாய் எண்ணித் துடித்துப் போவார்?''

''வேண்டாம். சொல்லாதே.''

''என்ன?''

''வைர முருகன் காணாமற்போனதை அப்பாவிடம் இப்போது சொல்ல வேண்டாம். ஒரே சமயத்தில் ஏகப்பட்ட அதிர்ச்சிகள் ஏற்பட்டால் அவருக்குத் தாங்காது.''

ரேணுகா திகைத்தாள்: ''சொல்லாமல்?''

''நான் ஒருவன் இருப்பதை மறந்துவிட்டாயா? போலீசை முந்திக்கொண்டு கண்டுபிடிக்கிறேனா இல்லையா, பார். ஓசைப்படாமல் திரும்ப வைத்து விடுவோம். பிறகு சொல்லலாம்.''

''போலீஸ் வந்து விசாரிக்கிறபோது...''

''வைர முருகன் என்று ஒன்று இங்கே இருப்பதே அவர்களுக்குத் தெரியாது. ஆகவே அது காணாமற் போயிற்றா, பத்திரமாயிருக்கிறதா என்று போலீசார் கேட்கப் போவதில்லை. தானாகவே உன் அப்பா அதைப் பற்றிப் பேச்செடுக்கிறாரா பார்ப்போமே?''

குழம்பியவளாக நின்றாள் ரேணுகா. நஞ்சுண்டன் வெளியேறினான். திடீரென்று அவனுடைய உரத்த குரல் கேட்டது.

''உளவு வேலைக்குத்தான் இந்த வெள்ளை யூனிபாரமா?''

சட்டென வெளியே வந்தாள் ரேணுகா. அவள் கண்ட காட்சி!

நர்ஸ் அம்மணி நஞ்சுண்டனின் பிடியில் சிக்கித் திமிறிக் கொண்டிருந்தாள்.

''என்ன இது? என்ன இது? விடுங்கள்!'' விடுவித்தாள் நர்ஸை.

நஞ்சுண்டன் பல்லைக் கடித்தான்.

''கதவு மறைவில் நின்றுகொண்டு நாம் பேசுவதையெல்லாம் இவள் கேட்டுக் கொண்டிருக்கிறாள்! இதற்குத் தான் இவளுக்குச் சம்பளமா ரேணுகா?''

''இல்லேம்மா. அப்பா உங்களை அழைத்துக் கொண்டு வரச் சொன்னார். அதற்காக வந்தேன். உள்ளே நீங்கள் வந்து பேசிக் கொண்டிருந்தீர்கள் அதனால் கொஞ்சம் தயங்கி நின்றேன். அதை இவர்...''

''சரி, நீ போ'' என்று அவளை அனுப்பினாள் ரேணுகா. ''நீங்கள் ரொம்ப மோசம். இநத் நர்ஸ் ரொம்ப நாளாய் எங்கள் குடும்பத்துக்குப் பழக்கம். நம்பிக்கை...''

இடைமறித்தான் நஞ்சுண்டன்: ''சந்தேகப்படுகிற இலாகாவை மட்டும் என்னிடமே விட்டுவிடு, ரேணுகா.''

இருவரும் குழந்தைப் பாண்டியனின் அறைக்குள் நுழைந்தபோது-

கட்டிலினருகே அமர்ந்திருந்தார் ஒரு போலீஸ் அதிகாரி. மெல்லிய பிரம்பொன்றைத் தொடைமீது உருட்டிக் கொண்டிருந்த அவர் கை.

''இவள்தான் உங்கள் இளைய மகளா?'' ரேணுகாவைச் சுட்டிக் காட்டி வினவினார் இன்ஸ்பெக்டர். ''அவர்?''

குழந்தைப்பாண்டியன் கண்ணை இமைக்கக்கூட இல்லை. ''நஞ்சுண்டன். என் உறவுப் பையன். பம்பாயிலிருந்து வந்திருக்கிறான்.''

''நாளைக் காலையில் பிரேதத்தை ஒப்படைப் பார்கள்...ம்... நீங்கள்தான் மற்றக் காரியங்களையெல்லாம் கவனிக்க வேண்டியிருக்கும்,'' என்றார் இன்ஸ்பெக்டர், நஞ்சுண்டனிடம்.

''பார்த்துக் கொள்கிறேன்'' என்று சொல்லி விட்டு வெளியேற முயன்றான் நஞ்சுண்டன்.

''ஒரு நிமிடம்'' என்றார் இன்ஸ்பெக்டர்.'' நீங்களும் கொஞ்சம் இருங்கள் மிஸ் ரேணுகா...''

காற்சட்டைப் பையிலிருந்து அவர் வெளியிலெடுத்த பொருள்: ஒரு பாக்கெட் டைரி.

செக்கச் சிவந்த நிறத்தில் இருந்தது அது. இன்ஸ் பெக்டர் அதைக் குழந்தைப் பாண்டியனின் கண்ணெதிரே பிரித்தார்.

''இதைப் பாருங்கள்.''

குழந்தைப் பாண்டியன் மட்டுமல்ல; ரேணுகாவும் நஞ்சுண்டனும் கூடக் குனிந்து நோக்கினார்கள். அந்த டைரியில் அச்சடித்திருந்தவை - சீன எழுத்துக்கள்! வருடம் மாதம் தேதி மட்டுமே ஆங்கிலத்தில் இருந்தன. மற்ற வாக்கியங்கள் சீன மொழியில்!

''சுகுமாரியின் ஜாக்கெட்டுக்குள் இருந்தது இது'' ஒவ்வொருவர் முகமாக ஆராய்ந்தார் இன்ஸ்பெக்டர். ''இது எப்படி, ஏன், இறந்துபோன சுகுமாரியிடம் இருக்க வேண்டும்? உங்களால் ஏதும் ஊகிக்க முடிகிறதா?''

சீன - என்றவுடனே நஞ்சுண்டனும் ரேணுகாவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். குழந்தைப் பாண்டியன் மட்டும் வெறிச்சிட்ட பார்வையுடன் மறு மொழி தந்தார்: ''ஒன்றும் புரியவில்லையே இன்ஸ் பெக்டர்?''

''இதில் ஒரு நம்பர் குறித்திருக்கிறது - அதைப் பற்றியாவது ஏதாவது கூற முடியுமா பாருங்கள்.''

இன்ஸ்பெக்டர் பக்கங்களைப் புரட்சினார். புத்தம் புதியதான அந்த நாட்குறிப்பில் எல்லாப் பக்கங்களும் காலியாகவே இருந்தன. ஆனால் கடைசிப் பக்கத்தில் - முகவரிகள், டெலிபோன் எண்கள் முதலியன குறிப்பதற் காக விடப்பட்டிருந்த வெள்ளைத் தாளில் -

'28-172' என்று குறிக்கப்பட்டிருந்தது.

வெளிச்சமில்லாத இடத்தில் அவசரமாக, எழுதப்பட்டிருந்தது போலும். கொட்டை கொட்டையாக. கோணலாகத் தெரிந்தன.

''இது உங்கள் பெண்ணின் எழுத்துத் தானே?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''அப்படித்தான் தோன்றுகிறது'' என்றார் குழந்தைப் பாண்டியன்.

''இந்த எண் உங்கள் மனத்தில் எதையாவது நினைவூட்டுகிறதா? வீட்டு எண், பாங்க் புத்தகம், டெலிபோன் - இப்படி எதையாவது?''

கண்ணை மூடிக்கொண்டார் குழந்தைப்பாண்டியன். யோசித்தார். உதட்டைப் பிதுக்கினார், 'ஊஹூம்' என்று.

''நீங்கள்?'' அடுத்து நஞ்சுண்டனையும் ரேணுகாவையும் கேட்டார். தலையசைத்தார்கள் இருவரும். டைரியைப் பையில் பத்திரப்படுத்திக்கொண்டார் இன்ஸ்பெக்டர். ''இன்னும் சில கேள்விகள் கேட்டு உங்களைத் தொல்லைப் படுத்த வேண்டியிருக்கிறது.''

''உங்கள் கடமையல்லவா அது? சொல்லுங்கள்.''

''பலகை வாராவதியருகே நீங்கள் ஒரு வீடு கட்டிக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா?''

''ஆமாம். பாதி வேலை நடந்து கொண்டிருக்கிறது. நடுவே கொஞ்சநாள் நிறுத்தியிருந்தோம் - மேஸ்திரிக்கும் ஆட்களுக்கும் கூலி விஷயத்தில் தகராறு ஏற்பட்டதால். பிறகு தொடர்ந்து நடக்கிறது.''

"அங்கே காவலுக்கு யாரையாவது போட்டியிருக் கிறீர்களா?"

ரேணுகா குறுக்கிட்டுப் பதில் சொன்னாள்: "ஆள் போட வேண்டுமென்று மேஸ்திரி கேட்டார். சரியென்று சொன்னேன். இன்று முதல் காவல் போடப் போகிறாராம். மேஸ்திரி சொன்னார்."

"ஏன் இதைக் கேட்கிறீர்கள்?" என்றார் குழந்தைப் பாண்டியன்.

இன்ஸ்பெக்டர் புன்னகை செய்தார். "நான் விசாரணை நடத்தத்தான் வந்தேன். தகவல் கொடுப்பதற் காக அல்ல. இருந்தாலும், நீங்கள் இறந்தவரின் குடும்பத்தார்கள். ஆகவே சொல்கிறேன்."

மூவரும் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இன்ஸ்பெக்டர் கூறினார்: "நீங்கள் கட்டுகிற வீடு, பக்கிங்ஹாம் கால்வாய்க்கருகே இருக்கிறது. அந்த வீட்டுக் குள்ளேயோ, அல்லது அதற்குச் சமீபத்திலோதான் உங்கள் மகள் கொலை செய்யப்பட்டிருக்கிறாள். கரையோர மாகக் கிடந்த ஒரு படகில் அவளைத் தள்ளிவிட்டு, குப்பை கூளத்தால் மூடிவிட்டு ஓடிவிட்டான் கொலைகாரன். அந்தப் படகை இப்போதைக்கு யாரும் எடுக்க மாட்டார்கள் என்பது அவன் எண்ணம். ஆனால் துரதிருஷ்டவசமாக, படகுக் காரன் அதை எடுத்துப் போகும்படி நேரிட்டு விட்டது. அதனால் கொலைகாரன் எதிர்பார்த்ததற்கும் முன்ன தாகவே மிஸ் சுகுமாரியின் உடல் கண்டெடுக்கப்பட்டு விட்டது."

குந்தைப் பாண்டியன் நெடுமூச்செறிந்தார். ரேணுகா கண்களைத் துடைத்துக் கொண்டாள். நஞ்சுண்டன் அசையாதிருந்தான்.

''உங்கள் மகளை அந்தப் பலகைவாரவதி வீட்டுக்கு எதற்காகவாவது போகச் சொல்லியிருந்தீர்களா?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''இல்லை. ஆனால் அவளாகவே மேற்பார்வை செய்ய அடிக்கடி அங்கே போவதுண்டு.''

''நல்லது.'' இன்ஸ்பெக்டர் எழுந்து கொண்டார். அறை வாசல்வரை சென்றவர் நின்றார்.

''இந்தக் கொலை சம்பந்தமாக உங்களுக்கு ஏதாவது சந்தேகங்கள் உண்டா, மிஸ்டர் குழந்தைப் பாண்டியன்?'' என்று கேட்டார்.

''அதாவது?''

''மிஸ் சுகுமாரி அதிக நகைகள் அணிந்து கொண்டிருக்கவில்லை. ஒன்றிரண்டுதான் இருந்தன. கொலை செய்தவன் அவைகளை எடுக்கவில்லை. ஆனால் வீட்டிலிருந்து புறப்படும்போது மிஸ் சுகுமாரி கையில் ஏதாவது எடுத்துச் சென்றிருக்கலாம் அல்லவா?''

''அப்படித் தெரியவில்லையே?'' என்றார் குழந்தைப் பாண்டியன். நஞ்சுண்டனின் பார்வை ரேணுகாவின் பார்வையைச் சந்தித்தது.

''வீட்டிலிருக்கும் விலையுயர்ந்த பொருள்களைச் 'செக்' பண்ணி விட்டீர்களா? எதுவும் காணாமற் போக வில்லையே?''

''இல்லை'' என்றார் குழந்தைப் பாண்டியன்.

சரேலென ரேணுகா நஞ்சுண்டனைப் பார்த்தாள். அதன் பொருள்: 'இப்போதாவது சொல்லிவிடலாமா...?''

நஞ்சுண்டனும் கண்ணாலேயே விடை கொடுத்தான்· 'வேண்டாம்.''

போலீஸ் அதிகாரி போய்விட்டார். குழந்தைப் பாண்டியன் தனக்குத்தானே பேசிக் கொள்கிறாரா என்ன? பலவீனமான குரல் வெளிப்பட்டது அவரிடமிருந்து: ''அதிகம் நகை போடமாட்டாள் என் கண்மணி... ஆமாம்... அவளுக்கு அதெல்லாம் பிடிக்காது...''

கண்ணிலிருந்து குபுக்கெனப் பொங்கி வந்தது நீர். அதைத் துடைக்கும் சக்தி ஏது அவர் கைகளுக்கு? கன்னத்தின் இரு புறங்களிலும் வழிந்தோடிற்று.

''அப்பா... என்னப்பா நீங்கள்...'' குனிந்தாள் இளைய மகள். தன் சேலைத் தலைப்பால் அந்த ஈரத்தை வாங்கிக் கொண்டாள். அதேசமயம் அவள் எண்ண மெல்லாம் வேறோரிடத்தில் இருந்தது. 'பாலசந்தர்! பாலசந்தர்! நீங்கள் அக்காவைக் கொலை செய்ததோடு வைர முருகனையுமா களவாடியிருப்பீர்கள்?' அவள் உள்ளம் அலறியது.

நஞ்சுண்டன் வெளியேறுவதை அவள் கண்கள் கவனித்தன. இந்தப்புறம் தந்தையைப் பார்த்தாள். அவரும் அயர்வு மிகுதியினால் விழி மூடியிருந்தார்.

ரேணுகா எழுந்து கொண்டாள். பாலசந்தரைப் பார்க்கவேண்டும். ஆனால் நஞ்சுண்டனுடன் அல்ல. அவனுக்குக் கூடத் தெரியாமல் பாலசந்தரைச் சந்திக்க

வேண்டும். சந்தித்து, அவனுக்கு இந்தக் கொலையில் சம்பந்தம் கிடையாது என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். அறைக்கு வெளியே எட்டிப் பார்த்தாள். ஏதோ வேலையாக நர்ஸ் குழாயடியை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறாள். யாரும் அவளைக் கவனிக்கவில்லை. மருந்து அலமாரிக்குச் சென்றாள். தூக்க மாத்திரைகளில் இரண்டை எடுத்துக் கொண்டாள் அவசரமாக.

இரவு வந்தது.

எப்படிப்பட்ட சாவு வீடானாலும் சாப்பாடு, நித்திரை முதலியன கிரமப்படி நடக்கத் தவறுவதில்லை. குழந்தைப் பாண்டியனின் வீடு மட்டும் விதிவிலக்கா? யார் யாரோ உறவினர்கள், நண்பர்கள் வேறு வந்து கொண்டேயிருந்தார்கள் - துக்கம் விசாரிக்கவும், ஆறுதல் கூறவும், துயரத்தில் பங்கு பெறவும். சிலர் பங்களாவிலேயே தங்கிவிட்டனர்.

எல்லா அமளிகளும் ஓய, இரவு வெகு நேரமாகி விட்டது.

சமையற்பாட்டியிடம் சூடான ஒரு கப் காப்பி வாங்கிக் கொண்டாள் ரேணுகா. தூக்க மாத்திரைகளை அதில் கரைத்தாள். மாடிக்கு எடுத்துச் சென்றாள்.

குறுக்கும் நெடுக்கும் உலவிக் கொண்டிருந்தான் நஞ்சுண்டன.

''தலைவலி என்று காப்பி கேட்டீர்களாமே?'' என்றாள் ரேணுகா.

அவனுடைய கூரிய கண்கள் இடுங்கின. ''நானா! இல்லையே!''

அலுப்புடன் காப்பியை மேஜை மீது வைத்தாள். நாற்காலியில் பொத்தென்று விழுந்தாள். ''வேறே யார் கேட்டார்களோ! வேலைக்காரன் என்னவோ சொன்னான். அப்பப்பா! என்னால் முடியவில்லை விருந்தாளிகளை நிர்வகிக்க. பரவாயில்லை, நீங்களே குடியுங்கள் காப்பியை.''

டெஸ்ட் ட்யூபில் போட்டுப் பார்க்கிற மாதிரி ரேணுகாவை எடை போட்டது அவன் பார்வை. பதிலொன்றும் பேசாமல் எடுத்துக்கொண்டான் காப்பியை. ரேணுகா அசிரத்தையாக இருப்பது போல் ஏதோ பத்திரிகை களைப் புரட்டினாள். டம்ளர் மேஜைக்குத் திரும்பியது. பின்னரே தலை நிமிர்ந்தாள். டம்ளர் காலியாக இருந்தது. நஞ்சுண்டன் ஓசையுடன் கொட்டாவி விட்டான்.

''வருகிறேன்.'' காலி டம்ளருடன் கீழிறங்கினாள் ரேணுகா. அவள் மனம் சொல்லிக் கொண்டிருந்தது: 'என்னை மன்னியுங்கள், நஞ்சுண்டன். உங்களை இப்படித் தான் தடுக்க வேண்டியிருக்கிறது. நேற்று மாதிரி இன்றும் நீங்கள் என் பின்னால் வரக்கூடாது. பாலசந்தரை நீங்கள் ரொம்ப சந்தேகப்படுகிறீர்கள். உங்களை வைத்துக் கொண்டு பாலசந்தரோடு பேசவே எனக்குப் பயமாக இருக்கிறதே.''

மேலும் ஒரு மணிநேரம் சென்றது. வீடு மொத்தமும் அமைதியில் ஆழ்ந்தது. ரேணுகா புறப்பட்டாள்.

பாலசந்தர் அப்போதுதான் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பியிருந்தான். நாற்காலியில் களைப்புடன் அமர்ந் திருந்தான். இருட்டில் பதுங்கிப் படியேறி வருவது யார்? ரேணுகாவா? அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

''ரேணு!''

ஒரே பாய்ச்சலில் அவன் பரந்த மார்பில் தன்னைப் புதைத்துக் கொண்டாள் ரேணுகா. ''உங்களுக்கு விஷயம் தெரியுமா, பாலச்சந்தர்?''

''ஆமாம் ரேணு... சாயந்தரம் பேப்பர்களில்தான் கொட்டை எழுத்தில் செய்தி பிரசுரித்திருக்கிறார்களே? நானே உன்னைப் பார்த்து ஆறுதல் சொல்ல நினைத் திருந்தேன்...''

ஈரம் பொதிந்த கண்களால் அவனைப் பார்த்தாள் அவள். குழந்தைபோல் கேட்டாள்: ''அக்கா இறந்த போனதில் உங்களுக்கு... உங்களுக்கு... வருத்தம்தானே?''

''என்ன ரேணு அப்படிக் கேட்கிறாய்?''

''இல்லை... நேற்று நீங்கள் கோபமாக அவளைத் திட்டியதால்...''

''திட்டியதால்?'' பாலசந்தரின் மூக்குக் கண்ணாடியின் வழியே அவனுடைய கொந்தளிப்பு வெளிப்பட்டது. அதைக் கவனியாமலே பேசினாள் ரேணுகா. ''உங்களையே சந்தேகப்பட்டு...''

''பேஷ்! பேஷ்!''

''அதிலும் நேற்று இரவு ரொம்ப நேரம் வரை நீங்கள் திரும்பாததால்...''

''உனக்கு எப்படித் தெரியும் அது?''

''இங்கே வந்து காத்திருந்தேன்...'' பாலசந்தருக்குச் சுருசுருவென்று கோபம் வந்தது. ''ரேணுகா! என்னையே வேவு பார்க்கிற அளவுக்கு உன் புத்தி மாறிவிட்டதா?''

''தப்புதான்... ஆனால் நீங்கள் எங்கே போயிருந் தீர்கள்?'' அவசரக் கேஸா...? ''எதுவுமில்லை.''

''பின்னே!''

''எனக்கு எவ்வளவோ ஆயிரம் அந்தரங்கம் இருக்கும். அவ்வளவையும் உன்னிடம் ஒப்புக்கொள்ள வேண்டுமா?''

''பாலசந்தர்! ஏனிப்படிப் படபடவென்று வருகிறது உங்களுக்கு? 'சுகுமாரியைச் சும்மா விடமாட்டேன்!' என்று உரக்கக் கூவிக்கொண்டே நேற்று வெளியே போனீர்கள். அதை யாரேனும் கேட்டிருப்பார்கள். ராத்திரி வெகுநேரம் வரை நீங்கள் திரும்பவில்லை. அந்த நேரத்தில் தான் அக்கா கொலையுண்டிருக்கிறாள். இரண்டையும் யாராவது இணைத்துப் பார்த்தால்...''

''யாராவது என்ன! நீயேதான் அந்த வேலையைச் செய்து கொண்டிருக்கிறாயே! விடு என்னை! நான் போக வேண்டும்.'' ரேணுகாவுக்கு அவனையும் மீறிக் கோபம் வந்தது. சாதாரணப் பகுத்தறிவைக் கூடவா இழந்து விட்டான் பாலசந்தர்! அதை நினைக்கையில் ஆத்திரம் மேலோங்கியது. ''பாலசந்தர்! நேற்றிரவு நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்? என்ன செய்தீர்கள்? அதைச் சொல்லித் தான் ஆகவேண்டும்!'' என்றாள்.

''முடியாது. சொல்ல மாட்டேன். என்னைத் தூக்கிலே போடுவதானாலும் சரி, நான் சொல்லப் போவதில்லை!''

''பாலசந்தர்! உங்கள் பிடிவாதம்...''

''எத்தனை ஆபத்தானது என்று எனக்குத் தெரியும். ஆனால் நேற்றிரவு நான் போயிருந்த இடத்தைச் சொல்லத் தயாராயில்லை!''

அவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் மறைந்து நின்றிருந்தான் நஞ்சுண்டன். சிரித்துக் கொண்டே தனக்குள் சொல்லிக் கொண்டான்:

'ரேணுகா! யார் எதை நீட்டினாலும் வாங்கிக் குடிக்கிற மடையனல்ல இந்த நஞ்சுண்டன்! குடிக்கிற மாதிரி பாசாங்கு செய்து ஜன்னலுக்கு வெளியே வீசியெறிந்தது எவ்வளவு நல்லதாயிற்று! இல்லாவிட்டால் இந்த ஒப்பற்ற ரகசியம் தெரிய வந்திருக்குமா எனக்கு!'




சிவப்புப் பந்துகள் ஒன்றையொன்று மோதின; முத்தமிட்டன; உரசின; ஓடி ஒளிந்தன; கலகலவென்று நகைத்தன.

''யுவர் டர்ன்.'' பிலியர்ட்ஸ் பந்துகளைத் தள்ளும் கோலுடன் ஒதுங்கிக் கொண்டான் ரமணன்.

ரசிகர் வரிசையிலிருந்து ''வெல்டன் ரமணன்!'' என்ற பாராட்டுக்கு கேட்டது. அவர்கள் திசையில் திரும்பினான். ரமணன். ''நன்றி,'' என்றான். குனிந்து வணக்கம் தெரிவித்தான். நிமிர்ந்தபோது அவன் கண்ணில்பட்டவன் அப்பாவுதான். ஹாலுக்குள் நுழையும் வாசலில்,

கேட்கீப்பரிடம் வாதாடிக் கொண்டிருந்தது. அதை ஆட்டி, ரமணனையும் காட்டி மன்றாடுகிறான்.

ரமணன் சிரித்துக் கொண்டான். பாவம், அப்பாவு. பழைய கேட்கீப்பரை அவனுக்கு அறிமுகமுண்டு. இவன் புதிது.

கைதட்டல் எழுந்தது பார்வையாளர் வரிசையிலிருந்து. ரமணனின் எதிராளி பிரமாதமான ஒரு ஷாட் கொடுத்திருக்கிறார். ரமணனுக்கு ரோஷமாயிருந்தது. ஆட்டத்தின் பக்கம் கவனத்தைச் செலுத்தினான்.

''உங்களை யாரோ கூப்பிடுகிறார்கள்.'' நடுவராக இருந்தவர் ரமணனின் முதுகில் மெல்லத் தட்டினார். ''யாரையும் இப்போது பார்ப்பதற்கில்லை.'' பந்தின் அசைவுகளிலேயே கண்ணாயிருந்தான் ரமணன்.

''உங்கள் வேலைக்காரனாமே?''

''என்னைப் பெற்ற அம்மாவாயிருந்தாலும் சரி.''

''ஏதோ தந்தி வந்திருக்கிறதாம்.''

''கிழித்துச் சாப்பிடச் சொல்லுங்கள்.''

எதிராளியின் முறை முடிந்தது; ரமணனின் முறை திரும்பியது.

அர்ஜுனனுக்குக் காடு தெரியவில்லை, மரம் தெரியவில்லை, கிளை தெரியவில்லை, இலை தெரியவில்லை, பட்சி ஒன்றுதான் தெரிந்ததாம். அதுபோல் ரமணனுக்குக் கூட்டமோ மக்களோ நடுவரோ அவர் நினைவூட்டிய விஷயமோ மனத்தில் புகவில்லை. மெத்தென்ற பிலியர்ட்ஸ் மேஜையும், உருளுகின்ற பந்துகளும்,

செல்ல வேண்டிய பாதையும், விழவேண்டிய துவாரமும் அவன் பார்வையிலிருந்தன. பார்த்தன் கை வில்லைப் போலவே பிலியர்ட்ஸ் கோலும் அவன் கையில் அடிமை யாக இயங்கியது.

பட் பட் பட். பந்துகளின் மோதல்க்ள். படபடபட. ரசிகர்களின் கையொலி. "கங்கிராசுலேஷன்ஸ் மிஸ்டர் ரமணன்." ஹிந்துஸ்தான் ஏரோனாடிக்ஸிலிருந்து வந்திருந்த பெங்களூர் சாம்பியன் கைகுலுக்கினார்.

பிறகுதான் ரமணனுக்கு இவ்வுலக நினைவு வந்தது. கலைந்து கொண்டிருந்த கூட்டத்தைக் கண்காணித்தான். அப்பாவுவின் பருமனான சரீரம் முண்டி முன்னேறி வந்துகொண்டிருப்பது தெரிந்தது. "ஸாரி அப்பாவு. ஏதோ தந்தி கொண்டுவந்திரந்தாயாமே?"

அப்பாவுவுக்கு ஏகப்பட்ட கோபம்.

"அதைத்தான் தின்னச் சொன்னீங்களாமே? போன் சேஸ்தினி" என்றான். ரமணன் சிரித்தான். "ஸாரி என்று சொன்னால் விட்டுவிட வேண்டும். அது தான் உன்னைப் போன்ற ஜென்டில்மேனுக்கு அழகு."

அப்பாவுவின் வாய் நிறைய மாட்டுப் பல் பளபளத்தது "காலையிலே வந்ததுங்க" என்று சொல்லித் தந்தியைக் கொடுத்தான்.

பிரித்துப் படித்த ரமணன் உதட்டைப் பிதுக்கினான். கேலியாகச் சிரித்துக் கொண்டு, தந்தியை மடக்கினான். பாண்ட்டுக்குள் போட்டுக் கொண்டான். "என்னங்க விசேஷம்?" அப்பாவுவின் பதற்றத்தை ரமணன் பொருட் படுத்தவில்லை. பிலியர்ட்ஸ் பந்தயத்தை ஏற்பாடு

செய்திருந்தவர்களின் மாலைகள், பாராட்டுரைகள் ஆகியவற்றைப் பொறுமையுடன் பெற்றுக்கொண்டான். மோட்டார் பைக் அவன் வீட்டை நோக்கிப் பறந்தது. பின்னால் அமர்ந்திருந்த அப்பாவு, ''இப்பவாவது சொல்லுங்க'' என்றான். ''அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலம் கொடுத்திருக்கிறார் - நாகர் கோவிலிருந்து.''

''ஏமி விஷயம்?''

''வீட்டுக்குப் போய்ச் சொல்கிறேன்.'' பைக் கை வேகமாய்ச் செலுத்தினான் ரமணன். வீட்டை அடைந்து மாடிக்குச் சென்று, அறையில் நுழைந்து, நாற்காலியை விரித்து - கால்மீது கால் போட்டு அமரும்வரை அவனிட மிருந்து ஒரு சொல்லும் வரவில்லை. பிறகே, ''அப்பாவு! நம்ம ஜீவாமிர்தத்தை எடு,'' என்றான். கார வேர்க்கடலை நிறைந்த கண்ணாடிப்புட்டியைக் கொண்டுவந்து வைத்தான் அப்பாவு.

''என்ன கேட்கவேண்டுமோ, இப்போது கேள்,'' என்றான் ரமணன்.

''தணிகாசலம்காரு தந்தி கொடுத்திருக்காருன்னு சொன்னீங்களே...'' ரமணன் தந்தியைப் பிரித்தான். ''உனக்கு இங்கிலீஷ் படிக்கத் தெரியாதே? 'புத்திசாலி என்று நினைத்திருந்தேன். கோட்டை விட்டுவிட்டாயே' என்று அடித்திருக்கிறார்.'' தலையைச் சொறிந்தான் அப்பாவு.

''எதைப்பற்றிச் சொல்றாருங்க?''

''வேறே எதைப்பற்றி? காலையிலேயிருந்து உன் மடியிலே மடித்து மடித்து வைத்துக் கட்டிக் கொண்

டிருக்கிறாயே, அந்தப் பேப்பரை எடு. அதிலேயிருக்கிற நியூஸைத்தான் சொல்கிறார் அஸிஸ்டென்ட் கமிஷனரும்.''

அவனுக்கு அழகு காட்டுகிற மாதிரி முகத்தை வலித்தான் அப்பாவு. தன் ரகசியத்தை ரமணன் கண்டு விட்ட கோபம் அவனுக்கு. வேட்டி நுனியில், வெற்றிலை பாக்குப் பொட்டலத்துடன் இருந்தது அந்தத் தெலுங்குத் தினசரி. முணுமுணுத்தபடியே அதை எடுத்தான் வெளியே. இரண்டாம் பக்கததின் தலைப்பிலிருந்த செய்தியைச் சுட்டிக் காட்டினான் ரமணன்.

'மகாபலிபுரம் படகில் இளம் பெண்ணின் பிரேதம்' என்று விவரித்தது அந்தச் செய்தி.

''இதைத்தான் சொல்கிறார் தணிகாசலம்காரு'' என்றான் ரமணன். ''நான் குழந்தைப்பாண்டியனின் வீட்டில் காவலுக்குப் போயிருப்பதாகத் தானே அவருக்கு எண்ணம்? அதனால்தான் என்னைக் கிண்டல் செய்கிறார். நல்ல வேளை, குழந்தைப்பாண்டியனின் வீட்டு விலாசம் தெரியாததால், இந்த விலாசத்துக்கு அடித்தார்.''

''ஆமாம்... நீங்க ஏமாந்துதானே போனீங்க? கமிஷனர்காரு கிண்டல் செய்யறது நியாயம்தானுங்க.''

''ஏய் துரோகி!''

''பின்னே என்னங்க! அன்னைக்கே அந்த நஞ் சுண்டனை ஒரு மடக்கு மடக்கி, குழந்தைப் பாண்டியனின் பங்களாவிலேயிருந்து ஒரு கல்தா கொடுத்திருந்தீங்கன்னா ஈ பிள்ள அனாவசியமாச் செத்திருக்குமா?''

வேர்க்கடலை சோளவைத் தலைகீழாகக் கவிழ்த்தான் ரமணன். கையைத் தட்டிக் கொண்டான். ஒரு டம்ளர்

தண்ணீர் குடித்தான். ''அப்பாவு, இப்படி உட்கார்'' என்றான். ''உன் கோபம், அஸிஸிடென்ட் கமிஷனரின் தந்தி இரண்டும் சரிதான், அப்பாவு நான் கோட்டைதான் விட்டுவிட்டேன். அந்த நஞ்சுண்டனின் பிலிம் சுருள்களைக் கைப் பற்றி, நீலாவுடைய மானத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று முனைந்தோம் பார், அந்த நேரத்திலே கொலை நிகழ்ந்துவிட்டது. ஆனால் இதை இப்படியே விட்டு விடப் போவதில்லை இந்த ரமணன்!''

''ஆ! அப்படிச் சொல்லுங்க!'' உற்சாகமாகத் தொடை தட்டிக் கொண்டு எழுந்தான் அப்பாவு, ''இப்பவே போலாமா?''

''எங்கே?''

''குழந்தைப்பாண்டியன்காரு வீட்டுக்குத்தான்.''

''போய்?''

''நீங்கதான் அசல் ரமணன், அந்த ஆள் நஞ்சுண்டன் என்று...''

''சொல்லிவிடலாம் என்கிறாயாக்கும்? அருமையான யோசனைதான்!'' ரமணன் உலவிக்கொண்டே பேசினான். அப்பாவுவுக்குச் சொல்வது போல அல்ல; தனக்குத்தானே விளக்கிக் கொள்வதுபோல. ''நஞ்சுண்டனை உடனே ஆள் மாறாட்டம் செய்ததற்காக ஆறு மாதக் கடுங்காவல் வேண்டுமானால் கிடைக்கலாம். சுகுமாரி கொலை? அதை நஞ்சுண்டன் தான் செய்தானா? அது தெரியாமலே போய்விடும். அதற்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. அந்த வைர முருகன் இருக்கிறதா, போய்விட்டதா...''

டெலிபோனின் கிணு கிணுப்பு ரமணனின் பேச்சை நிறுத்தியது. எடுத்துக் கேட்டான்.

ஒலித்தது ஒரு பெண் குரல்: ''ஹலோ! குழந்தைப் பாண்டியனின் பங்காளவிலிருந்து நர்ஸ் அம்மணி பேசுகிறேன். அது பாபுலர் மெடிகல் ஷாப் தானே?''

''எஸ். பாபுலர் மெடிகல் ஷாப்,'' என்று பதிலளித்தான் ரமணன். திகைப்புடன் குறுக்கிட வந்த அப்பாவு, ரமணனின் விழியுருட்டலில் மிரண்டு ஒதுங்கினான்.

''பி காம்ப்ளெக்ஸ் மாத்திரைப் புட்டியைத் திடீரென்று காணோம்,'' என்றாள் அம்மணி

''பி காம்ள்ளெக்ஸ் காணோமா? சரி, கொடுத்தனுப்புகிறோம். கேப்ஸ்யூல் இருக்கிறதா?'' என்றான் ரமணன்.

''கேப்ஸ்யூலா? இருக்கிறது, அப்படியே இருக்கிறது.''

நர்ஸ் போனை வைத்துவிட்டாள். குறுந்தாடியை நீவிக் கொண்டான் ரமணன். எதிரில் அப்பாவுவின் திறந்த வாய் தெரிந்தது.

''அம்மணி சுறுசுறுப்பாகத்தான் இருக்சிறாள். உன்னைப்போல் சோம்பேறியல்ல,' என்றான் ரமணன். ''பாபுலர் மெடிகல் ஷாப்புக்கு அவ்வப்போது போன் பண்ணி, அங்கே நடப்பவைகளைத் தெரிவிக்க வேண்டுமென்று சொல்லியிருந்தேன். ஒழுங்காகச் செய்து வருகிறாள்.''

''பாபுலர் மெடிகல் ஷாப்பா?'' அப்பாவுவின் திகைப்பு இன்னும் ஐந்து டிகிரி ஏறியது.

''அதுதான் இந்த வீட்டின் பெயர். பி காம்ப்ளெக்ஸ் என்றால் வைர முருகன். கேப்ஸ்யூல் என்றால் நஞ்சுண்டன். யாருக்கும் சந்தேகம் ஏற்படாதபடி பேசவே இந்த ஏற்பாடு.'' ரமணனின் குரல் சோகமாக மாறிற்று. ''எந்த இரண்டு விஷயமாக அந்த ரேணுகா என் உதவியைத் தேடினாளா. அந்த இரண்டும் கெட்டுவிட்டது - சுகுமாரி, வைர முருகன்.''

''இனிமேல் உங்களுக்கு அங்கே வேலை யில்லையே? படுக்கையை உதறிப் போடறேன். நித்திர போண்டி.'' அப்பாவுவுக்கு ஏகப்பட்ட கோபம். அதைக் காட்டிக்கொள்ள முடியாததால் கிண்டலில் இறங்கினான்.

ரமணனுக்குச் சுர்ரென்று ரோஷம் வந்தது. ''இனிமேல்தான் என் வேலையே ஆரம்பமாகிறது'' விரலைச் சொடுக்கினான். ''நான் சொன்னதில் ஒரு திருத்தம். இரண்டு விஷயம் கெட்டுவிட்டது என்று சொன்னேனில்லையா? அது தப்பு. ஒன்றுதான் கெட்டது.''

அப்பாவு அவனைக் குழப்பத்துடன் நோக்கினான். ''வைர முருகன் எங்கேயும் போகவில்லை. குழந்தைப் பாண்டியனின் வீட்டில்தான் இருக்கிறது. நஞ்சுண்டனின் கையில் அது இன்னும் சிக்கவில்லை. சிக்கியிருந்தால், ஒரு பயங்கரக் கொலை நிகழ்ந்த பிறகும், போலீஸார் துருவித் துருவித் துப்புத் துலக்குவார்கள் என்ற நிலைமை ஏற்பட்ட பிறகும், நஞ்சுண்டன் அந்தப் பங்களாவில் ஒட்டிக் கொண்டிருக்க மாட்டான்.''

அப்பாவு முதல் தடவையாக ஒரு புத்திசாலித் தனமான பேச்சை வெளியிட்டான். ''அப்படியானால், வைர முருகனாவது கொள்ளை போகாதபடிக்குக்

கண்ணைத் திறந்துக்கிட்டு வேலையைப் பாருங்க. ஏன்னு கேட்டீங்கன்னா...'' சரேலென அவன் பார்வை கீழே தெரிந்த தெருப்பக்கம் சென்றது. ''அட, அந்தப் பெண்...''

''யார்?'' குபுக்கென எழுந்தான். ரமணன். அப்பாவுவைப் பின்தள்ளிவிட்டு தெருவைப் பார்த்தான் மறைவாக நின்றவாறு.

''நஞ்சுண்டனின் சம்சாரம், - நீலா'' என்றான் அப்பாவு. ''நம்ம வீடு மறந்து போச்சுதா, என்ன? உள்ளே வராமல் தாண்டிப் போகிறாங்களே?''

ரமணன் புன்னகை செய்தான். ''உன்னைக் காட்டிலும் நீலா புத்திசாலி. தெருக்கோடி வரையில் சென்றுவிட்டுத் திரும்புகிறாள், பார். தன்னை யாரும் பின் தொடரவில்லையா என்று உறுதி செய்து கொள்கிறாள். அவ்வளவுதான்.''

அவன் சொன்னது சரிதான். நீலா திரும்பி வந்தாள். கிடுகிடுவென்று மாடியேறி வரலானாள். ''என்னாத்துக்கு இந்த அம்மா இங்கே வருதாம்?'' அப்பாவு கதவைச் சாத்தப் போனான். ''ஒருவாட்டி இவங்களுக்காக சகாயம் சேஸ்திரி. அநியாயமாய் ஒரு நல்ல பெண்ணோட உயிரே போயிட்டுது. இப்போ...''

கதவைத் திறந்துவிட்டான் ரமணன். ''அப்பாவு, வாழ்க்கையிலே வாழைத் தண்டு முதல் வைரக் கட்டிவரை எதற்கும் ஒரு விலை உண்டு. அந்த விலையைக் கொடுத்துத் தான் அதை வாங்க வேண்டும். அதுபோல, இந்த நீலாவின் மனஅமைதிக்காக சுகுமாரியின் உயிரை விலை கொடுக்கும் படி நேர்ந்துவிட்டது. சற்று அதிகமான விலைதான்.

ஒப்புக்கொள்கிறேன்.'' நீலா உள்ளே நுழைந்தாள். ரமணனின் முகத்தைப் பார்த்தாள். கண்கொட்டாமல் சில வினாடிகள் நின்றான். அவள் உதடுகள் துடித்தன. கை விரல்கள் நடுங்கின. பொத்தென்றுதரையில் உட்கார்ந்தாள். முழங்காலில் தலையைப் புதைத்துக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினாள். தடுக்க முனைந்த அப்பாவுவை ஜாடை காட்டி நிறுத்தினான் ரமணன். அவள் தானாகவே ஓய்ந்தாள். அதற்காகத்தான் காத்திருந்தான் ரமணன். ''இனிமேலாவது சொல்லலாமா உன் அழுகைக்குக் காரணத்தை?''

நீலா கண்ணைத் துடைத்துக் கொண்டாள். ஆனால் ஈரம்தான் போயிற்று. நெஞ்சின் கலக்கம் கண்ணில் சிவப்பாக நின்றது. ''அந்தப் பாவி... அந்தப் பாவி என் வீட்டுக்கு வந்திருந்தான்...'' ''நஞ்சுண்டன்தானே?

''ஆமாம்... அந்த... அந்த ஆபாசப் படங்கள்... ஏகப் பட்ட போட்டோக்கள் வைத்திருந்தானாம்... எனக்கே தெரியாது. தூக்கிக்கொண்டு போய்விட்டான்... என் மானமே போய்விட்டது...''

ரமணன் உள்ளே சென்று எடுத்து வந்தான். ''இந்தப் பெட்டியில்தானே எடுத்து வைத்துக்கொண்டு போனான்?'' நீலாவின் கண்கள் தெறித்து விழுந்தன. ''ஆமாம்! ஆமாம்! இதற்குள் இருந்த... பிலிம்...''

''அதோ.''

மூலையில், பாம்பு சட்டை உரித்துப் போட்ட மாதிரி வெளிர் மஞ்சள் சுருள்களாகக் கிடந்த பிலிம் குவியலைக் காட்டினான் ரமணன்.

நீலாவினால் நம்ப முடியவில்லை. எரியும் வெடி குண்டை நெருங்குபவள்போல அடிமேலடி எடுத்து வைத்தாள். கிட்ட நெருங்கினாள். மெல்ல ஒன்றைக் கையி லெடுத்துப் பார்த்தாள்.

அவள் உருவம் கடுகத் தனைகூடத் தெரியவில்லை. மொத்தமும் வீணாகிவிட்ட வெற்று பிலிம்கள்தான்.

ஆனந்தம் அவளை வாயடைக்க வைத்தது. துயரத் தினால் முன்பு துடித்தவள் மகிழ்ச்சியினால் இப்போது துடித்தாள். ''நீங்கள் எப்படி... எப்படி...'' என்பதற்குமேல் பேச்சு வரவில்லை.

அவள் ஆனந்தத்தை ரமணன் தடை செய்தான். ''உன்னிடமிருந்து நஞ்சுண்டன் எடுத்துப் போனவை இவ்வளவுதான். வழிமறித்துக் கைப்பற்றினேன். ஆனால், அதற்கு முன்பே அவன் எவ்வளவு படங்கள் எடுத்துப் போயிருக்கிறானோ. எங்கெல்லாம் ஒளித்து வைத்திருக் கிறானோ எனக்குத் தெரியாது. ஒன்று மட்டும் சொல்வேன். நஞ்சுண்டன் அபாயமானவன். ஆபத்தானவன். அவன் இருக்கிற திசைப் பக்கம்கூடத் தலைவைத்துப் படுக்காதே.''

ரமணன் பேசப் பேச அவள் முகத்தில் திகில் பரவியது. ''அவன்... அவன் இருக்குமிடம் உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியும். ஆனால் உன்னிடம் சொல்லமாட்டேன். சொன்னால் உடனே நீ அங்கே போய் நிற்பாய்.''

''என்னை அவன் ஏதாவது செய்துவிடுவானோ என்று பயப்படுகிறீர்களா?''

''அவனை நீ என்ன பண்ணிவிடுவாயோ என்றும் பயப்படுகிறேன்.''

''அவன் உயிர்மீது உங்களுக்கு எத்தனை அக்கறை!'' வெறுப்புடன் சிரித்தாள் நீலா.

''ஆமாம். ரொம்ப அக்கறைதான். காரணகாரியத் தோடு, மேளதாளத்தோடு அவனைத் தூக்கிலேற்ற வேண்டு மென்று நான் பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன். நீ பாட்டுக்குக் குறுக்கிட்டுத் தொலைத்து அவனுக்குத் தியாகிப் பட்டம்' வாங்கித் தந்துவிட்டால்?''

விரக்தியுடன் நீலா எழுந்து கொண்டாள். பீரோவிலிருந்து கண்ணாடி அவளுடைய வெளிறிய உருவை எடுத்துக் காட்டிற்று. அதன் முன்னே சென்று நின்றாள். முகத்தைத் துடைத்துக் கொண்டாள். கூந்தலைக் கோதிக் கொண்டாள். இரும்புக் குண்டுகள் கட்டப்பட்டாற் போல இழுத்த நடையுடன் வெளியேறினாள்.

அப்பாவு! நான் அவசரமாய் வெளியூர்போக வேண்டியிருக்கிறது.'' ரமணன் சுறுசுறுப்படைந்தான். ''ஒரு பாண்டும் ஸ்லாக்கும் எடுத்து வை. எவரிடமும் சொல்ல வேண்டாம். நர்ஸ் அம்மணியிடம் மற்றத் தகவல் களையும் தெரிந்துகொண்டு போகிறேன். இரண்டு நாளில் திரும்பிவிடுவேன்.''

அப்பாவு தன் அசட்டுக் கண்களை உருட்டிக்கொண்டு திகைத்து நின்றான்.

நீலா தன் வீட்டை நோக்கித் திரும்பிக் கொண்டிருந் தாள். அவள் ஒழுங்காகப் பள்ளிக்குச் சென்று டல

நாட்களாகிறது. இனிமேலாவது தவறாமல் செல்ல வேண்டும். வாழ்வைச் செம்மைப் படுத்திக்கொள்ள வேண்டும். கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்றிருக்கக் கூடாது...

''நீலா! நீலா!'' கைதட்டிக் கூப்பிட்டார்கள் யாரோ.

கோடம்பாக்கம் மேம்பாலத்தருகே பஸ்ஸிலிருந்து இறங்கிய நீலா திரும்பி நோக்கினாள்.

அவளுடைய சக ஆசிரியையான மங்கைத் தாயாரம்மாதான் கூப்பிட்டவள்.

''நீலா! ஸ்கூலுக்கு ஒழுங்காய் வர முடியாவிட்டால் போகுது. பரவாயில்லை. நம்ம ஸ்கூலிலே, நம்மோடு ஆசிரியையாக. இருக்கிற ரேணுகாவைத் துக்கம் விசாரிக்கக் கூடப் போகவேண்டாமா? உன்னைத் தவிர மற்ற எல்லாரும் போய்க் கேட்டுவிட்டு வந்துவிட்டோம்'' என்றாள் மங்கைத்தாயாரம்மா.

தூக்கிவாரிப் போட்டது நீலாவுக்கு. ''என்ன மங்கை, ரேணுகாவுக்கு என்ன நேர்ந்தது? அவள் அப்பாரொம்ப நாளாய்ப் படுத்திருந்தாரே, அவர்...''

''அவர் போயிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். பழுத்த இலை விழுவதில்லை. துளிரைத்தான் ஆண்டவன் கிள்ளிவிடுகிறான்... ஹூம்! உனக்கு விஷயமே தெரியாதா?''

அதிர்ச்சி அதிகமாயிற்று நீலாவுக்கு, ''இல்லையே... என்ன? சொல்லு.''

ரேணுகாவோட அக்கா சுகுமாரி பயங்கரமாய்க் கொலை செய்யப்பட்டாளே, தெரியாது உனக்கு? பேப்பரில் கூடப் பார்க்கவில்லை?''

''ஆ! அப்படியா!'' விதிர்த்தது நீலா சுகுமாரியை இரண்டொரு முறை அவள் பார்த்ததுண்டு. அவ்வளவு அழகான பெண்! என்ன வேடிக்கையான சுபாவம்!

''எனக்கு விஷயமே தெரியாது. இப்போதே போகிறேன்.'' ஆட்டோ ரிக்ஷாவொன்றில் புறப்பட்டாள் நீலா.

ஹாலில் நுழையும்போதே அவளை வரவேற்றவள் ரேணுகாதான். ஆறுதலைக் கேட்குமுன்பே வெடித்துக் கொண்டு வந்தது அழுகை. ''நீலா... நீலா...'' என்று கண்ணீர் சிந்தலானாள்.

ஆனால் நீலா எதற்காக வந்தாளோ அதை மறந்தாள். அழும் தோழியைத் தேற்றத் தோன்றவில்லை.

கதவினருகே கழற்றிப் போடப்பட்டிருந்த ஒரு செருப்பு ஜோடியைத்தான் அவள் கண்கள் வெறித்து நோக்கின. அந்தச் செருப்புக்கள், நஞ்சுண்டனுடையவை. அவளுக்கு நன்கு தெரியும். 'கம்ப்ரஸ்டு லெத'ரில் தயாரிக்கப்பட்ட அந்தச் செருப்பை மூன்று மாதங்களுக்கு முன்புதான் நஞ்சுண்டன் வாங்கியிருந்தான். ஒரே மாதத்தில் 'வார்' அறுந்துவிட்டது. ஒரு செருப்புத் தொழிலாளி யிடம் நீலாதான் ரிப்பேர் செய்யக் கொடுத்தாள். செருப்பின் நிறத்தில் இல்லாமல் வேறொரு நிறத் தோலை அவன் ஒட்டுப் போட்டதால், வித்தியாசம் சட்டென்று தெரிந்தது.

அந்தப் பாவி இந்த வீட்டிலா இருக்கிறான்! அப்படியானால் சுகுமாரி என்ன, வீடு மொத்தமும் கொலை செய்யப்பட்டிருந்தால்கூட ஆச்சரியமில்லை.

நீலாவுக்குத் தேகம் பதறியது. தன் கள்ளமற்ற இளம் தோழியை ஏறிட்டு நோக்கினாள். ஐயோ! ரேணுகாவையும் எந்தத் துர்நோக்கத்துக்கு நஞ்சுண்டன் பலி கொடுப்பானோ!



நடுங்கியது நீலாவின் தேகம். அவள் வாழ்வைக் குலைத்தவன் இங்கேயா இருக்கிறான்? யானை மிதித்த பூவாக அவள் வாழ்க்கையை ஆக்கியவன் இந்த நல்லவர்களின் வீட்டிலா புகுந்திருக்கிறான்? நீலாவின் கண்கள் இருண்டன. தலை சுற்றியது.

''எடுத்துக்கொள் நீலா.'' ரேணுகாவின் குரல் அவளை எழுப்பியது. பின்னரே கவனித்தாள் தோழியின் கையில் இருக்கும் ஓவலை. ''இருக்கட்டும் ரேணு'' என்று எடுத்துக் கொண்டாள்.

நஞ்சுண்டனைக் காட்டிக் கொடுத்த செருப்பு ஜோடியை விட்டு அவள் கண்கள் அகலவில்லை.

ரேணுகாவைக் கேட்க வாயெடுத்தாள். சற்று முன் ரமணன் செய்த எச்சரிக்கை செவியில் ஒலித்தது. 'நஞ்சுண்டன் எங்கே இருக்கிறான் என்று தேடாதே. அவன் இருக்குமிடத்துக்குப் போகாதே' என்றெல்லாம் அவன்

சொன்ன வாசகங்கள் நினைவு வந்தன. ஆனால் அதற்காக ஒரேயடியாகத் தனக்குத்தானே வாய்ப் பூட்டுப் போட்டுக் கொள்ள முடியுமா? அவள் ஆத்திரம் அவளுக்கல்லவா தெரியும்!

''ரேணு, விருந்தாளிகள் எல்லோரும் திரும்பிப் போயாயிற்றா?'' என்று எச்சரிக்கையுடன் விசாரித்தாள்.

''ஓ, எல்லோரும் போய்விட்டார்களே?'' என்றாள் ரேணுகா. அதற்குமேல் என்ன கேட்பது? எப்படிக் கேட்பது? நீலாவின் தவிப்பை ரேணுகாவே புரிந்து கொண்டாள் போலும். தோழியின் பார்வை செல்லும் திசையில் விழியைச் செலுத்தினாள். மெல்ல நகைத்தாள்.

''புதிதாக யாரோ ஆண் பிள்ளையின் செருப்பு இருக்கிறதே என்று பார்க்கிறாயா?'' என்றாள்.

''ஆமாம், ரேணு.''

''என் தூர உறவினர். முன்பே வந்துவிட்டார். எங்களுடன் தங்கியிருக்கிறார்.''

ரேணுகாவின் உறவினரா? ''பெயர்'' என்று நீலா கேட்டாள்.

''நஞ்சுண்டன்'' என்று தயக்கமின்றிப் பதில் வந்தது.

நீலாவின் சந்தேகம் தீர்ந்து விட்டது. சூழ்ச்சிக்காரன்! இவர்களுக்கு உறவினன் என்று வேடம் போட்டுக் கொண்டு புகுந்திருக்கிறான்! புரிந்து விட்டது.

சரி, அடுத்து என்ன?

அவளுக்கு யோசிக்க அவகாசம் கொடுத்த மாதிரியே ரேணுகா எழுந்து சென்றான் உள்ளே. நீலா மாடிப்படியை

நோக்கினாள். வீட்டின் கீழ்ப்புறத்தில் எங்கும் நஞ்சுண்டன் இருக்கவில்லை என்று தெரிந்தது. மாடியில்தான் இருப்பான் என்று ஊகித்தாள். திடீரென்று அவன் இறங்கி வந்து தன்னைப் பார்த்தால்...! கத்துவானா? பல்லைக் கடிப்பானா? போ வெளியே என்று ஜாடை காட்டுவானா? அல்லது ஒன்றுமே அறியாதவன் போல் பாசாங்கு பண்ணு வானா?

''நீலா, உன்னை என் அப்பா பார்க்க வேண்டுமாம். கூப்பிடுகிறார்.'' என்றார் உள்ளிருந்து வந்த ரேணுகா. ''என்ன, யோசனையில் ஆழ்ந்துவிட்டாய்?''

''ஒன்றுமில்லை. நஞ்சுண்டன் என்று எனக்குக்கூட ஒரு உறவினர் உண்டு'' என்றாள் நீலா. தோழியின் முகத்தை அவள் கண்கள் ஆராய்ந்தன. நீலாவின் மண வாழ்க்கை யைப் பற்றி அதிகம் பேருக்குத் தெரியாது. தானுண்டு, தன் வீடுண்டு வேலையுண்டு என்றிருந்தவள் அவள். ஆகவே, நஞ்சுண்டன் என்ற ஒருவனைக் கணவனாக ஏற்றுக் கொண்டு அவள் குடும்பம் நடத்தியவள் என்று நீலாவின் தோழிகள் பலரும் அறியமாட்டார்கள்.

ரேணுகாவும், ''உன் உறவினரான நஞ்சுண்டன் என்ன வேலை பார்க்கிறார்?'' என்று விசாரித்தாள்.

''போட்டோகிராபர்'' என்றாள் நீலா. ''அப்படி யானால் இவர் உன் உறவினரல்ல. இவர்...'' தன் வீட்டிலுள்ள நஞ்சுண்டன் துப்பறியும் வீரன் என்று சொல்ல நினைத்தாள் ரேணுகா. பிறகு கட்டுப்படுத்திக்கொண்டு, ''இவர் வேறு தொழில்'' என்றாள். ''அப்பா உன்னைப் பார்க்க விரும்புகிறார் என்று சொன்னேனே?'' எனப் பேச்சை மாற்றினாள்.

''இதோ'' என்று எழுந்தாள் நீலா. உறவினன் என்று கூறிப் புகுந்து கொண்ட நஞ்சுண்டன் தொழிலை மட்டும் உண்மையாகவா கூறியிருப்பான்? அதிலும் ஏதாவது பொய்தான் சொல்லியிருப்பான். இவன் அதே சூழ்ச்சிக்கார நஞ்சுண்டன் தான்...

குழந்தைப் பாண்டியன் படுத்திருக்கும் அறைக்குச் சென்றாள் நீலா. அதற்கு முன்பும் இரண்டொரு முறை அவரை அவள் பார்த்ததுண்டு. கண்ணியமான பெரிய மனிதர் என்று மதிப்பும் உண்டு. மூத்த மகளைப் பறிகொடுத்துவிட்டு எப்படித் துடிக்கிறாரோ, பாவம். அவரையும் பார்த்து ஆறுதல் கூற வேண்டாமா?

''இப்படி உட்காரம்மா, நீலா.'' கட்டிலுக்கு அருகில் போடப்பட்டிருந்த முக்காலியைக் காட்டினார். குழந்தைப் பாண்டியன்.

அருகில் அமர்ந்து கொண்டாள் நீலா. தோழியின் தந்தையைப் பரிதாபத்துடன் பார்த்தாள். ''உங்களுக்கு இவ்வளவு பெரிய கஷ்டம் வந்திருக்க வேண்டாம்'' என்றாள் ஆறுதலாக.

குழந்தைப் பாண்டியனின் இமையோரங்களில் நீர் பளபளத்தது.

மன உறுதியுடன் அதை அடக்கிக் கொண்டார். ''உன்னைப் போன்ற நல்ல பெண்கள் இருக்கும் வரையில் என் சுகுமாரியும் உயிருடன் இருப்பதாகவே நினைப் பேனம்மா. அதனால்தான் நீ வந்திருப்பதாகத் தெரிந்ததும் கூப்பிட்டனுப்பினேன்'' என்றார். ''அப்பா, மின்விசிறியை நிறுத்திவிடட்டுமா?'' என்று ரேணுகா கேட்டாள், தலைக்கு மேல் சுழன்று கொண்டிருந்த விசிறியைக் காட்டி.

''ஏனம்மா? இருக்கட்டுமே அது பாட்டுக்கு?''

''உங்களுக்குக் குளிராயிருக்கிறது போலிருக்கிறதே? இப்படிப் போர்த்துக் கொண்டிருக்கிறீர்களே?'' என்றாள் ரேணுகா.

நீலாவும் அதைக் கவனித்தாள். நெஞ்சுக்குக் கீழே, உள்ளங்கால் வரையில் கனமான போர்வையினால் மூடிக் கொண்டிருந்தார் குழந்தைப்பாண்டியன். சற்றே அசைந்து இயங்கக்கூடிய அவருடைய கைகள்கூட வெளியே தெரிய வில்லை. மூடப்பட்டிருந்தன.

குழந்தைப் பாண்டியன், ''குளிர் எதுவுமில்லை. சற்றுத் தொண்டை கட்டினமாதிரி இருந்தது. உடம்பு திறந்திருக்க வேண்டாம் என்று போர்த்துக் கொண்டேன்'' என்றார்.

''தொண்டைக் கட்டா? அம்மணி!'' என்று உடனே நர்ஸின் பக்கம் திரும்பினாள் ரேணுகா. ''ஒரு டேப்லட் கொடுத்திருக்கிறேன் அம்மா'' என்று மறுமொழி கொடுத்தாள் நர்ஸ்.

நீலாவின் மடியிலிருந்த கைப் பையைப் பார்த்தார். குழந்தைப் பாண்டியன். ''மிக அழகாயிருக்கிறதே உன் ஹாண்ட் பாக்! எங்கே, இப்படிக் கொடு பார்க்கலாம்'' என்றார்.

நீலாவுக்கு வெட்கமாயிருந்தது, அவரிடம் அதைக் காட்டவே. எப்படிப்பட்ட லட்சாதிபதி இவர்! அன்னக் காவடியின் ஐந்து ரூபாய் பிளாஸ்டிக் பையைப் பார்த்து ஆச்சரியப்படுகிறாரே!

போர்வைக்கு வெளியே எட்டிப் பார்த்த குழந்தைப் பாண்டியனின் கையில் ஹாண்ட் பாக்கை வைத்தாள்.

''நல்ல பை... இந்தக் காலத்தில் எப்படியெல்லாம் தயாரிக்கிறார்கள்! ஜிப் வேறே வைத்திருக்கிறானா...'' குழந்தைப் பாண்டியனின் பேச்சு கபடமற்ற குழந்தையைப் போலவே இருந்தது. நீலாவின் கைப்பையைப் போர்வைக்குள் கொண்டு சென்று இரண்டு கையாலும் அதை நெருடுகிறார் அவர். ''ப்ளாஸ்டிக்கில் ரொம்ப முன்னேறிவிட்டார்கள். உடம்பு மட்டும் நன்றாயிருந்தால நான் புதுப்பிஸினஸாகப் பிளாஸ்டிக் தொழிற்சாலைதான் ஆரம்பிப்பேன்'' சோகமான புன்னகையொன்று விரிந்தது அவருடைய உதடுகளில். ''ஹூம்... நான் எழுந்திருப்பது பகற்கனவுதான்...''

''ஏனப்பா அப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?'' என்று ரேணுகா கண்டித்தாள்.

''சுகுமாரி என்னைச் சீக்கிரமே கூப்பிட்டுக்கொண்டு விடுவாள்'' என்றார் குழந்தைப்பாண்டியன் கண்களை மூடியவாறு. ''இந்தாம்மா... எடுத்துக் கொள்.''

போர்வைக்கு வெளியே கைப் பை தலை நீட்டியது. நீலா அதைப் பெற்றுக்கொண்டாள். இந்த வீட்டுக்குள் மேலும் ஒருகணம் கூடத் தாமதிக்க அவளுக்கு விருப்ப மில்லை.

''நான் வருகிறேன், சார் வருகிறேன். ரேணுகா.'' புறப்பட்டாள்..

மாடிப்படியை நோக்கி அவள் கண் தாவியது. நஞ்சுண்டன் இருக்கிறானா இல்லையா என்றுகூடத் தெரிய வில்லை.

''கொஞ்சம் இரேன். கார் வெளியே போயிருக்கிறது. வந்ததும் அதில் போகலாம்.'' என்றாள் ரேணுகா.

''வேண்டாம் ரேணு. தாங்ஸ்'' என்று புறப்பட்டாள் நீலா. நாலைந்து வீடுகள் தாண்டியிருக்க மாட்டாள். அவள் பின்னால் யாரோ வருவது போல் அவளுக்குப் பட்டது. அவள் விரும்பிப் பார்க்கவில்லை. யாரும் அவளுக்குச் சொல்லவும் இல்லை. அபாயம் நெருங்கிக் கொண் டிருக்கிறது என்ற உள்ளுணர்வு விலங்குகளுக்குத்தான் ஏற்படுமென்பதில்லை! மனிதர்களுக்கும், சில வளைகளில் ஏற்படுவதுண்டு. நீலாவின் நல்ல காலம் இப்போது அவளுக்க அந்த அபாய உணர்வு உண்டாயிற்று. பட படக்கும் நெஞ்சை அழுத்திக் கொண்டாள். பக்கத்துச் சாரியிலுள்ள கடையைப் பார்க்கிற சாக்கில் தலையை லேசாகத் திருப்பினாள். விழியை வெகு சிரமப்பட்டுக் கடையோரத்துக்குச் செலுத்திக் கவனித்தாள்.

அபாயம் வந்து கொண்டுதானிருந்தது நஞ்சுண்டனின் உருவில்.

ஆக, அவன் பார்த்துக் கொண்டுதான் இருந்திருக் கிறான் - நீலா அந்த வீட்டுக்குள் வந்ததையெல்லாம். பிற்பாடு கவனித்துக்கொள்ளலாம். என்றுதான் அங்கே தலையைக் காட்டாமலே இருந்திருக்கிறான்.

நீலா வேகமாக நடந்தாள். அவனும் வேகமாகப் பின்தொடர்ந்து வருவதை அறிந்து கொண்டாள். எதற்காக அவன் தன்னைத் துரத்த வேண்டும்? 'இன்னொரு தரம் அங்கே வராதே' என்று எச்சரிப்பதற்காக இருக்குமோ? அவன் வெற்றிலைபாக்கு வைத்து அழைத்தால்கூட அவன்

திசையில் அவள் திரும்புவதாக இல்லையே? பின்னே ஏன் நிழல்போல் வந்து கொண்டிருக்கிறான்?

நீலாவுக்கு ஒரே வழிதான் தோன்றியது. ஒரு பஸ் கம்பத்தை அவள் நெருங்கிக் கொண்டிருந்தாள். பஸ் ஒன்று அங்கேயிருந்து புறப்பட்டுக் கொண்டிருந்தது. சரேலென அதில் தாவி ஏறிக்கொண்டாள். அங்குலம் கால் வழுக்கி யிருந்தால்கூட பஸ்ஸினடியில் சிக்கியிருப்பாள்.

''என்னம்மா, லேடீஸெல்லாம்கூட இப்படிச் செய்தீங்கன்னா நாங்கள் என்ன சொல்ல-செய்ய முடியும்?'' என்று கடிந்து கொண்டார் கண்டக்டர். ''சரி, சரி, எங்கே போகணும்? அதையாவது சொல்லுங்க.''

நீலாவின் பதைப்புச் சற்றுக் குறைந்தது. கண்ணாடி யின் பின்னால் கவனித்தாள். அவளுக்கும் நஞ்சுண்ட னுக்கும் உள்ள இடைவெளி அதிகப்பட்டுக் கொண்டே போயிற்று. அம்மாடி என்று ஆறுதலேற் பட்டது.

''இந்தப் பஸ் எங்கே போகிறது?'' என்று கண்டக்டரைக் கேட்டாள். ''சரிதான்! அதைக்கூடப் பார்க்காமல் தான் அவ்வளவு அவசரமாய் ஏறினீங்களா?'' கண்டக்டரின் கேலியில் பிரயாணிகள் சிலர் சிரித்தார்கள். ''பாரீஸ் போகிறதம்மா.'' ''ஒரு பாரீஸ் கொடுங்கள்.'' கைப்பையைத் திறந்தாள் நீலா.

மறுவினாடி அவள் இருதயம் படக்கென்று நின்றது. என்ன இது? நம் ஹாண்ட் பாக்தானா? திரும்பிப் பார்த்தாள். சந்தேகமில்லை. அவளுடையவதுதான்.

இதற்குள் கண்டக்டர் அவளைப் பக்காமோசடிக்காரி என்றே தீர்மானம் பண்ணிவிட்டார். டிக்கெட்டைக் கிழித்து

வேறே ஆகிவிட்டதால் எரிச்சல். ''என்னம்மா, பணம் எடுத்து வரல்லியா?'' என்றார்.

நீலா சமாளித்துக் கொண்டாள். ''இல்லை, இல்லை, இதோ'' என்று இருபது பைசா எடுத்துக் கொடுத்தாள். டிக்கெட்டைப் பெற்றுக் கொண்டாள். உஸ் என்று பெருமூச்சுடன் கண்டக்டர் நகர்ந்தார். நீலா வெறிக்க வெறிக்கக் கைப்பையின் திறந்த வாயையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதனுள் இருந்த காகிதத் துண்டுதான் அவளை அப்படி அதிர்ச்சியடையச் செய்தது. என்றைக்கும் எவருக்கும் எந்தக் கடிதமும் எழுதியவள் அல்ல அவள். ஆகவே அவள் எழுதி வைத்தது அல்ல அந்த துண்டுக் காகிதம். அதிலும் இன்று காலையில் புறப்படுகிறபோது பையை நன்றாகத் திறந்தே பார்த்திருந்தாள். உட்புறமிருந்த பிளாஸ்டிக் சிறிது கிழிந்து அதற்குள் இரண்டொரு நாணயங்கள் சிக்கிக் கொண்டிருந்தன. அவைகளை வெளியே எடுப்பதற்காக நன்றாகத் தட்டிக் கொட்டினாள். அப்போதுகூட எதுவும் இதிலே இருக்கவில்லை.

இப்போது...? நீலா பெண்களுக்கான ஸீட்டில் உட்கார்ந்திருந்தாள். அருகில் யாரும் இல்லை. கண்டக்டர் கூட, தகரப்பட்டையிலிருந்து கட்டம் போட்ட காகிதத்தில் டிக்கெட் நம்பர்களைக் குறித்துக் கொண்டிருந்தார்.

மெல்ல வெளியிலெடுத்தாள். அந்தக் காகிதத்தை. அது நாலாக மடிக்கப்பட்டிருந்தது.

கோணல் மாணலான குண்டு குண்டான கையெழுத்தில் முகவரி எழுதப்பட்டிருந்தது. பள்ளியில் ஆசிரியையாக அனுபவம் பெற்ற நீலாவுக்குத் தெரியும், இது ஒரு குழந்தையின் கையெழுத்துத்தான். அல்லது-

கையைச் சரியாகப் பிடிக்க இயலாத நிலையில் இருக்கும் நோயாளியினுடைய்து.

நீலாவுக்குத் தேகம் சிலிர்த்து அடங்கியது. குழந்தைப் பாண்டியனை நினைத்துக் கொண்டதும். அவர்தான்! அவர்தான் இதை எழுதி வைத்திருக்க வேண்டும்! மடிக்கப் பட்டிருந்த தாளின் மீது எழுதப்பட்டுள்ள வாக்கியங்களைப் படித்தாள்.

'தயவு செய்து தபால் உறையில் வைத்துத் தபாலில் சேர்ப்பித்து விடவும்' என்று மடிப்பின் வெளிப்புறத்தில் எழுதியிருந்தார். குழந்தைப்பாண்டியன்.

அதன்கீழே -

''புருஷோத்தமன், பட்டாமணியம், பாபநாசம் கிராமம், தஞ்சாவூர் மாவட்டம்'' என்று அனுப்பவேண்டிய முகவரி காணப்பட்டது. சற்றுக் கோணலாகக் காகிதம் மடிக்கப் பட்டிருந்தது.

பிரமிப்பு நீலாவின் மூச்சை அடைத்துக் கொண்டிருந்தது.

எவருக்கும் தெரியாமல் இத்தனை காரியமும் செய்ய என்ன பாடுபட்டிருப்பார் குழந்தைப் பாண்டியன்! கண்ணைத் தாழ்த்தி, சரியாய் எழுதியிருக்கிறோமா என்று பார்க்கக்கூட அவரால் முடியாதே! வெறும் உத்தேசத்தில் அல்லவா இதை எழுதியிருக்கிறார்! யாரிடம், எப்படிக் காகிதமும் பேனாவும் பெற்றாரோ!

பெற்ற மகளை நம்பாமல், பேணிப் பாதுகாக்கும் நர்ஸ்களை நம்பாமல் - நம்பகமான ஒருவர் வராமல் போக மாட்டார் என்றல்லவா பொறுமையுடன் காத்திருக்கிறார்!

அந்த நம்பகமான நபர் தானாக அமைந்ததில் நீலாவுக்குப் பெருமையாயிருந்தது.

'தயவு செய்து இதைத் தபாலில் சேர்ப்பித்து விடவும்' என்ற வேண்டுகோளை உடனேயே நிறைவேற்றத் துடித்தாள் நீலா. யார் அந்தப் பாபனாசம் பட்டாமணியம் என்று அவள் யோசிக்கவில்லை. ஒரே ஒரு மடிப்பைப் பிரித்தால் போதும். காகிதத்தில் என்ன செய்தி போகிறது என்று அறிந்து கொள்ளலாம். அதற்கும் அவள் ஆசைப்படவில்லை.

''ஸ்டாப்பிங் ஹோல்டான்!'' என்று உடனே இறங்கிக் கொண்டாள்.

சதர்ன் ரயில்வே அலுவலகத்தின் அருகிலிருந்த தபால் நிலையத்தை நோக்கி விரைந்து நடந்தாள். நிலையத்தை அடைந்து, தபால் உறை வாங்கி, விலாசத்தை எழுதிக் காகிதத்தை வைத்து - தற்செயலாகத் தலை நிமிர்ந்தவள், தபால் நிலையத்தின் வாயிலில் நஞ்சுண்டன் நிற்பதைக் கண்டாள். அப்போதுதான் ஒரு காலி டாக்ஸியும் கிளம்பியது. இத்தனை தூரமும் அவன் தன்னைத்தான் டாக்ஸியில் பின்தொடர்ந்து வந்திருக்கிறான்!

அதே வினாடியில், வாசலிலேயே தபால் பெட்டி இருப்பதைக் கண்டாள். மின்னல் புகுந்த மாதிரி அந்தக் கடிதம், பெட்டிக்குள் நுழைந்துவிட்டது.

''யாருக்குக் கடிதம்?'' என்றான் அவன். நீலாவுக்கு அவனிடம் ஏனோ பயம் ஏற்படவில்லை இப்போது. ரமணன் கொடுத்த தைரியமோ என்னவோ. ''உன்னிடம் சொல்லத் தயாராயில்லை'' என்றாள்.

''என்ன எழுதியிருக்கிறாய்?''

'சொல்லமாட்டேன்.''

''நீலா! எக்கேடோ கெட்டுப் போ என்று உனக்குத் தலை முழுகிவிட்டேன்.''

''ரொம்ப நன்றி. மிக்க மகிழ்ச்சி.''

''ஆனால் நீ என் விஷயத்தில் தலையிடுவதை நிறுத்த வில்லை. யார்யாரோ ஆளை அமர்த்துகிறாய் எனக்கு எதிராக. ஒற்றை வாடை போட்டோ ஸ்டூடியோவுக்கு வந்து, என் பிலிம் ரோல்களைத் திருடிக் கொண்டு சென்றவன் உன் ஆள்தான். தெரியாதென்று நினைக்காதே.''

நீலா புன்னகை செய்தாள். 'யாரோ ஆள்' அல்ல, ரமணன் என்கிற புகழ் பெற்ற துப்பறியும் வீரனாக்கும் என்று சொல்ல எண்ணினாள். ரமணனின் எச்சரிக்கை ஞாபகம் வந்தது. பேசாதிருந்தாள்.

நஞ்சுண்டன் பல்லைக் கடித்தபடி பேசினான்: ''அந்தப் பிலிம் ரோல்களைப் போலப் பல ரோல் என்னிடம் இருக்கிறது, நீலா. இன்னொரு தரம் குழந்தைப் பாண்டியனின் வீட்டுக்கு நீ வந்தாயோ - உன் தலைமை ஆசிரியருக்கு ஒரு போட்டோ போகும் ஆசிரியை மார்களுக்கு ஒவ்வொன்று போகும். முக்கியமான மாணவி களுக்கெல்லாம் போகும்...''

நீலாவின் உதடுகள் துடித்தன. முகம் சிவந்தது. ''குழந்தைப்பாண்டியனின் வீட்டுக்கு நான் வரவில்லை. வர மாட்டேன். நீ இருக்கும் திசையில் தலைவைத்துப் படுக்கக்கூட மாட்டேன். போதுமா?''

''சபாஷ்! பிழைக்கத் தெரிந்தவள்!''

''ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள்.''

''என்ன?''

''ரேணுகா நல்ல பெண். அவர்கள் குடும்பத்தில் ஒரு விபத்து நேரிட்டது போதும். ரேணுகாவை நீ... நீ... தப்பான வழியில் இழுத்துவிடாதே. என் வாழ்வைக் கெடுத்தமாதிரி. அவள் வாழ்க்கையையும் கெடுத்து விடாதே!''

நஞ்சுண்டன் அலட்சியமாகச் சிரித்துவிட்டு, குப்பென்று சிகரெட் புகையை அவள் முகத்தில் ஊதினான்.

நீலா அவசர அவசரமாக ஓடி மறைந்தாள். நஞ்சுண்டன். காலின் கீழ் சிகரெட்டைப் போட்டு மிதித்தான். அலட்சியமாகத் திரும்பியவன் -

சுவரின் மறைவிலிருந்து வரும் இன்னொருத்தியைக் கண்டான்.

ரேணுகா!




திக்கென்றுதான் இருந்தது நஞ்சுண்டனுக்கு. சுவர் மறைவிலிருந்து ரேணுகா வருவாளென்று அவன் துளியம் எதிர்பார்க்கவில்லை. தற்செயலாக இங்கே வந்தாளா? அல்லது வேண்டுமென்றே பின்தொடர்ந்தாளா? நீலா வுடன் தான் பேசியது மொத்தத்தையும் கேட்டிருப்பாளா? அல்லது எதுவும் காதில் விழுந்திருக்காதா?

இவ்வளவு குழப்பங்களையும் மறைத்துக் கொண்டான் முகத்திலிருந்து... ''ஹலோ!'' என்று விளித்தான் புன்னகை யுடன்.

ரேணுகாவின் முகம் மரத்தில் செய்யப்பட்ட மாதிரி இருந்தது. சுற்றி வளைத்துப் பேசவில்லை அவள். ''நீலா உங்களுக்கு என்ன ஆகவேண்டும்?'' என்று வெடுக்கெனக் கேட்டாள். ''ஓ, அதைக் கவனித்து விட்டாயா?'' தலையைக் குனிந்து கொண்டான் நஞ்சுண்டன். ''உன்னிடம் உண்மையைச் சொல்லாதது தப்புத்தான், ரேணுகா.''

என்ன உண்மை?''

''நீலா என் தங்கை என்று.''

''நீலா உங்கள்...?''

''தங்கை என்றேன். உன் பள்ளிக்கூடத்தில்தான் அவளும் ஆசிரியையாக இருக்கிறாள். என்று எனக்குத் தெரியும். நம் வீட்டுக்கு அவளை நீ அழைத்து வந்த போதே கவனித்தேன். அவள் முகத்தில் விழிக்கக் கூடாதென்றுதான் மாடியிலேயே தங்கியிருந்தேன். அவள் புறப்பட்டுப் போன பிறகு கீழே வந்தேன்.''

''அடடே! அவள்மேல் என்ன அத்தனை வெறுப்பு?''

ரேணுகா நின்ற விதம், தலையைச் சாய்த்துக் கொண்டிருந்த தினுசு, கேள்வியைக் கேட்ட முறை - எல்லாம் அவனைக் கிண்டல் செய்வது போலிருந்தால். நஞ்சுண்டன் அதை உணர்ந்து கொண்டான். ''ரேணுகா, நான் சொல்கிற எதையும் நீ நம்பத் தயாராயில்லை. உன்னிடம் ஏன் பேச்சை வளர்த்த வேண்டும்?'' ''சே, சே! யார் சொன்னது நான் உங்கள் பேச்சை நம்பவில்லை

என்று? உங்களிடம் விளக்கம் கேட்க வேண்டுமென்று தானே இத்தனை தூரம் பின் தொடர்ந்து வந்திருக்கிறேன்?''

''விளக்கமா? எதற்கு விளக்கம்?''

''நீலாவுக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு என்று தான். அங்கேயே நீலா துருவித் துருவிக் கேட்டாள், நஞ்சுண்டன் என்ற பெயரை நான் குறிப்பிட்டதும். அதே போல், அவள் புறப்பட்டதுமே நீங்கள் அவசர அவசரமாய் அவளைப் பின்தொடர்ந்தீர்கள். சரி, இதை இப்படியே விடக்கூடாது என்றுதான் நானும் பின்னாலேயே வந்தேன்.''

''ரொம்ப சந்தோஷம். நீலாவைப் பற்றி உனக்குத் தெரியவேண்டும்? அவ்வளவுதானே? அவள் என் தங்கை.''

''அதுதான் சொல்லிவிட்டீர்களே?''

''எங்கள் அப்பா அம்மாவெல்லாம் பதினைந்து வருஷத்துக்கு முன்பே கண்ணை மூடிவிட்டார்கள். நான்தான் இவளைக் கண்ணும் கருத்துமாய்க் காப்பாற்றி வந்தேன். அப்புறம் எனக்கு ஒரு நாள் துரோகம் பண்ணி விட்டாள்.''

''சே, சே! என்ன துரோகம்?''

''காதல் என்கிற பெயரில் எவனோ ஓர் அயோக்கியனுடன் சிநேகம் ஏற்படுத்திக் கொண்டாள். அவன் மோசமானவன், வஞ்சகன் என்று நான் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கேட்கவில்லை. ஒருநாள் அவனுடன் வீட்டைவிட்டே ஓடிவிட்டாள்.''

''அடப் பாவமே!''

''நான் எச்சரிக்கை செய்த மாதிரியே ஆயிற்று நீலாவின் வாழ்க்கை. நாலு நாள்கூட அவளுடன் வாழவில்லை அந்த அயோக்கியன். கைவிட்டுவிட்டு ஓடி விட்டான். அதன் பிறகாவது நீலா என்னிடம் திரும்பலாமில்லையா? இல்லை. நீலாவுக்கு வறட்டு ஜம்பம் ரொம்ப ஜாஸ்தி. என் வீட்டுக்குள் மறுபடி நுழையத் தயாராயில்லை என்று சொல்லிவிட்டாள். ரேணுகா, அதன்பின் அவள் வாழ்க்கையில் நடந்ததை யெல்லாம் எப்படிச் சொல்வேன்? ஒரு கௌரவமான பெண்ணின் காதில் விழக்கூடிய தகவல்கள் அல்ல அதெல்லாம்.'' நஞ்சுண்டன் கைக் குட்டையினால் கண்ணைத் துடைத்துக் கொண்டான். ''பரவாயில்லை, சொல்லுங்கள்.''

''நீலாவைப் பார்த்தாலே தெரியவில்லையா? அழகிருக்கிறது, இளமை இருக்கிறது. வயிற்றுப் பிழைப்பா ஒரு கஷ்டம்!''

''ஐயையோ!'' என்றாள் ரேணுகா.

''ஆமாம். நம்ப முடியாதுதான். ஆனால் உண்மை. அதனால்தான் இனி அவள் முகத்தில் நானும் விழிப்ப தில்லை என்று தீர்மானம் பண்ணிவிட்டேன். உன் போன்ற நல்ல பெண்ணிடம் அவளுக்குச் சினேகம் இருப்பது மகா தவறு. உன்னை எப்படியெல்லாம் கெடுப்பாளே என்று நினைத்தாலே நடுக்கமாயிருக்கிறது!''

ரேணுகா சிரித்தாள். ''நான் என்ன சின்னப் பாப்பாவா, அவ்வளவு சுலபத்தில் கெட்டுவிட?''

''இல்லை, ரேணுகா. உனக்கு அவளைப் பற்றித் தெரியாது ஒன்றுமே தெரியாதவள் மாதிரியும், உலகம்

மொத்தமும் தனக்கு எதிராக சூழ்ச்சி செய்கிறதென்றும் அருமையாக நடிப்பாள். சற்று முன்தான் பார்த்தாயே? உன் வீட்டுக்கு அவள் வரக்கூடாதென்று எச்சரிக்கை செய்தேன். நான் உன் வீட்டில் இருக்கக்கூடாதென்று என்னைத் திருப்பி எச்சரிக்கை செய்கிறாள்! எப்படி?''

''சுத்த மோசம்தான். ஆனால் நீங்கள் புகைப்படம் என்று...''

''அதுவா?'' நஞ்சுண்டன் சிகரெட் பற்ற வைத்துக்கொண்டு சிரித்தான். கடகடவென்ற சிரிப்பைப் போலவே, சிகரெட் புகையும் தத்திக் தத்தி அவன் வாயிலிருந்து புறப்பட்டது. ''நீலா பல பேரிடம் தனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். ஆனால், முதல் முதலில் ஓர் அயோக்கியனுடன் ஓடினாளே, அவனும் இவளும் சேர்ந்து இருக்கிற புகைப்படமொன்று என்னிடம் இருக்கிறது. உன் வீட்டுக்கு மறுபடியும் வந்தாலும் சரி, உன்னுடன் நெருக்கமாய்ச் சிநேகம் வைத்துக் கொண்டாலும் சரி, அந்தப் புகைப்படத்தைப் பல பேருக்கு அனுப்பி அவள் மானத்தை வாங்கிவிடுவேன் என்று எச்சரிக்கை செய்தேன். அது ஒன்றுக்குத் தான் அவளும் பயப்பட்டு, பேசாமல் போகிறாள்.''

''ஓகோ.'' ரேணுகா கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டாள். ''மணி ஆகிறது. எனக்குச் சைனா பாஜாரில் கொஞ்சம் ஷாப்பிங் வேலை இருக்கிறது நான் வரட்டுமா?''

இருவரும் எதிரெதிர் திசையில் பிரிந்தார்கள்.

பாய்க்கடைப் பக்கமாயிருந்த தெருவில் திரும்பினாள் ரேணுகா. அவள் உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன.

இருதயம் படபடத்துக் கொண்டிருந்தது. உதட்டை அடிக்கடி கடித்துக் கொண்டாள். உறுதியுடன் தீவிரத்துடன் வேகமாய நடந்தாள். ஒரு டெலிபோன் கூண்டு வந்தது. நின்றாள் சட்டென. கைப் பையைத் திறந்து பார்த்தாள். இரண்டு பத்துப் பைசாக் காசுகள் இருந்தன. கதவைத் திறந்தாள்.

நுழையப் போனபோது இடையில் ஒருவன் குறுக்கிட்டான் கூண்டுக்குள் அவள் நுழைய முடியாதபடி வழிமறித்தான்.

''யாருக்கு டெலிபோன் செய்யப் போகிறாய், ரேணுகா?'' ''வழியைவிடு நஞ்சுண்டன்'' குரல் ரொம்ப தூரம் மாறிவிட்டதே.

''ஆமே ரொம்பத் தூரம் மாறிவிட்டேன். நீ அளந்த கட்டுக் கதையை யெல்லாம் உண்மை என்று நம்புகிற ஏமாளி அல்ல இந்த ரேணுகா.''

''நீ நம்பிவிட்டாய் என்று நம்புகிற முட்டாளும் இல்லை, இந்த நஞ்சுண்டன். அடுத்தபடி நீ என்ன செய்யப் போகிறாய் என்று பார்ப்பதற்காகத்தான வந்தேன். யாரைக் கூப்பிடப் போகிறாய்?''

''உன்னால் ஊகிக்க முடியவில்லையா?'' ஏளனமாகச் சிரித்தாள் ரேணுகா. ''நீ யாருடைய பெயரில் என்னை ஏமாற்றினாயோ, அவரை.''

''ரமணனா?''

''அவரையேதான்.''

''ஓ, கூப்பிடு, கூப்பிடு, தாராளமாய்க் கூப்பிடு.'' நகர்ந்து வழிவிட்டான் நஞ்சுண்டன். ''ஆனால் ரமணனுடன் பேசி முடித்ததும் வைத்துவிடாதே. நானும் கொஞ்சம் அவனிடம் பேசவேண்டும்.''

டைரக்டரியைப் புரட்டி ரமணனின் நம்பரைத் தேடினாள் ரேணுகா. ''நீ பேச வேண்டுமா? எதைப்பற்றி?''

சுகுமாரியின் கொலையப் பற்றித் தான்.''

டயலைச் சுழற்றினாள் ரேணுகா. ''அக்காவின் கொலையைப் பற்றியா? ரமணனிடம் என்ன சொல்லப் போகிறாய்?''

''பல விஷயங்கள் இருக்கிறது. ஆனால் ரமணன் தான், பாவம், ஊரிலேயே இல்லை. கல்கத்தா போயிருக் கிறான். ஒரு மாதம் இரண்டு மாதம் ஆகுமாம் திரும்பி வர. ஊரில் இருந்தால் உன்னை முந்திக் கொண்டு நானே அவனுக்கு எவ்வளவு தகவல்கள் சொல்வேன், தெரியுமா?''

மறுமுனையில் கிர் கிர்ரென்று மணி அடித்துக் கொண்டிருந்தது. எடுப்பரைக் காணோம்.

''உதாரணத்துக்கு ஒன்று சொல்வேன்.'' என்றாள் ரேணுகா, கேலியாக.

''சுகுமாரியைக் கொலை செய்தவன் பாலசந்தர் தான் என்பதற்கு ஆதாரம் வைத்திருக்கிறேனே, அதை...''

''நஞ்சுண்டன்!'' நெருப்புத் துண்டம் போல் ஜொலித்தது ரேணுகாவின் கண் நஞ்சுண்டன் தன் காற்

சட்டைப் பையிலிருந்து ஒரு தாளை எடுத்தான். நான்காக மடிக்கப்பட்ட தினசரி அது. ''சாயந்தரப் பேப்பர். நீ இன்னும் பார்க்கவில்லையோ?''

கலவரம் ரேணுகாவின் முகத்தில் இருளடித்தது. ''என்ன... பேப்பரில்...'' என்று தடுமாறினாள். நஞ்சுண்டன் செய்தித்தாளைப் பிரித்தான். இரண்டாம் பக்கத்தின் கீழே, சுகுமாரி கொலை' என்ற சிறிய தலைப்பின் கீழ், 'டாக்டர் பாலசந்தர் கைது!' என்று பெரிய எழுத்தில் செய்தி வெளியிடப்பட்டிருந்தது.

''முழுக்கப் படித்துப் பார்'' என்றான் நஞ்சுண்டன்.

எழுத்துக்களின் மீது கண்கள் ஓடின. ஆனால் மனத்தில் விவரங்கள் படியவில்லை. பாலசந்தர் கைது... பாலசந்தர் கைது... இதுவேதான் அவளை உலுக்கிப் போட்டது. ''இருக்காது! ஒரு நாளும் இருக்காது'' என்றாள், தான் நிற்பது நடுச்சாலை என்பதையும் மறந்து.

பேப்பரை அவளிடமிருந்து வாங்கினான் நஞ்சுண்டன். நிதானமாக மடித்து, மீண்டும் காற்சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டான்.

''பதறாதே, ரேணுகா. உன்னால் படிக்க முடிய வில்லை. நான் சொல்கிறேன் விவரத்தை. சுகுமாரி கொலையான அதே சமயத்தில் பாலசந்தரும் வீட்டில் இல்லையாம். இரண்டு பேருக்கும் விரோதம் உண்டாம். அதைப் பற்றிப் போலீசுக்கு மொட்டைக் கடிதம் வந்ததாம்...''

கனல் தெறித்தது ரேணுகாவின் பேச்சில்: ''மொட்டைக் கடிதமா? வேறு யார்? நீதான் எழுதிப் போட்டிருப்பாய்! நீதானே? உண்டா இல்லையா?''

அவள் கையை மெதுவாய் விலக்கினான் நஞ்சுண்டன். "மேலே கேள். போலீசார் பாலசந்தரின் வீட்டையும் நர்ஸிங் ஹோமையும் சோதனை போட்டார் களாம். கொலையுண்ட சுகுமாரியின் கைப் பை, உடை, வளையல், இன்னும் சில பொருள்கள் கிடைத்தனவாம்."

"பொய்! பொய்!" என்றாள் ரேணுகா ஆவேசமாக. "அவர் ஒரு பாவமும் அறியமாட்டார். எல்லாம் நீதான் அங்கே கொண்டுபோய் வைத்திருக்கிறாய்!"

குரூரமாக இளித்தான் நஞ்சுண்டன். "ஒப்புக் கொள்கிறேன் ரேணுகா. ஆனால் இன்னுமொரு பெரிய தடயம் என்னிடம் இருக்கிறது. போலீசுக்கு பாலசந்தரின் மீது பலத்த சந்தேகம் தான் இப்போது ஏற்பட்டிருக்கிறது. அந்தத் தடயத்தையும் வெளியிட்டேனோ, விசாரணை கிசாரணை எதுவும் வேண்டாம். நேரே தூக்கு மேடைதான் உன் காதலனுக்கு."

விக்கித்து மூச்சடைக்கப் பின்வாங்கினாள் ரேணுகா. "பேரமா பண்ணுகிறாய்? சரி, உன்னைப் பற்றி நான் யாரிடமும் சொல்லாதிருக்கிறேன். நீ வைத்திருக்கும் தடயத்தைப் பற்றிச் சொல்லு."

"ரேணுகா! ஆதாரமில்லாமல் அடிமடையன்கூட எதையும் செய்யமாட்டான். எவ்வளவு பெரிய உதவியை எவ்வளவு சாதாரணமாய்க் கேட்கிறாய்?"

"சாதாரணமாய்க் கேட்கவில்லையே? நீ ஒரு மோசக் காரன், ரமணன் என்று பெயர் சொல்லிக் கொண் டிருக்கிறாய் என்பதையெல்லாம் மறைத்து வைக்கிறேனே போதாதா?"

''போதாது.''

''பின்னே?''

''நான் கேட்பது லட்சக்கணக்கான மதிப்புள்ள பொருள் அது கைக்குக் கிடைத்ததும் போய்விடுகிறேன்.''

''வைர...'

''அதேதான்!'' என்றான் நஞ்சுண்டன்.

''வைர முருகனைத்தான் கேட்கிறேன். உனக்குத் தெரியாமல் அது வெளியே போயிருக்க நியாயமில்லை...''

''ஐயையோ! சத்தியமாய் எனக்குத் தெரியாது. நானும் நீயும் சேர்ந்துதானே கவனித்தோம் அது காணவில்லை என்பதை?''

''இருக்கலாம். அப்படி நீ நாடகமாடவில்லை என்று நான் எப்படி நம்புவது?''

நீதான் நாடகமாடுகிறவன்! மோசக்காரன்! அடுத்துக் கெடுப்பவன்! நயவஞ்சகன்!''

ரேணுகா திட்டத் திட்ட, புன் சிரிப்புடன் அதைக் கேட்டவாறியிருந்தான் நஞ்சுண்டன். கடைசியில், ''முடித்து விட்டாயா? இல்லை, இன்னும் பாக்கி இருக்கிறதா?'' என்றான் அமைதியாக. ''உன் உள்ளம் கவர் காதலன்தான் உணர்ச்சி வசப்படுகிறவன். அனாவசியமாக வார்த்தையை இறைத்து விட்டு, பூமியில் ஒரு காலும், தூக்குமேடையில் ஒரு காலுமாய் நிற்கிறான். நீயாவது அவனைக் காப்பாற்றுவாய் என்று பார்த்தால், நீயும் அவன் வழியிலேயே போகிறாயே?''

பூக்கடையின் பக்கமாக அவர்கள் நடந்து கொண்டிருந்தார்கள். ஒரு விளக்குக் கம்பத்தின் மீது சாய்ந்தாற் போல் நின்றுகொண்டாள் ரேணுகா. ''என்னை என்னதான் செய்யச் சொல்கிறாய்?'' என்றாள் சலிப்புடன்.

''முன்பே சொல்லிவிட்டேனே? அந்த வைர முருகன் உனக்குத் தெரியாமல் வெளியே போயிருக்குமென்று நான் நம்பத் தயாராயில்லை. அப்படியே போயிருந்தாலும் அதைக் கண்டுபிடித்து எடுத்து வந்து கொடு. அதுவரை நான் பொறுத்திருக்கிறேன். நீ சமர்த்துப் பெண். என்னைப் பற்றி அனாவசியமான தகவல்களை அனாவசியமான பேர்களிடமெல்லாம் பேசி, உன் காதலனின் கழுத்தைச் சுற்றியிருக்கிற கயிற்றை இறுக்கமாட்டாய். இல்லையா?''

வெறுப்புடன் பேசினாள். ரேணுகா: ''வைர முருகனைத் தேடி எடுத்துவந்து, உன்னிடம் கொடுத்து, என் அப்பாவுக்குத் துரோகம் செய்யச் சொல்கிறாய். நான் அப்படிச் செய்வதாகவே வைத்துக்கொள். நீ சும்மா மிரட்டவில்லை என்பது என்ன நிச்சயம்?''

''ஓ!'' என்று புருவத்தை உயர்த்தினான் நஞ்சுண்டன். ''அதாவது, நிஜமாகவே என்னிடம் பாலசந்தருக்கு எதிரான தடயம் இருக்கிறதா இல்லையா என்று சந்தேகப் படுகிறாய்? அப்படித்தானே? என்னால் நிரூபிக்க முடியும். ஆனால் அது ஒரு விஷப் பரீட்சை. பரவாயில்லை. என்கிறாயா?''

அவன் பேச்சிலிருந்து ரேணுகாவினால் எதுவும் ஊகிக்க முடியவில்லை. அச்சம் அவள் நெஞ்சை அடைத்தது. என்ன செய்து தன் காதலனை இன்னும் பெரிய ஆபத்தில் சிக்கவைத்து விடுவானோ என்று அவள்

நடுங்கினாள். அவள் முகம் பயத்தினால் வெளிறியது. ''சரி, வேண்டாம். நான் உன் வார்த்தையை நம்புகிறேன். அந்த வைர முருகனைக் கொண்டுவந்து உன்னிடம் சேர்ப் பித்ததும் உன் வார்த்தையைக் காப்பாற்று, போதும்.''

''அவ்வளவு சுலபமாய்ப் பேரம் முடிந்துவிடாது ரேணுகா'' என்றான் நஞ்சுண்டன். ''உன் இஷ்டப்படி நீ அவகாசம் எடுத்துக்கொண்டால் என்ன ஆவது? அதற்குள் போதுமான அளவு சந்தேகம் ருசுவாகவில்லை என்று பாலசந்தரை விடுவித்துவிடுவார்கள். அதன் பிறகு நான் அடியைப் பிடிடா என்று ஆரம்பிக்க முடியுமா? அதனால்...''

''அதனால்?''

''ஒரு கெடு வைத்துக்கொள்வோம் - டயம் லிமிட். ஒரு மாதம் அவகாசம் தருகிறேன் உனக்கு.''

''சரி'' ரேணுகா திரும்பியும் பாராமல் வெகு வேகமாய் நடந்தாள்.

அவள் ரத்தம் கொதித்துக் கொண்டிருந்தது. எத்தனை முட்டாள்தனமாய் ரமணன் என்றெண்ணி, இவனை அழைத்துக்கொண்டு வந்தோம் வீட்டுக்கு? பாம்புக்குப் பால் வார்த்த மாதிரி இவனை வீட்டோடு வைத்துக் கொண்டல்லவா ஆதரித்தோம்! இவனேகூட அக்காவைக் கொலை செய்திருக்கமாட்டானா, என்ன? ஐயோ, இதை யெல்லாம் யாரிடம் போய்ச் சொல்வது? என் கால்களுக்கு விலங்கல்லவா போடப்பட்டிருக்கிறது!

இப்படித் தனக்குத்தானே புலம்பியவளாய். நடந்தாள் ரேணுகா. தன்னையறியாமலே 'பெனிடென்

ஷிய'ரிக்கு அருகே வந்துவிட்டதைப் பிறகுதான் கவனித் தாள்.

சிறைக் கைதிகளைச் சந்தித்துவிட்டுச் சில பேர் திரும்பிக் கொண்டிருந்தார்கள். அப்போது.

பாலசந்தர்! பாலசந்தர்! நீங்களா கொலையாளி! இருக்க முடியாது.

ரேணுகாவுக்கு ஒரு எண்ணம் எழுந்தது. பாலசந்ரைச் சந்தித்துப் பேசினால் என்ன?

தகுந்த அதிகாரியிடம் விண்ணப்பித்துக் கொண்டாள். ஆனால் அதிகாரி உதட்டைப் பிதுக்கினார். பாலசந்தர் யாரையும் சந்திக்க மறுக்கிறானாம். ''ஜாமீனில் விடுதலை யாவதற்குக்கூட அவர் முயலவில்லை. அவருக்குத் தெரிந்த சிலர் வக்கீலை நியமிப்பதற்காகச் சற்று முன்வந்தார்கள். தனக்கு எவ்வித ஜாமீனும் வேண்டாமென்று சொல்லி யனுப்பிவிட்டார்.'' என்றார்.

பாலசந்தரின் மனக் கசப்பு. ரேணுகாவுக்கு நன்கு புரிந்தது. ''எதற்கும் தயவு பண்ணி இன்னொருமுறை முயன்று பாருங்கள். என் பெயரைச் சொல்லுங்கள் - ரேணுகா என்று. பார்க்கச் சம்மதிப்பார்.'' என்று மன்றாடி னாள். அதிகாரி எழுந்து சென்று சற்றைக்கெல்லாம் திரும்பினார். ''பார்க்கச் சம்மதிக்கிறார். வாருங்கள்.'' என்றார்.

மகிழ்ச்சியுடன் அவரைப் பின்தொடர்ந்தாள் ரேணுகா. ஆனால் அப்படியொரு முகத்திலடித்தாற் போன்ற வரவேற்பை எதிர்பார்க்கவில்லை.

லாக்கப்பில் இருந்த பாலசந்தர் ''திருப்தியாகி விட்டதா ரேணுகா?'' என்று கத்தினான்.

''திருப்தியாக... நான்... சந்தர்!...'' திக்கித் திணறி னாள் ரேணுகா.

''ஏன்? உன் காரியம்தானே இவ்வளவும்? போலீசுக்கு என்னைப் பற்றி எழுதிப் போட்டவள் நீதானே?''

''ஐயையோ! என்ன அபாண்டம் சந்தர்!'' என்று வீரிட்டாள் ரேணுகா. ''நாடகமாடாதே! எனக்கு எல்லாம் தெரியும். உன்னைத் தவிர வேறு யாரிடமும், நான் சுகுமாரியிடம் எனக்கு உள்ள ஆத்திரத்தைப் பற்றிப் பேசவில்லை. இனியும் பேசப்போவதில்லை. உலகத்தின் மீதே நம்பிக்கை இழந்துவிட்டேன்...''

''இல்லை, சந்தர்... அப்படிச் சொல்லாதீர்கள்...'' ரேணுகா விசும்பினாள்.

''சுகுமாரி கொலையுண்ட தினத்தன்று நான் எங்கே போனேன், என்ன செய்தேன் - இதையே திருப்பித் திருப்பிக் கேட்கிறார்கள். நான் சொல்லப் போவதில்லை. வாயே திறக்கப் போவதில்லை. நீயே என் மீது சந்தேகப்பட்டு, போலீசுக்குத் தெரிவித்த பிறகு, நான் உயிர் வாழ விரும்பவில்லை. தூக்குக்கே போனாலும் சரி, என்னிடமிருந்து எவராலும் ஒரு வார்த்தையைக் கூட வரவழைக்க முடியாது! நீ போகலாம்''!

பாலசந்தர் திரும்பிவிட்டான். சிறை அதிகாரி, ''ஊம், போகலாம். என்று ரேணுகாவை வெளியேற்றினார்.

பேயறைந்தாற்போன்ற முகத்துடன் ரேணுகா வீடு திரும்பினாள். நர்ஸ் அம்மணி ஏன் வாசலிலேயே காத்திருக்கிறாள்?

''எங்கேயம்மா போய் விட்டீர்கள் இன்னேரம்?'' என்றாள் அவள்.

''ஏன்? என்ன விஷயம்!'' இனிமேல் இடியே விழுந்தாலும் ரேணுகா பரபரப்படைய மாட்டாள் போலும்.

''அஸிஸ்டெண்ட் கமிஷனர் தணிகாசலம் வந்திருக் கிறாரம்மா. நாகர்கோவிலிருந்து அவசர ஜோலியாய் வந்திருக்கிறாராம்.''

திடீரெனப் பிரகாசம் ஏற்பட்டது ரேணுகாவின் முகத்தில். தணிகாசலம்! ரமணனைச் சிபாரிசு செய்த அஸிஸ்டென்ட் கமிஷனர். அப்படியானால் ரேணுகா எதுவுமே சொல்ல வேண்டாம். செய்ய வேண்டாம். நஞ்சுண்டனின் குட்டு தானாகவே வெளிப்பட்டுவிடும்...

துள்ளிய மனம் மறுவினாடியே ஓய்ந்தது. நஞ்சுண்டனின் குட்டு தானாக வெளிப்பட்டால் என்ன நாமாக உடைத்தாலென்ன? அவன் தலைக்குத் தீம்பு வந்த மறுவினாடியே பாலசந்தருக்கல்லவா வெடி வைப்பான் பாவி!

கனக்கும் உள்ளத்துடன் உள்ளே நுழைந்தாள் ரேணுகா.




ரேணுகா குழப்பத்துடன் சிறிது தயங்கினாள். அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலத்தை உடனே போய்ப் பார்! பார்! - இப்படி ஒரு குரல் அவளை நெட்டித் தள்ளியது. நஞ்சுண்டனின் வேடத்தைக் கலைக்க இதைக் காட்டிலும் அருமையான சந்தர்ப்பம் கிடைக்காது. போ, போ!

இன்னொரு குரல் அவளை எச்சரித்தது. வேண்டாம். நஞ்சுண்டனின் பகைமையை விலைக்கு வாங்காதே. அஸிஸ்டென்ட் கமிஷனர் தற்செயலாகத்தான் வந்திருக் கிறார். ஆனால் நீதான் அவரை வரவழைத்திருக்கிறாய். என்று நஞ்சுண்டன் நினைத்துவிட்டால்? பாலசந்தருக்கு ஏற்பட்டிருக்கிற அபாயத்தை உன் மடத்தனத்தினால் இன்னும் பெரிதாக்கி விடாதே.

உள்ளே தணிகாசலத்தின் பேச்சுக் குரல் கேட்டது. குழந்தைப் பாண்டியனுடன் உரையாடிக் கொண் டிருக்கிறார்.

தோட்டத்தில் மாமரத்தின் கீழே அஸிஸ்டென்ட் கமிஷனரின் ஜீப் நிற்கிறது. அதன் டிரைவர் மறைவாக உட்கார்ந்து பீடி புகைத்துக் கொண்டிருக்கிறான்...

நர்ஸ் அம்மணி உள்ளே சென்று கொண்டிருந்தாள்...

''ஸ்! ஏய்!'' கையை மெல்லச் சொடுக்குப் போட்டார்கள் யாரோ. நஞ்சுண்டன்தான். பங்களாவின் பின்புறம் வழியாக முன்புறம் வந்திருக்கிறான். ரேணுகா

வின் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தான். நர்ஸ் அம்மணி யைச் சொடுக்குப் போட்டு அழைத்தவன் அவன்தான்.

அம்மணி திரும்பி வந்தாள்.

''ரேணுகா வந்திருக்கிறாளென்று அவரிடம் சொல்ல வேண்டாம். யாரிடம்?''

அம்மணி முகத்தில் கோபம் தெறித்தது. நஞ்சுண்டனை எதிர்க்கிற மாதிரி முறைத்துக் கொண்டு நின்றாள். ''ஏன்?''

''அதற்கு நான் பதிலளிக்க வேண்டிய அவசியம் வரும்போது சொல்லுகிறேன். இப்போது நான் சொன்னதை நீ செய், போ.''

வெடுக்கென்று தலையை நொடித்தாள் அம்மணி. வெறுப்புடன் போய்விட்டாள்.

''வா இப்படி,'' ரேணுகாவின் தோளை அழுத்தியது நஞ்சுண்டனின் கரம்.

''விசீ ஓர் உலுக்கலுடன் ரேணுகா தன்னை விடுவித்துக் கொண்டாள். ''ஏ.ஸி.யை நான் சந்தித்தால் உன் குட்டை உடைத்துவிடுவேனென்று பயப்படுகிறாய்! அப்படித் தானே?'' இகழ்ச்சி, சிரிப்பாக வெடித்தது.

''அப்படியில்லை. உன் அருமைப் பாலசந்தருக்குத் தூக்குக் கயிறு நிச்சயமாகிவிடுமே என்று பரிதாபப் படுகிறேன்.''

பார்வைக்கு எரிக்கும் சக்தி இருந்தால், நஞ்சண்டன் சாம்பலாகியிருப்பான். அப்படிப் பல்லைக் கடித்தாள் ரேணுகா. ''சரி எங்கே கூப்பிடுகிறாய்?'' என்றாள்.

''மாடிக்குத்தான். அஸிஸ்டென்ட் கமிஷனர் போகிற வரையில் நீ தலை காட்டத் தேவையில்லை. வா.''

வெறுப்புடன் அவன் பின்னே நடந்தாள் ரேணுகா. பங்களாவைச் சுற்றிக் கொண்டு சென்றார்கள். பின்புறத்திலிருந்து மாடிப்படி வழியே நடந்தார்கள்.

''உனக்கும் எனக்கும்தான் ஒப்பந்தம் இருக்கிறதே! உன்னை நான் காட்டிக் கொடுப்பதில்லை, பாலசந்தரை நீ காட்டிக் கொடுப்பதில்லை என்று சற்று முன்தானே தீர் மானித்தாய்? அதற்குள் ஏன் அவநம்பிக்கை? பாலசந்தருக்கு எதிராக ஏதோ வைத்திருப்பதாய்ப் பயமுறுத்துகிறாயே, அதிலே உனக்கு சந்தேகமா?''

புன்னகை விரிந்தது நஞ்சுண்டனின் உதட்டில். ''அப்படியில்லை அசட்டுத்தனமாக நீ எதையும் வெளியிட்டுவிட மாட்டாயென்று எனக்குத் தெரியும். ஆனால் எப்போதும் சராசரி மனிதனைக் காட்டிலும் போலீஸ்காரர்கள் கெட்டிக்காரர்களாயிருப்பார்கள். அதிலும், ஓர் அஸிஸ்டென்ட் கமிஷனரின் சாமர்த்தியத் துக்கு உன்னால் ஈடு கொடுக்க முடியுமா? நீ ஒன்றுதான் சொல்லியிருப்பாய். அவர் பத்து ஊகித்திருப்பார். எதற்கு வம்பு?''

மாடி வெராந்தாவில் கடைசி அறை ஒன்று சும்மாவே கிடந்தது. அங்கே அழைத்துச் சென்றான் நஞ்சுண்டன். ''பாவம், ரொம்பத் தூரம் நடந்திருக்கிறாய் இன்று. நாற்காலி கொஞ்சம் தூசாயிருக்கிறது. தட்டிவிட்டு உட்கார்ந்திரு. ஒரு சின்னத் தூக்கம் போடுவதானாலும் போடு. அஸிஸ்டென்ட் கமிஷனர் புறப்பட்டுப் போனதும் நானே வந்து உன்னை எழுப்புகிறேன்.''

''நான் விழித்துக்கொண்டுதான் இருக்கிறேன்! இருப்பேன்!'' என்றாள் ரேணுகா.

உன் விழிப்பின் லட்சணம்தான் ரமணனின் வீட்டில் தெரிந்துவிட்டதே!'' அலட்சியமாகச் சிரித்தான் நஞ்சுண்டன். கதவைச் சாத்தினான். வெளியே தாழ்ப் பாளை மாட்டும் ஓசை கேட்டது.

நகத்தைக் கொறித்தவாறு ஜன்னலருகில் போய் நின்றாள் ரேணுகா. தோட்டத்தில் இருள் சூழ்ந்து கொண் டிருந்தது. ஜீப்பின் டிரைவர் பிடிக்கும் சிகரெட்டின் நெருப்பு முனை மட்டும் மினுமினுத்தது.

அறையைச் சுற்றுமுற்றும் ஆராய்ந்தாள். புழுதி படிந்த கதவில்லாத அலமாரியில் ஒரு பாதிப் பென்ஸில் கிடந்தது. ஆனால் முனை இல்லை. பல்லால் கடித்தும் நகத்தால் கிள்ளியும் கூரைக் கண்டு பிடித்தாள்.

ஏதேதோ யோசனைகள் முளைத்தன. மரப் பீரோவைத் திறந்து பார்த்தாள். காலியாய்க் காட்சி யளித்தது. ஆனால், செருகு அறையை இழுத்தபோசிது ஏதோவொரு ஜவுளிக் கடையின் பழைய பில் ஒன்று கிடைத்தது. அதன் பின்புறம் வெள்ளையாய் வெறுமை யாயிருந்தது.

சாத்தியிருந்த கதவை ஒருமுறை பார்த்துக் கொண்டாள். பிறகு அவசர அவசரமாக எழுதத் தொடங்கினாள்: ''மிஸ்டர் தணிகாசலம், ரேணுகா பெருத்த அபாயத்தில் இருக்கிறாள். அவள் வீட்டில் இருக்கும் நபர், நீங்கள் சிபாரிசு செய்த ரமணன் அல்ல. நஞ்சுண்டன் என்ற வேடதாரி. அதை வெளியிட முடியாமல் ரேணுகா தவிக்கிறாள். அவளுக்கு எவ்வித ஆபத்தும் நேராமல்,

நஞ்சுண்டனை மடக்க வேண்டியது உங்கள் பொறுப்பு கடமை.

ஒரு நண்பன்

பீரோவின் செருகு அறைக்குள் ஒரு பழைய நூல் கண்டு இருந்தது. ஒரு முழ நீளமேயுள்ள நூலும் ஒட்டிக் கொண்டிருந்தது. காகிதத்தை அந்த மர உருளையின் மீது சுற்றினாள். நூலை அதன்மீது வைத்துக் கட்டினாள்.

ஜன்னலிலிருந்து ஜீப்புக்கு உள்ள தூரத்தைக் கணக்கிட்டாள். நன்றாய் வீசியெறிய வேண்டும். அந்த டிரைவர் கவனித்து எடுதது வைத்துக் கொண்டால் போதும். பின்னர் தணிகாசலத்திடம் கொடுத்துவிடுவான்.

கையை ஓங்கியிருப்பாள் முழுப் பலத்துடன் வீசியெறிய இன்னொரு கரம் சட்டென்று அவள் மணிக்கட்டைப் பிடித்தது. அரக்கப் பிடியாக, நரகப் பிடியாக, அது இருந்தது. வலி பொறுக்க முடியாமல், மூடிய கையைப் பிரித்தாள் ரேணுகா. டொக்கென்று தரையில் விழுந்தது. நூல் கண்டு.

''ரேணுகா! கதவு சாத்தியிருப்பது மெய்தான். ஆனால் கதவில் சாவித் துவாரம் உண்டு. எனக்கு இரண்டு கண் உண்டு. அதையெல்லாம் மறக்கலாமா புத்திசாலிப் பெண்ணான நீ?'' நஞ்சுண்டன் நகைத்தான்.

நூல்கண்டின் மீதிருந்த காகிதத்தைப் பிரித்தான். படித்துவிட்டுக் கிழித்தெறிந்தான். நெருப்புத் துண்டுங் களை வாரியிறைத்தாற்போல் ஆத்திரம் பீரிட்டு வந்தது ரேணுகாவிடமிருந்து. ''இன்றைக்கு என்னைத் தடுத்து விட்டாய். தோல்வியை ஒப்புக் கொள்கிறேன். ஆனால்

என்றைக்கும் என்னை இப்படியே அறையில் அடைத்து வைக்க முடியாது. என் வாயை அடைத்து வைக்கவும் முடியாது. ஞாபகம் வைத்துக்கொள்.''

''ரேணுகா! என்னைக் காட்டிலும் ஞாபக சக்தி அதிகம் தேவைப்படுகிறது உனக்குத்தான்!'' என்றான் நஞ்சுண்டன்.

''நான் எப்படிப்பட்ட ரகசியத்தை மறைத்துக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறேன் என்பதை மறந்துபோய், விளையாடுகிறாய் அபாயகரமான. உன்னை இங்கே நான் அடைத்து வைக்கப் போவதுமில்லை. உன் வாயை அடைக்கவும் எனக்கு உத்தேசம் இல்லை பாலசந்தரின் மீது உனக்கு உண்மையான காதல் இருந்தால் நீயே உனக்குக் கடிவாளம் போட்டுக் கொள்!''

''மாடிப்படியில் யாரோ ஏறி வருகிற சத்தம் கேட்டது. ''இரு'' என்று ரேணுகாவைப் பின் தள்ளிவிட்டு, நஞ்சுண்டன் வெளியே வந்தான்.

நர்ஸ் அம்மணிதான் வந்தவள். ''அஸிஸ்டென்ட் கமிஷனர் உங்களைப் பார்க்க வேண்டுமாம். வந்து கொண் டிருக்கிறார்'' என்றாள்.

நஞ்சுண்டனின் கடுஞ்சினம் அவளை அயர வைக்க வில்லை. ''ரேணுகா வந்திருப்பதைத்தானே அவரிடம் சொல்ல வேண்டாமென்றீர்கள்? சொல்லவில்லை. உங்களைப்பற்றிக் கேட்டார். சொன்னேன். இதோ.''

அதற்குள், நஞ்சுண்டனுக்குப் பின்னாலேயே ரேணுகா வும் வந்து நின்று விட்டாள். தணிகாசலம் வருவதைப் பார்த்ததும்-

என்ன இது? நஞ்சுண்டனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ரேணுகாவுக்கும் தான்.

ஒரு வேலைக்காரனின் தோளைப் பிடித்துக்கொண்டு வந்து கொண்டிருந்தார். அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலம். அத்தோடு இல்லை. அவருடைய ஒரு கண்ணுக்கு நீலத் திரை கட்டியிருந்தது! சற்றே தடுமாறிய வாறு அவர்களை நெருங்கி வந்தார் தணிகாசலம். ''ஹலோ ரமணன்!'' என்று கையை நீட்டினார் குலுக்கு வதற்காக - நஞ்சுண்டனை நோக்கி.

''சார்! உங்களுக்கு... கண்...'' ரேணுகாவால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

தணிகாசலத்தின் முகத்தில் அச்சமும் வருத்தமும் ஒரே சமயத்தில் பரவின. ''நீ வந்துவிட்டாயா ரேணுகா? வெளியே போயிருப்பதாகச் சொன்னார்களே?... ஹூம்! உன் அக்கா சுகுமாரிக்கு இப்படி நேருமென்று நான் கொஞ்சமும் நினைக்கவேயில்லை. செய்தி கேட்டது முதல் துடித்துவிட்டேன். உன் அப்பாவுக்கு எப்படிப்பட்ட இடி! அவரைப் பார்த்து ஆறுதல் சொல்ல வேண்டுமென்று தான்...''

''அதெல்லாம் இருக்கட்டும். உங்கள் கண்ணுக்கு என்ன சார்?'' என்று குறுக்கிட்டாள் ரேணுகா.

''போலீஸ்காரன் தேகம், என்றைக்கும் காயம்!'' தணிகாசலம் சிரித்தார். ''நாகர்கோவிலில் ஒரு சின்ன 'ரயட்.' மலைப்பிஞ்சு சரமாரியாய் வந்து விழுந்தது. நான் கண்ணை மூடிக்கொண்டிருக்க வேண்டிய சமயத்தில் திறந்து வைத்துக் கொண்டிருந்துவிட்டேன். இரண்டு

கண்ணுமே பாதிக் குருடாகிவிட்டது? ஒரு கண்ணுக்கு இப்போது ஆபரேஷன் செய்திருக்கிறார்கள். இது சரிப்பட ஒரு மாதமாகும். பிறகு இன்னொரு கண்ணை ஆபரேஷன் செய்வார்களாம்...''

''அடடா'' என்று அனுதாபமாக ஒரு வார்த்தை மட்டும் சொன்னான் நஞ்சுண்டன். தன் குரலை நன்றாய்க் காட்டிக்கொள்ளத் தயங்கினான் போலும். பிறகு ரேணுகாவை ஓரக் கண்ணால் பார்த்தான். அந்தப் பார்வையில் அகங்காரம் நிரம்பியிருந்தது. 'பார்த்தாயா? எல்லாம் என் அதிர்ஷ்டம்! முதலில் ரமணன் கல்கத்தா வுக்குப் போய்ச் சேர்ந்தான். இப்போது தணிகாசலத்தின் கண் ரிப்பேர், என்னை ரமணனல்ல என்று கண்டுபிடிக்க முடியாதபடி!' இப்படிப் பீற்றிக்கொண்டது அவன் பார்வை.

''வாருங்கள், அப்பாவிடம் போகலாம்'' என்றாள் ரேணுகா. தணிகாசலத்தைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு சென்றாள் கீழே.

களைப்புடன் கண்ணை மூடிப்படுத்திருந்தார். குழந்தை பாண்டியன். திமு திமுவென்று எல்லோரும் நுழைந்த சந்தடி அவரை விழிக்க வைத்தது.

''உங்களிடம் ஒரு விஷயத்தை மறைத்து விட்டேன் மிஸ்டர் குழந்தைப் பாண்டியன்'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தார் தணிகாசலம்.

ரேணுகா திடுக்கிட்டாள், அஸிஸ்டென்ட் கமிஷனரின் பீடிகையைக் கேட்டு. என்ன சொல்லப் போகிறார் அப்பாவிடம்?

தணிகாசலம், நஞ்சுண்டனின் கையைப் பிடித்தார். குழந்தைப் பாண்டியனின் முன்னே அழைத்துச் சென்று நிறுத்தினார். ''இவரை யார் என்று நினைத்திருக்கிறீர்கள்?'' என்றார்.

ரேணுகாவும் நஞ்சுண்டனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். குழந்தைப் பாண்டியனோ ஏதும் புரியாமல் தடுமாறினார்: ''ஏன்... இவர்... நஞ்சுண்டன். பாம்பாயிலிருந்து வந்திருக்கிறார். இங்கே வேலை தேடி...''

''அதுதான் இல்லை'' என்று தணிகாசலம் சிரித்தார். ''இவர் பெயர் ரமணன் சென்னையிலேயே இருக்கிறவர். துப்பறிகிற தொழில் அதாவது, எங்கள் இலாகாவுக்குப் போட்டி. ரேணுகா கேட்டுக் கொண்டாளென்று நான்தான் இவரை இங்கே அனுப்பினேன்!''

''என்ன!'' குழந்பைப் பாண்டியனின் விழிகள் தெறித்து விழவிருந்தன. ஆமாம். கொஞ்ச நாள் முந்தி ரேணுகா என்னிடம் வந்தாள். இங்கே நிலவுகிற சூழ்நிலை தனக்கு ஏதோ திகிலாக இருக்கிறதென்று சொன்னாள் யாரையாவது இங்கே துணைக்கு அனுப்பும்படி கேட்டுக் கொண்டாள். போலீசை அனுப்பினால் அனாவசியக் கலவரமாகிவிடும் என்று, என் நண்பரான இந்த ரமணனை அனுப்பி வைத்தேன் அப்படியும்கூட சுகுமாரிக்கு அந்த மாதிரி நேர்ந்ததுதான் துரதிருஷ்டம்...''

''என்னிடம் ரேணுகா சொல்லவேயில்லையே...'' என்று மகளைப் பார்த்தார் குழந்தைப்பாண்டியன்.

''உடம்பு சரியில்லாதிருக்கிற உங்களைப் போய்க் குழப்பக் கூடாதென்றுதான் ரகசியமாய் ஏற்பாடுகள் செய்தேன், அப்பா'' என்றாள் ரேணுகா.

''அதற்கு ஏனம்மா வருத்தப்படுகிறாய் சுகுமாரியின் விதி அப்படியிருந்தது போய்விட்டாள். ரமணன் இப்போது நம் வீட்டோடு இருக்கிறாரே அதைச் சொல்லு. இப்போது என் மனத்துக்கு எவ்வளவு தைரியமாயும் தெம்பாயும் இருக்கிறது, தெரியுமோ?'' உற்சாகமாய்ப் பேசிக் கொண்டே போனார் குழந்தைப் பாண்டியன்.

ரேணுகாவுக்கு அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை. 'அப்பா! நீங்கள் படுகிற சந்தோஷம், வீண் சந்தோஷம்! விபரீத சந்தோஷம் அசல் நச்சுப் பாம்பை நம் வீட்டுக்குள் கொண்டுவந்து வைத்துக் கொண்டிருக்கி றோம்!' என்று சொல்ல வேண்டும்போல் வார்த்தைகள் நாக்கு நுனியில் துடித்தன.

''ஆனால், நிலைமை மாறிவிட்டதால் இனிமேல் ரமணன் இங்கே இருக்கத் தேவையில்லை என்று தோன்று கிறது'' என்றார் அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலம்.

''ஏன்?'' திடுக்கிட்டான் நஞ்சுண்டன். ''உன்னையும் மீறி ஒரு கொலை நடந்தாகிவிட்டது. அதில் ஒரு சீனாக்காரன் சம்பந்தப் பட்டிருப்பதால், மத்தியத் துப்பறியும் இலாகா இந்த வழக்கை மேற்கொள்ளப் போகிறார்கள் என்று தெரிகிறது. ஆகவே நீ விலகிக் கொள்வதுதான் நல்லது. இல்லாவிட்டால் மத்தியப் போலீசும் நீயும் மோத நேரிடும். நான் தலையிடவும் முடியாது'' என்றார் தணிகாசலம்.

குழந்தைப் பாண்டியன் குறிக்கிட்டார். ''அதனா லென்ன? நஞ்சுண்டன் - மிஸ்டர் ரமணன் - எங்களுடனேயே வெறும் துணையாக இருக்கட்டுமே? எங்களுக்குத் தெம்பாக இருக்கும்.''

''அப்படியானால் சரி'' என்று விடை பெற்றார் அஸிஸ்டென்ட் கமிஷனர்.

ஜீப் போய்க் கொண்டிருந்தது. ''சட்! ரொம்ப மோசமப்பா உன் பீடி நாற்றம்!'' டிரைவரைத் திட்டினார் அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலம். ''என்ன செய்யட்டும்? நாய் வேடம் போட்டால் குரைக்க வேண்டும். டிரைவர் வேடம் போட்டால் பீடி பிடிக்க வேண்டும். நீங்கள் கண் தெரியாதவர் போல் நடிக்க வில்லையா?''

தணிகாசலம் வாய்விட்டுச் சிரிதார்: ''ரமணன் சரியான குறும்புக்காரன் தான் நீ கிடக்கட்டும். நீ நாகர் கோவிலுக்கு வந்து கேட்டுக் கொண்ட பிரகாரம் இங்கே வந்தேன், நடித்தேன். என் வேலை முடிந்தது. ஊருக்குக் கிளம்பும் முன் சில விஷயங்களைச் சொல்லிவிட்டுப் போகிறேன். என்ன?''

''சொல்லுங்கள்'' என்றான் ரமணன்.




போலீஸ் கமினரின் அலுவலகம் நெருங்கிக் கொண்டிருந்தது. ''இறங்கிக் கொள்ளுமுன்பு சொல்ல வேண்டியதைச் சொல்லிவிடுகிறேன்'' என்றார் தணிகாசலம்.

''ஓ.'' காம்பவுண்டு சுவர் ஓரமாக ஜீப்பை நிறுத்தினான் ரமணன். தணிகாசலம் சாய்ந்து அமர்ந்தார்

இருக்கையில். ஜீப்புக்கு வெளியே அவர் வலது கால் ஊஞ்சலாடியது. ''கமிஷனர் லேசில் சம்மதிக்கவில்லை'' என்றார்.

''எதற்கு, சார்?''

''போலீஸ் படையில் இல்லாத ஒருவனிடம் - அதாவது, உன்னிடம் - சுகுமாரி கொலை வழக்கை ஒப்படைப்பதை. ஆகவே நாங்கள் ஒரு பக்கம் கவனிப்போம், நீயும் ஒரு பக்கம் கவனிக்கலாம். ஆனால் ஓர் எச்சரிக்கை!''

''என்னா?''

''உனக்கு எவ்வித சலுகையும் கிடைக்காது என்ற எச்சரிக்கை. போனால் போகிறதென்று சில தகவல்களை உனக்குத் தருகிறேன். மற்றபடி உன் உயிருக்கோ உடைமைக்கோ போலீசார் பொறுப்பாளியல்ல. பாவம், உன்னைப் பார்க்கையில் ஒற்றன் மாதிரி இருக்கிறது பரிதாபமாக!'' அஸிஸ்டென்ட் கமிஷனர் சிரித்தார்.

''ஏன் ஒற்றன் என்றால் பரிதாபம்?'' ''தெரியாதா உனக்கு? எந்தத் தேசத்து ஒற்றனை வேண்டுமானாலும் பார். எதிரிநாட்டிலிருந்து பிரம்மாண்ட பிரம்மாண்டமான ரகசியங்களையெல்லாம் அவன் திரட்டித் தன் தேசத்துக்குத் தருவான். ஆகா ஆகா என்று இரு கை நீட்டி வாங்கிக் கொள்ளும். தப்பித் தவறி அவன் அகப்பட்டுக் கொள்ளட்டும் அவ்வளவுதான்!''

''என்ன செய்யும்?''

''இரண்டு கையையும் விரித்துவிடும்! 'அவனா! எங்கள் தேசத்து ஒற்றனா! சே, சே! யார் சொன்னது?' என்று

கண்ணை இறுக மூடிக்கொண்டு விடும். அந்த ஒற்றன், பூமிக்கு மேலே ஐந்தடி உயரத்தில் தொங்குவான், பாவம்!''
''அந்த மாதிரிதான் என் நிலைமையும் என்கிறீர்களா?''

''அதைக் காட்டிலும் மோசம்!'' என்றார் அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலம். ''ஒற்றனுக்கு அவனுடைய அரசாங்கம் ஆரம்பத்திலாவது உதவி செய்யும். நான் உனக்கு ஆரம்பத்திலேயே வேட்டு வேறே வைத்துவிட்டு வந்திருக்கிறேன்.''

''வேட்டா?''

''பயங்கர டபிள் வேட்டு!'' நகைத்தார் தணிகாசலம். ''உன் வேலையின் நடுவே பலமுறை நீ நஞ்சுண்டன் மீது மோத வேண்டியிருக்கும். அவன் எங்களிடம் புகாருக்கு வரக்கூடாதல்லவா? அவனிடம் முன்னெச்சரிக்யையாகச் சொல்லி விட்டேன் - ஸென்டிரல் போலீசார் - ஸிபிஐக் காரர்கள் இந்தக் கேஸைக் கவனிக்கிறார்களென்று.''

''சரி, அதெப்படி எனக்கு வேட்டாகும்?''

''மை டியர் பாய்!'' ரமணனின் தோளைத் தட்டினார் அஸிஸ்டென்ட் கமிஷனர். ''நீ போகப் போவது ஒருவழிப் பாதை அல்ல. டபிள்வே ரூட். அதாவது நீ நஞ்சுண்டனோடு மோதுவதுபோலவே, அவன் உன்னோடு மோதுவதும் தாராளமாய் நடைபெறும். எங்கே போனாலும் ஒரு முதலுதவிப் பெட்டியைக் கையில் வைத்துக்கொள்.''

''சவப் பெட்டியே வேண்டுமானாலும் முதுகில் கட்டி எடுத்துக் கொண்டு போகத் தயார்!'' என்றான் ரமணன். ''நஞ்-சுண்டனைக் காப்பாற்ற எப்படி நாங்கள்

கடமைப் படவில்லையோ, அதே போல் உன்னைக் காப்பாற்றவும் முன் வர மாட்டோம். சரிதானா?''

''உங்கள் பாதாம் அல்வாவுக்கு ரொம்ப நன்றி.'' ரமணன் இறங்கிக் கொண்டான் ஜீப்பிலிருந்து. ''நான் போகலாமல்லவா?''

''இரு.'' தம்முடைய கறுப்புத் தோற் பையைத் திறந்தார் தணிகாசலம். ''கமிஷனர் கடைசியில் மன மிரங்கி, மனமிரங்கி, உனக்கு இரண்டொரு உதவிகள் மட்டும் செய்யலாம் என்று எனக்கு அனுமதி தந்திருக் கிறார். போலீஸ் இலாகாவின் நடவடிக்கைகளுக்கு நீ இடைஞ்சல் செய்யாமலிருப்பாயா. உறுதி கொடு. இரண்டு துப்புத் தருகிறேன்.''

''அசாத்தியமான உறுதிமொழிகள் கேட்கிறீர்கள். எது இடைஞ்சல், எது இடைஞ்சலல்ல என்று எனக்கு எப்படித் தெரியும்?''

''தொலையட்டும். இதைப் பார்.'' சின்னஞ்சிறு அழகிய குறிப்பு நோட்டொன்றைப் பிரித்துக் காட்டினார் தணிகாசலம். ''இது ஒரு சீன டைரி. இறந்து போன சுகுமாரியின் இடுப்பில் இருந்தது. புத்தம் புதிது. ஒரே ஒரு பக்கத்தில், இரண்டே இரண்டு எண்கள்தான் குறித்திருக்கிறது. கவனித்தாயா?''

''நூற்றிருபத்தெட்டு நூற்றெழுபத்திரண்டு'' வாய் விட்டுப் படித்தான் ரமணன். பிறகு தணிகாசலத்தை நிமிர்ந்து நோக்கினான்: ''இதன் பொருள்?''

''அது உன் தலைவலி.'' தணிகாசலமும் ஜீப்பிலிருந்து இறங்கி நடந்தார். சட்டெனத் திரும்பினார். ''ஒரு விஷயம்.''

''என்ன சார்?''

''அந்தப் பெண் ரேணுகா இருக்கிறாளே, என் குழந்தை மாதிரி.''

''அதுதான் தெரிந்தவிஷயமாயிற்றே?'' என்று புன்னகை செய்தான் ரமணன். ''உங்கள் இலாகா, டாக்டர் பாலசந்தரை அரெஸ்ட் பண்ணியபோதே எனக்குத் தெரியும் - சும்மாவானும் செய்கிறார்களென்று.''

''சும்மாவா?''

''ஆமாம். ஒரு பெரிய லட்சாதிபதியின் பெண் கொலை செய்யப்பட்டிருக்கிறாள். பட்டப் பகலில் அவள் உடலை ஒரு படகில் வைத்து, மகாபலிபுரம் வரை அனுப்பியிருக்கிறார்கள். ஈ காக்கையைக்கூடக் கைது செய்யாமல் இருந்தால் பொதுமக்கள் என்ன நினைப் பார்கள். போலீசாரின் திறமையைப் பற்றி? அதற்காகத்தானே பாலசந்தரைப் பிடித்துப் போட்டீர்கள்?''

''ஒரு துப்பறியும் நிபுணன் பேசுகிற பேச்சாக இல்லை, நீ பேசுவது!'' தணிகாசலத்தின் பேச்சில் கடுமை வெளிப்பட்டது. ''பாலசந்தர் செய்த டான்ஸில் ஆபரேஷனி னால் சுகுமாரிக்குக் குரலே விகாரமாகப் போயிற்று. அதைப்பற்றி அவள் செய்த பிரசாரம், அவனுடைய எதிர் காலத்தையே பாதித்திருக்கிறது. 'சுகுமாரியைச் சும்மா விடமாட்டேன்!, என்று ஆத்திரத்துடன் அவன் கத்திக் கொண்டே வெளியே போனான். அதை நர்ஸிங் ஹோமில் காதால் கேட்டவர்களும் சில பேர் இருக்கிறார்கள். அதே இரவு சுகுமாரி கொல்லாப்பட்டிருக்கிறாள். பாலசந்தரின் வீட்டில் சுகுமாரியின் பொருள்கள் கிடைத்திருக்கின்றன.

'எங்கே போயிருந்தாய் சுகுமாரி கொலையுண்ட நேரத்தில்?' என்று கேட்டால் பாலசந்தர் சொல்ல மறுக்கிறான். என்னதான் நஞ்சுண்டன் அயோக்கிய ராஸ்கல் என்றாலும் அவன்மீதே முழுப் பழியையும் போட்டுவிட முடியாது, ரமணன்.''

''மை காட்!'' ரமணன் கொட்டக் கொட்ட விழித்துப் பார்த்தான் தணிகாசலத்தை. ''எவ்வளவு பெரிய லெக்சர் அடித்தீர்கள் சார்! பின்னே எதற்காக, 'ரேணுகா என் குழந்தை மாதிரி' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தீர்கள்?''

''உன்னாலான உதவியைச் செய் என்று கேட்டுக் கொள்ளத்தான்!'' என்று பதிலளித்தார். அஸிஸ்டென்ட் கமிஷனர்.

''அந்த பாலசந்தர் குற்றமற்றவனாயிருக்கும் பட்சத்தில் அதை நிரூபி என்கிறேன். அதுதானே உன் வேலை? யாராயிருந்தாலும் போலீஸ் இலாகாவுக்கு இரண்டே கண்கள்தான் உண்டு. ஒன்று, சந்தேகம்.''

''இன்னொன்று?''

''மேலும் சந்தேகம்!'' வெடுக்கென்று பேச்சை முறித்துக் கொண்டார் தணிகாசலம் புறப்பட்டுவிட்டார்.

அதே அலுவலகத்தின் மற்றொரு கோடியில்தான் இருந்தது ரமணனின் மோட்டார் பைக். தணிகாசலத்தின் டிரைவராக இருந்த நேரம், அங்கே விட்டிருந்தான். ஸ்டார்ட் செய்ய உதைப்பதற்காக, கைப்பிடிகளைப் பிடிக்க முயன்றபோது-

தன் கையிலே ஏற்கெனவே ஒரு பொருள் இருப்பதை உணர்ந்தான். அந்தச் சைனா டைரி.

அவசரமாகத் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் தணிகாசலத்தின் தலை மறைந்து கொண்டிருந்தது. ஓடிப்போய்ச் சேர்ப்பித்துவிடலாமா? அடுத்த கணம் ரமணன் தன் மடத்தனத்தை எண்ணித் தானே சிரித்தான். அஸிஸ்டென்ட் கமிஷனர் தணிகாசலத்துக்கா ஞாபக மறதி? ஒரு பெரிய கொலை வழக்கில் முக்கிய 'எக்ஸிபிட்' ஆயிற்றே இந்த டைரி? மறந்து போயா ரமணனிடம் அதை விட்டு விட்டுப் போயிருப்பார்? ஒரு நாளும் இராது. மறந்துவிட்ட மாதிரி கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார். அதிகார பூர்வமாகப் போலீசின் உதவியை ரமணனுக்குத் தர முடியாது. ஆகவே தவறுதலாய்ச் செய்த மாதிரி செய்து விட்டுப் போயிருக்கிறார். தணிகாசலம் சார்! நீங்கள் நீடூழி வாழ்க! எல்லாம் வெற்றிகரமாக முடிந்தால் உங்களைக் கார வேர்க்கடலையாலேயே குளிப்பாட்டுகிறேன்!

உற்சாகமாக பைக்கை உதைத்தான். ரோஷத்துடன் சீறியது. சித்ரா தியேட்டருக்கருகே உள்ள கூவம் பாலத்தை ஒரே தாண்டாகத் தாண்டியது. பி.எம்.ஜி. ஆபீஸ் பக்கமாக வாகனத்தை ஓடித்தான். புதக் கட்டிடம் எழுப்புவதற்காக இடித்துப் போட்டிருந்த ஓரிடத்தில் மோட்டார் பைக்கை நிறுத்தினான். ஷூ பாலிஷ் தாவூது ஓடிவந்தான்.

''வண்டியைப் பார்த்துக்கவா சார்?'' ''முதலில் உன் கிராப்பைப் பார்த்துக்கொள் - இந்த ஒரு ரூபாயில்!'' தாவூதின் பரட்டைத் தலையை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டுக் காசைத் தந்தான். 'சில்லறை' வேலைகளுக்கென்றே காத்திருக்கிறவன் தாவூது. ரமணனின் பல நூறு கைகளில் அவனும் ஒன்று.

''தாவூது, ஒரு வேலை செய்.''

''சொல்லு சார்.''

இரண்டடி எட்டி நின்றான் ரமணன். அவனை ஏற இறங்க ஆராய்ந்தான். ''தாவூது, போன தீபாவளியின்போது என் வீட்டுக்கு வந்து புதுச் சட்டை கேட்டாயே, அப்போது என்ன சொன்னேன்?''

''போங்க சார்! 'உனக்கு ஏதுடா தீபாவளி'ன்னு விரட்டிட்டீங்களே?''

''இன்றைக்கு, இன்னும் கொஞ்ச நேரத்தில் உனக்குத் தீபாவளி. வா. கொண்டாடலாம்.''

ரவுண்ட் டாணாவினருகே உள்ள பெரிய ரெடிமேட் கடையை நோக்கி ரமணனின் நடை விரிந்தது. தாவூது பின்தொடர்ந்தான் மௌனமாக. 'சாரோ'டு எந்தச் சமயம் பேச வேண்டும், எந்தச் சமயம் கம்மென்றிருக்க வேண்டும் என்று அவனுக்குத் தெரியும். இது, இரண்டாவது குறிப்பிட்ட சந்தர்ப்பம். ரெடிமேட் கடைக்கு வலப்புறம் ஒரு சலூன் இருந்தது. ''முதலில் உன் அப்பர் பெர்த்தைச் சரி பண்ணிக்கொண்டு வா. இங்கேயே காத்திருக்கிறேன்'' என்றான் ரமணன்.

உள்ளே நுழைந்த சிறுவனல்ல, அரை மணி பொறுத்து வெளியே வந்த தாவூது.

''அருமையான புதிய பதிப்பு. வா.''

ரமணன் துணிக்கடைக்குள் அழைத்துச் சென்றான். கடை உதவியாளிடம் தாழ்ந்த குரலில்: ''பையனுக்கு ஏற்ற சட்டை டிராயர் எடுத்துப் போடு. 'சீப்'பாயும் இருக்க வேண்டும். பெரிய இடத்துப் பிள்ளைகள் அணிவதாயும் இருக்க வேண்டும்.''

"இப்போதெல்லாம் பெரிய இடத்துப் பிள்ளைகள் தான் 'சீப்' பானதை அணிக்கிறார்கள், சார்." சிரித்துக் கொண்டே உடைகளை எடுத்தார் உதவியாள்.

இருபத்தைந்து நிமிடங்கள் அங்கே செலவழிந்தன. சலூனிலிருந்து வெளிப்பட்ட தாவூது புதிய பதிப்பு; ரெடிமேட் துணிகளை அணிந்து வெளிப்பட்டபோதோ, பரிசுப் பதிப்பு.

"தாவூது, ஹோட்டல் நான்கிங் இருக்கிறதே, தெரியுமா?"

"என்ன சார், நம்ம 'ஓர்க்சாப்'புக்குப் பக்கத்துக்கு கடைதானே அது?"

"அடி சக்கை! ஓர்க்ஷாப்பா!"

ரமணன் வாய்விட்டுச் சிரித்தான். "சரி, அங்கே இருக்கிறவர்களுக்கு உன்னை நான்றாய்த் தெரியுமோ?"

"ஈ தின்னிப் பசங்கள், சார்! அவங்களோடு எனக் கென்ன சினேகிதம்!" என்றான் தாவூது ரோஷத்துடன்.

"அப்படியே தெரிந்திருந்தாலும் பரவாயில்லை. இப்போது உன்னைப் பெற்ற அம்மாவால்கூட உன்னை அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. வா, போகலாம். 'ஹோட்டல் நான்கிங்' பத்து நிமிடத்தொலைவில் இருந்தது. வழியில் ரமணன் தந்த குறிப்புக்களுக்கு, தாவூதின் தலை ஆடிக்கொண்டிருந்தது. 'ஹோட்டல் நான்கிங்' இரட்டை மாடிக் கட்டிடம். வயிற்றைக் கலக்கும் நிசப்தமான சூழ்நிலை. அகலமான பீங்கான் தட்டுக்களில் உறிஞ்சுபவர்கள்; கடக்முடக்கென்று கடிப்பவர்கள்;

தாழ்ந்த குரலில் அனைவரும் உரையாடினார்கள். விசால மான ஹால்; கோடியில் பெரிய மேஜையுடன் 'கவுண்டர்'. கீழே சிவப்புக் கம்பளம். மேலே நேரு, காந்திஜி உருவப் படங்கள். (அளவுக்கு மீறிப் பெரியவை) ஊதுவத்தியோ சாம்பிராணியோ புகைகிறது. வாசனை அல்ல - நெடி அறைக்குள் அறையாகப் பல செல்கின்றன. சிவப்புத் திரைச் சீலைகள் சுருட்டிக் கட்டப்பட்டுள்ளன.

நிர்வாகி போலத் தோன்றிய சீனக் கிழவன் சந்தேகக் கண்ணுடன் ரமணனை வரவேற்றான்.

''உட்காருங்கள், எஜமான்.'' ரமணன், தாவூதை உட்கார்த்தி வைத்தான் மெத்தை வைத்த நாற்காலியில், பரம்பரைப் பணக்காரன் கெட்டான் - அத்தனை அமர்த்த லாகக் கால்போட்டு அமர்ந்தான் தாவூது

கிழவனின் பக்கமாகக் குனிந்தான். ரமணன்: ''கோயம்புத்தூர் மில் சக்கரவர்த்தி ஆரோக்கியசாமியைத் தெரியுமோ?''

சீனக கிழவனின் சின்னக் கண்கள் இடுங்கிப் பளபளத்தன. ''என்ன அவருக்கு?''

''அவருடைய ஒரே செல்லப் புத்திரன்'' - பெரு விரலை தாவூது பக்கம் சுட்டிக் காட்டினான் ரமணன். குரல் மேலும் ரகசியமாக ஒலித்தது: ''பணம், கூவம் தண்ணீர் தான் ஐயாவுக்கு. பட்டணத்தைக் காட்டடா புத்திரனுக்கு என்று கட்டளை போட்டார். நான் பிரைவேட் செகரட்டரி. எல்லா இடத்தையும் காட்டினேன். பையனுக்குச் 'சைனிஸ் டிஷ்' கொஞ்சம் ருசி பார்க்கணுமாம்.'' கிழவனின் கண்ணில் அவநம்பிக்கை அகலவில்லை. ஆனால் ஆசையும் லேசாகச் சுடர்விட்டது. ''சந்தோஷம் என்ன செய்ய வேண்டும்?''

''முதலில் ஒரு தனி அறை கொடு, பையன் ரொம்ப அந்துஸ்துக்காரன். சாமானிய நபர்களுக்குச் சமமாக உட்காரமாட்டான்.''

''ஏர் கண்டிஷன் அறை இருக்கிறது. ஸ்பெஷல் ஆள் போட்டுக் கவனிக்கச் சொல்கிறேன். வா.''

''வாருங்கள், எஜமான்.'' ரமணன் உடம்பை வளைத்துக் கொண்டு உபசரித்தான். தாவூதை. மூன்று பேர் கொண்ட குட்டி ஊர்வலம் மாடிப்படியில் ஏறியது. மேலே போகப் போக இருட்டு அதிகரித்தது. சில கதவுகள், கூடங்கள் - சில்லென்ற குளிர்ச்சி உடம்பில் உறைத்தது. ஏர் கண்டிஷன் அறையை அடைந்துவிட்டோம் என்று புரிந்து கொண்டான் ரமணன்.

''ஸூவான்! ஸூவான்!'' கைதட்டினான் கிழவன்.

''என்ன?'' சட்டையும் சராயும் அணிந்த பெண் ஒயிலாக வந்தாள். ஒல்லியான தலைப்பின்னல்.

''கவனி.''

கிழவன் போய்விட்டான். கதவு திறந்து மூடிய ஒரு வினாடிக்கு, வெப்பமான காற்று ரமணனைத் தொட்டு மறைந்தது. ரமணனின் மேஜையில் இரு கைகளையும் ஊன்றிக் கொண்டாள் ஸூவான். கழுத்தை வளைத்து, மஞ்சள் கண்ணைச் சுழற்றினாள். ''என்ன வேண்டும்?'' அவள் விசாரித்த தோரணை, வெறும் சிற்றுண்டி மட்டும் தருகிறவளாகக் காட்டவில்லை.

ரமணன் பச்சை நிற மெனு கார்டைப் பார்த்தான்.

''சுங்கிங் டக் ரோஸ்ட் பண்ணிக் கொண்டு வா'' என்றான்.

''அப்புறம்?''

''நூடில்ஸ் வரட்டும். பிறகு யங் சௌசாமென்.'' மனத்துக்குள் கூட்டிப் பார்த்தான். விலைகளை. சுமார். 35 ரூபாய் வேட்டு.

''தம்பிக்கு?'' தாவூதின் கன்னத்தில் செல்லமாய்த் தட்டினாள் ஸூவான்.

''சீ, தட்டாதே.'' அவள் கையை விலக்கினான் ரமணன். ''கோடீசுவரனின் குமாரன். இவன் கால் தூசியைத் தொடவே நீ ஏழு பிறவி எடுக்க வேண்டும். போ சீக்கிரம்.''

கேட்டவற்றைக் கொணர்ந்து வைத்து விட்டு தோளைக் குலுக்கிக் கொண்டு வெளியே சென்றாள். இரண்டே நிமிடங்கள்தான். விக் - ஒரு விக்கல் சத்தம். களக் - மளக் - ஒரு வாந்தி சத்தம்.

''ஐயய்யோ! எஜமான்! என்ன எஜமான்?'' என்று அலறினான் ரமணன்.

ஸூஸான் உள்ளே ஓடிவந்தாள். தட்டுக்கள் சிதறிக் கிடக்க, வாந்தி எடுத்த கலாட்டாவின் நடுவே விழுந்து கிடந்தான் தாவூது!

ஸூஸானின் விழிகள் விரிந்தன. ''என்ன... என்ன நடந்தது?''

''என்ன நடந்ததா?'' பச்சைக் கொலை!'' அவன் போட்ட சத்தத்தில் பதறியடித்துக் கொண்டு மாடிக்கு ஓடி வந்தான் கிழவன்.

ஸூஸான், இடத்தைச் சுத்தம் செய்துவிட்டு, தாவூதையும் நாற்காலியில் சாய்த்தாற்போல் சாத்தியிருந்

தாள். அவன் கண்கள். பீதியுடன் சுழன்றன. ''செகரட்டரி... எனக்கு நெஞ்சை வலிக்குது... கண் இருட்டுது... செத்து விடுவேன்... கொஞ்ச நேரத்தில்... என் அம்மாவையும் அப்பாவையும் பார்க்கணும்...''

விலுக்கென்று உதைத்துக்கொண்டது தாலூதின் உடம்பு. கட்டைபோல் நீட்டிவிட்டது மறுவினாடி.

''போலீஸ்!''

வெளியே பாயவிருந்த ரமணனை நிறுத்தினான் சீனக் கிழவன். ''பொறு...''

''நானே போய் டாக்டரைக் கூப்பிடுகிறேன். இங்கேயே சாந்தமாக இருங்கள்.''

''ஏன், என் பிழைப்பையும் ஒழிக்கப் பார்க்கிறாயா? நாலு பேர் வரப்போகிற இடம் இது. உன் மர மண்டைக்குத் தான் என்னையும் என் எஜமானரையும் தெரியவில்லையே தவிர, இந்த மெட்றாஸ் பூரா தெரியும். யாராவது பார்த் தார்களோ, உடனே தெரிவித்து விடுவார்கள். கோயம் புத்தூருக்கு!''

மோவாயைச் சுரண்டிக் கொண்டான். சீனக் கிழவன். ''சரி, இந்த இடம் வேண்டாம். வேறு அறை காட்டுகிறேன், அங்கே இருக்கலாம், வா.''

இருட்டின் நடுவே மறுபடியும் ஊர்வலம். லூவான், தானே ஒண்டியாகத் தாலூதைத் தூக்கிக் கொண்டாள். வேறோர் அறை வந்தது. ரமணனையும் தாலூதையும் விட்டு விட்டு, முதலாளியும் பணிப்பெண்ணும் மறைந்தார்கள். அடுத்த வினாடியே குபுக்கென எழுந்தான் ரமணன். உட்புறம் தாழிட்டுக் கொண்டான். கணக்கு வழக்குப்

புத்தகங்களை வைத்திருக்கும் அறைதான் அது. மேஜைமீது கிடந்த முதல் புத்தகத்திலேயே அவனுக்கு அதிர்ஷ்டம் அடித்தது. அது ஒரு பதிவுப் புத்தகம். ஒன்று, இரண்டு என்று எண்கள் தரப்பட்டு, பற்பல பெயர்கள் குறிக்கப்பட்டிருந்தன. பதிவுப் புத்தகத்தின் தாள்களைக் கிடுகிடுவென்று புரட்டினான்.

*128*-வாங் சூ.

*172*-சியாங் லீ.

இரண்டு பெயர்களின் கீழேயும் சிவப்புப் பென்சிலால் கோடு கிழிக்கப்பட்டிருந்தது. எதற்காக? தெரியவில்லை. சரக்கென்று தாளைக் கிழித்துச் சுருட்டிப் பையில் அடைத்துக்கொண்டான்.

அடுத்த நிமிடம் கதவு தட்டப்பட்டது. திறந்தான். ஸூஸான் தான்.

''டாக்டர் வந்தாரா?'' என்று கேட்டான்.

''இல்லை, இதுதான் வந்தது.'' அவள் கையில் எதையோ மறைத்து வைத்துக் கொண்டு பேசினாள். ''கோடீசுவரர்கள் வீட்டுப் பிள்ளைகள் வழக்கமாய் வைத்திருக்கிற பொருள் தான் இதெல்லாம்.

''இல்லை?'' கையைப் பிரித்துக் காட்டினாள்.

பூட் பாலிஷ் டப்பியும், பிரஷும்!

''பையனுக்கு, தாடையிலே இருந்த அறுப்புக் காயத்தைப் பார்த்தபோதே சந்தேகமாயிருந்தது இங்கே எங்கேயோ இவனைப் பார்த்ததுண்டே என்று. இங்கே

தூக்கி எடுத்து வருகிறபோது காற்சட்டைப் பையைச் சோதனை போட்டேன்...''

தாவூதுர மடத் தாவூது! என்ன அற்பப் பயலடா நீ! ஐம்பது ரூபாய் டிரஸ்ஸை மாட்டிக்கொண்ட பிறகும் மூன்ற ரூபாய் உடமைகளைத் துறக்க மனம் வர வில்லையே?

நிமிர்ந்த ரமணன். சரேலெனப் பின் வாங்கினான். ஸலீவானின் வலது கை, ஒரு கூரிய கத்தியை அவன் நெஞ்சுக்கெதிரே நீட்டிப் பிடித்திருந்தது.



''யார் நீ? உண்மையைச் சொல்லு.'' ஸலீவானின் கத்தி முனை ரமணனின் நெஞ்சை நக்கிக் கொண்டது.

தாவூது சின்னப் பையன். கத்திகளுடன் விளையாடிப் பழக்கம் கிடையாது. புதுத் துணிக்கும், உயர் ரகப் பலகாரத் துக்கும் ஆசைப்பட்டது, உயிருக்கே உலையாக வந்து விட்டதே என்று எண்ணினான். முட்டித் துளும்பிக் கொண்டு கண்ணீர் வந்தது. ''சார்'' என்று ஆரம்பிக்கும்போதே தொண்டை அடைத்துக் கொண்டது.

''சீ! சும்மா இரு!'' அவன் தலையில் தட்டினான் ரமணன். ''தலையே போகிற நிலைமை வந்தாயிற்று. இனிமேலும் பொய் சொல்வதா? நிசத்தை ஒப்புக் கொள்வோம்.''

ஸுவான் ஓரடி நகர்ந்தாள். ஆனால் கத்தியை நகர்த்த வில்லை, ரமணன் நெஞ்சிலிருந்து. விழிகளை நகர்த்த வில்லை அவன் மீதிருந்து. இடது கையை மட்டுமே சுவரில் துழாவினாள். ஒரு பொத்தான் தட்டுப்பட்டது. அழுத்திவிட்டுக் காத்திருந்தாள். சற்றைக்கெல்லாம் வேகமாக வந்தான் சீனக் கிழவன். ரமணனின் நிலையை ஒரு நொடியில் புரிந்து கொண்டான். சீன மொழியில் இரண்டொரு வார்த்தை பரிமாறிக்கொண்டார்கள் கிழவனும் ஸுவானும்.

''சொல்லு'' என்றாள் ஸுவான். கிழவன், தாவூதின் இரண்டு கைகளையும் சேர்த்துத் தன் ஒரே கரத்தில் பிடித்துக்கொண்டான்.

ரமணன் ஒன்று கவனித்தான். ஸுவானின் குரல், தோரணை கிழவனின் குரல், தோரணை - இரண்டும் மாறி யிருந்தன. ஸுவான்தான் இங்கே உண்மையான எஜமானி. கிழவன் அவளுடைய வேலைக்காரன். வெளியுலகத்தில், வேண்டுமென்றே பதவியைத் தலைகீழாக மாற்றிக் கொள்கிறார்கள்.

''சொல்லேன்.'' ரமணனின் தாடையின் கீழே ஓங்கி ஒரு குத்து இறங்கியது. கிழவனா அவன்! என்ன குத்து! சேர்ந்தாற்போல் அரை டஜன் பல் விடை பெற்றுக் கொண்ட மாதிரி இருந்தது ரமணனுக்கு. வாய்க்குள்ளே உப்புக் கரித்தது! ரத்தம்!

''இவன் நிஜமாகவே பூட் பாலிஷ் பையன் தான். நானும் ஒரு சாதா ஆள்தான்.'' ஒப்புக்கொண்டான் ரமணன். ''இரண்டு பேருக்கும் இதுதான் தொழில்.''

''எது?''

''உயர்தர ஓட்டலுக்குப் போக வேண்டியது. நன்றாய் மூக்கைப் பிடிக்க இழுக்க வேண்டியது. பிறகு இவன் ஒரு 'வாமிட்'. நான் ஒரு அலறல். ஓட்டல்காரனுக்கு அடி வயிற்றில் டமால். ஓட்டல் பெயர் கெட்டுவிடக் கூடாதே என்று சமாதானம் பண்ணி. அனுப்புவான். சாப்பிட்ட பில் லாபம். சில சமயம் தட்சணையும் ஐந்து பத்து கொடுத் தனுப்புவார்கள்.''

ஸுவான் உதட்டைச் சுழித்தாள்.

''அவ்வளவுதானா?''

''அவ்வளவேதான்.''

ஸுவானின் கண்கள் அறையில் சுழன்றன. திறந்து கிடந்த பதிவுப் புத்தகத்துக்கு வந்ததும் அசையாது நின்றன. பிறகு கிழவனிடம் திரும்பினாள்:

''ஊம்.''

கிழவன் தாவூதின் கையை விட்டான். ரமணனின் சட்டைப் பையை முதலில் பரிசோதித்தான். பிறகு காற் சட்டையை ஆராய்ந்தான். கசங்கிச் சுருண்டிருந்த காகிதப் பந்து வெளிவந்தது. பிரித்து நீவினான். பதிவுப் புத்கத்தி லிருந்து கிழித்ததாள்தான் அது.

ஸுவானின் கத்தி, ரமணனின் கன்னத்தை வருடியது. ''ஸ28-172 அந்த இருவரைப் பற்றித் தெரிந்து கொள்ளத்தான் இங்கே வந்தாய்? இல்லையா?''

ரமணன் பதிலளிக்கவில்லை.

கிழவன், தாவூதின் கையைப் பிடித்தான். முதுகுப் பக்கம் மடக்கினான். பிடரியை நோக்கி உயர்த்தி, சிறிது சிறிதாக முறுக்கினான். தாவூது கத்தவில்லை. ஆனால் அவனுடைய மரண வேதனை ரமணனுக்குத் தெரிந்தது.

''நிறுத்து. பையனை ஒன்றும் செய்யாதே. நான் ஒப்புக் கொள்கிறேன்'' என்றான் ரமணன். ''ஆமாம். இதற் காகத்தான் வந்தேன் - இவர்களைத் தேடிக் கொண்டுதான்.''

கிழவன் தாவூதின் கையைத் தளர்த்தினான். ஸூவான் கேட்டாள்: ''இவர்களைத்தான் நாங்களும் தேடிக் கொண் டிருக்கிறோம். என்று உங்களுக்குத் தெரியுமா?'' ''தெரியாது'' என்று ரமணன் தலையசைத்தான்.

''நீ எதற்கு இவர்களைத் தேடுகிறாய்?''

''நீ?''

''பதில் சொல்லவேண்டிய கட்டாயம் உனக்கத்தான் எனக்கில்லை. எதற்குத் தேடுகிறாய்?''

மீண்டும் ரமணனிடம் மௌனம். கிழவனின் கை தாவூதின் கையை இறுக்கியது.

''இரு.'' ஒரு வினாடிக்குள் யோசித்து முடித்தான் ரமணன். எதைச் சொல்லலாம்? வைர முரகனையா? சுகுமாரியின் கொலையையா? ஏதாவது ஒன்றைச் சொன்னால் போதும். இரண்டையும் வெளியிடுவானேன்? இறுதியில் சொன்னான்: ''வைர முருகனுக்காக.''

ஸூவானும் கிழவனும் மின்னல் வெட்டுப்போல் பார்வையைப் பரிமாறிக் கொண்டார்கள். தன் குருட்டாம்

போக்கான அடி, குறி தவறவில்லை என்று தெரிந்து கொண்டான் ரமணன்.

ஸூவான் நகைத்தாள். அதில் சீற்றத்தின் முத்திரை இருந்தது: ''இருபத்திரண்டு வருட காலமாக நான் ஒரு முயற்சி செய்து வருகிறேன். நேற்று வந்த நீ எனக்குப் போட்டியாக முளைக்கிறாயா? உனக்கெதற்கு வைர முருகன்?''

''எங்களுக்காவது அது தெய்வம். பூஜைக்காகத் தேவை. உங்களுக்கு?''

''எங்களுக்குப் பாட்டனார் கட்டளை. அவர் சுங்கிங்கில் இருக்கிறார். ஐந்து வயதுக் குழந்தையாக நான் இந்தியாவுக்குப் புறப்பட்டபோது சொல்லியனுப்பினார். இந்த வைர முருகனைக் கண்டுபிடித்து அனுப்பும்படி.''

''இன்னும் அதைத் தேடிக் கொண்டிருக்கிறாய்?''

''ஆமாம்.''

''அதன் பிறகு நீ உன் நாட்டுக்குப் போகவில்லை?''

''இல்லை.''

''உன் பாட்டனார் இப்போது எங்கே இருக்கிறார். என்ன பண்ணுகிறார், எதற்கு இந்த வைர முருகனைத் தேடுகிறார் என்று உனக்குத் தெரியாது?''

''ஊகூம்.''

நகைப்பது இப்போது ரமணனின் முறையாயிற்று. ''இருபத்திரண்டு வருடத்துக்கு முன்னால் பாட்டனாரிட்ட கட்டளையை, எதற்கு, ஏன், எப்படி என்றெல்லாம்

விசாரிக்காமலே நிறைவேற்ற முயலுகிறாயே! உன்னைப் போல் பைத்தியக் காரியை நான் பார்த்ததில்லை. உன் தேசத்தலைவர்களைக் கண்டாலே எங்களுக்குக் காலோடு தலை கசப்பும் எரிச்சலும் வருகிறது. இந்தத் துரோக வேலை, திருட்டு வேலையெல்லாம் வேறே ஏன் நடத்து கிறீர்கள்?''

இப்போது அந்தச் சீன கிழவனே பதிலளிக்க முன் வந்தான்: 'அதுதான் நீங்கள் உங்கள் வீட்டுப் பெரிய வர்களுக்குக் கொடுக்கும் மரியாதைக்கும், நாங்கள் எங்கள் வீட்டுப் பெரியவர்களுக்குக் கொடுக்கும் மரியாதைக்கும் உள்ள வித்தியாசம்! தகப்பனோ, பாட்டனோ சம்பாதித்துப் போடுகிற வரையில் சாப்பிடுவீர்கள். அவன் கொஞ்சம் உடம்பு தளரட்டும், திண்ணைக்குத் தள்ளி, கதவைச் சாத்திவிடுவீர்கள்!''

''இவனிடம் எதற்கு லெக்சர்?'' என்று ஸுவான் குறுக்கிட்டாள்.

''கேட்டானே, தெரிந்து கொள்ளட்டும்'' என்றான் கிழவன். மேலே ரமணனிடம் தொடர்ந்தான்: ''கன்ஃபூஷி யஸின் தத்துவப்படி எங்கள் வாழ்க்கையில் ஐந்து உறவுகள் தான் முக்கிய மானவை: அரசன் - மந்திரி, கணவன் - மனைவி, தகப்பன் - பிள்ளை, அண்ணன் - தம்பி, நண்பன் - நண்பன். இந்த ஐந்தில் மூன்று குடும்ப உறவுகளாக இருக்கிறதா, இல்லையா? அதுதான் எங்கள் வலு. பெரிய வர்களுக்கு மரியாதை...''

ரமணன், இகழ்ச்சி வெளிப்படச் சிரித்தான்: ''விளக்கிய வரையில் நன்றி. அளப்பதை நிறுத்திக் கொள். உங்கள் பழம் பெருமையை ஏன் இப்படி உரக்கப்

பாடுகிறீர்கள் என்று எங்களுக்கெல்லாம் தெரியும். அந்தப் பாண்டின் ஓசையில், உன் துப்பாக்கிக்கு ரவை போட்டுக் கெட்டித்துக் கொள்கிற சத்தம் அமுங்கி விடவேண்டு மல்லவா? இல்லாவிட்டால், இந்தியாவுக்குப் போய் வைர முருகனைத் திருடி வரும்படி கன்ஃபூஷியஸா கட்டளை யிட்டார்!''

''ஏய்!'' கிழவன் ஆங்காரத்துடன் சொன்னான். ''இவனிடம் ஏன் வீண் பேச்சு - என்று முதலிலேயே சொன்னேனே?'' ஸுவான் அவனை மெல்ல அடக்கினாள். ''நீ போய் எடுத்துவா?''

கிழவன் படியிறங்கிச் சென்றான். கத்தியை ரமணனின் நெஞ்சிலிருந்து அகற்றிவிட்டாள் அவள். இது தான் சந்தர்ப்பமென்று குபீரெனப் பாயவில்லை ரமணன். கத்தியைக் காட்டிலும் கூர்மையான வேறொன்று வரப் போகிறது. இனி ஏன் அவன் நகரப் போகிறான்? அது தெரிந்துதான் அவளும் கத்தியை எடுத்தாளோ?

கிழவன் இரண்டு சிறிய பெட்டிகளை எடுத்து வந்தான். ஒன்று நீள வாட்டத்தில், சாண் நீளம் இருந்தது; டாக்டர்களின் இஞ்செக்ஷன் பெட்டியைப் போன்றது. இன்னொன்று, உள்ளங்கை அகலம் கொண்டது. நீல நிறத் துணியில் உறை போடப்பட்டது. மரப்பெட்டி.

''மயக்கம் போட்டு விழாமலிரு.'' கிழவனிடமிருந்து அவற்றை வாங்கிக் கொண்ட ஸுவான் ரமணனை எச்சரித் தாள். பிறகு, துணி உறை போட்ட மரப்பெட்டியைத் திறந்தாள் முதலில். எச்சரித்தது சரிதான். ரமணனுக்குக் கிட்டத்தட்ட மயக்கமே வந்துவிட்டது.

''கொடு இப்படி'' என்று ஆவலுடன் கை நீட்டினான். ஸூவான் ஒரு நச்சுச் சிரிப்புடன் அவன் கையை விலக்கினாள். இவ்வளவு நேரமும் அடங்கி ஒடுங்கிக் கிடந்தான் தாவூது. கையை முறுக்கிய ஒடுங்கிக் கிடந்தான் தாவூது. கையை முறுக்கிய முறுக்கலில் போதுமடாப்பா என்று ஆகியிருந்தது அவனுக்கு. இப்போது ரமணன் காட்டிய ஆவல், ஸூவான் செய்த சீண்டல் - இரண்டும் அவனை உசுப்பிவிட்டன. குறுகுறுப்புடன் எட்டிப் பார்த்து, கிழவன் கையால் மண்டையில் ஒன்று வாங்கிக் கொண்டான்.

அவசரப்பட்டுக் காட்டிய ஆவலை ரமணன் அடக்கிக் கொண்டான். முதலிலேயே ஊகித்தேன், உன்னிடம்தான் இருக்க வேண்டுமென்று.''

ஸூவானின் கையிலிருந்தது வைர முருகன்தான். மேஜைமீது அதை வைத்தாள். எட்ட நின்று அழகு பார்த்தாள். அந்த இருண்ட அறையெங்கும் பளபளவென்று டாலடித்தது.

''ஏன் இன்னும் சீனாவுக்கு அனுப்பாமல் இதை வைத்திருக்கிறாய்?''

ஸூவான் முறுவலித்தாள்.

''முருகனுக்கு உங்களுக்கும் என்ன சம்பந்தம்?'' என்றான் ரமணன்.

''உங்களுக்கு இது தெய்வம். எங்களுக்கு -'' ஸூவான் அதைக் கையிலெடுத்தாள். முப்பரிமாணமுள்ள அந்தப் பதுமையின் குறுக்கு வெட்டில் நகத்தைப் பதித்துப் பிரிதாள். வாழையிலிருந்து பட்டை பிரிகிற மாதிரி,

அச்சிலிருந்து பதுமை பிரிகிற மாதிரி, இப்போது ஒரே மாதிரியான இரண்டு உருவங்களாயிற்று அந்த வைர முருகன். பிரித்த இரண்டு பகுதியையும் ஒன்றின் முதுகோடு இன்னொன்றைத் தலைகீழாகச் சேர்த்தாள்.

''இப்போது பார்'' என்றாள்.

ரமணன் பார்த்தான். கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். அங்கே வைர முருகனைக் காணவில்லை. சீனப பாணியில் செய்யப்பட்ட ஒரு சிங்கத்தின் உருவம்தான் இருந்தது. அந்தச் சிங்கத்துக்கு இருபுறமும் இரண்டு இறக்கைகள் இருந்தன. தமிழ்ச் சிற்பக் கலையைக் கற்ற சீனனோ, அல்லது சீனச் சிற்பக் கலையைப் பயின்ற தமிழனோ இதைச் செய்திருக்க வேண்டும்.

''எங்களுக்கு இது தேவதை.'' தன் வாக்கியத்தைப் பூர்த்தி செய்தாள் ஸுவான். இறக்கையுள்ள சிங்கத்தை அவள் வருடியது. ''வேண்டாதவர்களை ஒழிக்கக்கூடிய சக்தியுள்ள தேவதை.''

''தெரிகிறதே! இல்லாமலா இருபத்தைந்து வருடமாக வேட்டையாடிக் கொண்டிருக்கிறீர்கள்?'' ஒரு கொட்டாவியை வெளியிட்டான் ரமணன். ''சரி. என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியாயிற்று. நான் இனி போகலாமல்லவா?''

''எங்கே?'' குறுக்கே கையை நீட்டி மறித்தாள் ஸுவான். ''எங்கேயா? என்னுடைய வழக்கமான வேட்டைக்குத்தான், ''என்றான் ரமணன்.'' வைர முருகன் வேட்டைக்கு! கையில் கிடைத்ததும் உனக்குத் தகவல் தருகிறேன். வழியை விடு.''

ஸூவான் திகைத்துப் பின் வாங்கினாள். ''வைர... முருகனா... இதோ... இதுதான் இருக்கிறதே!''

ரமணன் பெரிதாய்ச் சிரித்தான். ''சௌகார்ப் பேட்டையில் நூறு ரூபாய்க்கு மேல் இதை எடுத்துக் கொண்டால் உனக்கு என் வலது காது இனாம்!''

''நான் ஏமாந்து போய்விட்டேன் என்கிறாயா?''

''யாரையோ ஏமாற்றுவதற்காக, சந்தர்ப்பத்தை எதிர் பார்த்து, இதைத் தயார் செய்து வைத்துக் கொண் டிருக்கிறாய் என்கிறேன். இன்னும் அசல் வைர முருகன் உன் கைக்கு அகப்படவில்லை என்கிறேன். சரிதானே?''

ஸூவான் உதட்டைக் கடித்துக் கொண்டாள். வேண்டாவெறுப்பாக, ''நீ கெட்டிக்காரன்தான்'' என்று பாராட்டினாள்.

போலிப் பணிவுடன் சிரம் தாழ்த்தினான் ரமணன். ''நன்றி. ஆனால் இதில் கெட்டிக்காரத்தனம் பிரமாதமாக எதுவுமில்லை. இது அசல் வைர முருகனாயிருந்தால், இத்தனை நாள் வைத்துக்கொண்டிருக்க மாட்டாய். இரண்டு பேரைத் தேடிக்கொண்டிருப்பதாகச் சொன்னாயே, அதற்கும் அவசியமிருந்திராது. கடைசி ஊகம்'' கிழவன் பக்கம் கையைக் காட்டினான் -'' அவ்வளவு விலை மதிப்புள்ள பொருளை இவ்வளவு சாதாரணமான ஆள், இத்தனை சுலபமாகக் கொண்டு வரும்படி வைத்திருக்கமாட்டாய்.''

''மூளை கிடுகிடுவென்றுதான் வேலை செய்கிறது உனக்கு.''

''உன்னைப்போலத் தந்திரக்காரர்களுடன் பழகிப் பழகி.''

''இப்போதுதான் எங்களிடம் பழக்கம் ஆரம்பம். இன்னும் நிறையப் பழக வேண்டியிருக்கும். சொல்வதைக் கவனமாகக் கேள்.'' மார்பின் குறுக்காகக் கையைக் கட்டியபடி அவள் நிமிர்ந்து நின்றாள். முன்னைவிடச் சற்று உயரம் போல் அப்போது தோன்றினாள். அறையின் குறுக்கும் நெடுக்குமாக உலாவியபடி பேசினாள்:

''எங்கள் தேசத்தில், எங்கள் அரசாங்கத்துக்கு உதவியாக இருக்க வேண்டிய பொருள் அந்த வைர முருகன். பகைவர்களை அது எப்படி ஒழிக்கும் என்பது எங்களுக்கு மட்டுமே தெரிந்த ரகசியம். பல நூற்றாண்டு களுக்கு முன்பு அது இந்தியாவுக்குக் கடத்தப்பட்டிருக் கிறது. இருபது வருடமாக இங்கே தேடுகிறோம். அதுவும் யார் யார் கையிலோ மாறிக் கொண்டேயிருந்திருக்கிறது. கடைசியில் தமிழ்நாட்டுக்கு வந்திருப்பதாகக் கண்டு பிடித்தார்கள். ஆனால் யாரிடம் இருக்கிறது. என்பது தெரிய வில்லை. அதற்காகவே இரண்டு ஆட்களை நியமித்தோம். அவர்களையும் திடீரென்று கொஞ்ச நாளாய்க் காணோம்.

''கண்டுபிடித்து, கைப்பற்றி, உங்கள் ஊருக்கு எடுத்துப் போய்விட்டார்களோ என்னவோ?'' என்றான் ரமணன்.

''அப்படி இருந்தால் எங்களுக்கு இன்னேரம் ரேடியோச் செய்தி வந்திருக்கும். ஆகவே வைர முருகன் தமிழ் நாட்டில் தான் இருக்கிறது. அதைச் சாமர்த்தியமாகக் களவாடி, இந்தப் போலியை அங்கே வைத்துவிட வேண்டும். எங்கள் நல்ல காலம் அதை நீயும் தேடிக்கொண்டு கிளம்பியிருக்கிறாய். நீ மூளையுள்ள ஆள். கட்டாயம் உனக்குக் கிடைக்கும்.''

''உங்கள் நல்ல காலமா அது? பொல்லாத காலம் என்று சொல். என்னிடம் அது கிடைத்தால் உனக்கென்ன ஆயிற்று?''

சிரித்துக்கொண்டே ரமணனின் முதுகில் தட்டினாள் ஸூவான். ''உன்னிடம் கிடைத்தாலென்ன, என்னிடம் கிடைத்தாலென்ன? உடனே கொண்டு வந்து தராமலிருப் பாயா?''

''கட்டாயம், கட்டாயம்! நீ எனக்குப் படியளக்கிற எஜமானி, பார்! இல்லை, தாலி கட்டிக் கொண்ட தர்மபத்தினி!''

'வானின் முகத்திலிருந்த இனிமை மறைந்தது. பேயின் கொடூரம் பரவியது. கிழவனைப் பார்த்து, ''எடு'' என்றாள். அவன், அந்த நீள வாட்டமான பேழையைத் திறந்தான். ரமணன் எதிர்பார்த்தபடி அதில் இஞ்செக்ஷன் ஊசிதான் இருந்தது. நீல நிறத்தில் சிறிய மருந்துக் குப்பியும் இருந்தது.

''இவனுக்கா, அவனுக்கா?'' என்று கேட்டான் கிழவன்.




சீனக் கிழவனின் கையில் ஊசி இருந்தது. ஊசியின் முனையில், நீல மருந்தின் பொட்டுத் தத்தளித்தது.

''இவனுக்கா, அவனுக்கா?'' இரண்டாம் முறை இளித்துக் கொண்டே கேட்டான் கிழவன்.

ஸூவான் ரமணனையும் தாவூதையும் மாறி மாறிப் பார்த்தாள். ஒரு குறுஞ் சிரிப்பு அவள் இதழ்களில் விளையாடியது. கிழவனைக் கேட்டாள்: ''உனக்குத் தெரியவில்லையா, யாருக்குப் போட்டால் பலன் உண்டு என்று?''

கிழவன், ரமணனின் அருகில் வந்தான். அவனுடைய புஜத்தைப் பிடித்துக் கொண்டான். ''இந்த ஆளுக்கு'' என்றான்.

''முட்டாள்!'' என்றாள் ஸூவான். ''உனக்குத் தெரிந்தது அவ்வளவு தானா!''

''ஏன்? நான் சொன்னதில் என்ன தப்பு?''

ரமணனுக்கு எல்லாம் திகைப்பாயிருந்தன. அவளைப் பரிசோதனைப் பொருளாக, பகடைக் காயாக வைத்தல்லவா விவாதிக்கிறார்கள்! அதில் கலந்து கொள்ளவும் இயலவில்லை. விலகி நிற்கவும் முடியவில்லை. என்னதான். நடக்கப் போகிறதென்று கடைசி வரை பார்த்துவிட வேண்டும். அந்த ஆவலும் ஊறுதியம் மேலோங்கி நின்றன.

ஸூவான், கிழவனிடம் விளக்கினாள் தன் எண்ணத்தை. ''இவன் இருக்கிறானே-'' அவளுடைய குச்சி விரல் ரமணனின் மார்பைக் குத்தியது-- ''படா ஆள். இப்போதுதான் பழகினோம். ஆனால் இவன் சுபாவம் தெரிந்துவிட்டது. தனக்கு என்ன துன்பம் வந்தாலும் பொறுத்துக்கொள்வான். ஆமையின் முதுகில் அடிக்கிற மாதிரிதான். நீ அடித்துக் கொண்டேயிருப்பாய். அது குஷாலாய் இருந்துகொண்டே இருக்கும். அதுபோல, இவனுக்கு ஊசி போடுவாய். பொறுத்துக் கொள்வான். வாயைத் திறக்கமாட்டான்.''

''அதனாலே?''

''அதே துன்பம் இன்னொருத்தருக்கு என்றால்-- மிஸ்டர் ரமணனுக்கு கொஞ்சம் மனச்சாட்சி உண்டு. நம்மாலே பிறருக்குக் கஷ்டம் ஏற்பட்டுவிட்டதே என்று வருத்தப்படுவார். மனம் சங்கடப்படுவார். பிறர் கஷ்டத்தை நீக்குவதற்காக நமக்குக் கட்டுப்படுவார்.''

படபடவென்று கையைத் தட்டினான் ரமணன். ''சபாஷ்! சபாஷ்! ஃபிராய்டுக்கப்புறம் நீதான் பெரிய மனத்தத்துவமேதை!''

ஸ-வான் வெகுண்டாள். ''விளையாடுகிறாயா நிலைமை தெரியாமல்? இந்தப் பையனை என்ன செய்யப் போகிறோமென்று உன்னால் உகிக்கக்கூட முடியாது.''

இவ்வளவு நேரமும் தாஹுதுக்கு எப்படி இருந்தது? அவன் முகத்தைப் பார்த்து ஊகிப்பவர்களுக்கு லட்ச ரூபாய் பரிசளிக்கலாம். அவ்வளவு அமைதி, அவ்வளவு நிதானம்.

''பையனுக்கே போடு.'' கட்டளை பிறந்தது ஸ-வானிடமிருந்து.

தத்தளிக்கும் ஊசி மருந்து தாஹுதின் புஜத்தைத் தொட்டிருக்கும்--

''நில்!'' குறுக்கே நின்றான் ரமணன். ''என்ன மருந்தானாலும் எனக்குப் போடு. என்ன கெடுதலானாலும் எனக்குச் செய்யட்டும். பையன் ஒன்றும் அறியாதவன். சம்பந்தமில்லாதவன்.''

வெற்றிச் சிரிப்பை வெளியிட்டாள் ஸ-வான். ''பார்த்தாயா? என்ன சொன்னேன்?'' கிழவனிடம் மார் தட்டிக் கொண்டாள். ''ஊம், நடக்கட்டும்.''

''டேய்!'' ரமணன் உறுமிக்கொண்டு முன்னே பாய்ந்தான். சுளீர்! பளீர்!

அடித்தவன் ரமணனல்ல. ஸுவானின் கைதான் இடதும் வலதுமாக விளையாடியது. ரமணனின் கன்னத்தில்!

அப்பா! கையா, மின்சாரம் பாய்ச்சிய சவுக்கா! பொறிகலங்கியது. கண்கள் இருண்டன. ஒரு சுழல் சுழன்று நேரானான். அப்படியும் பார்ப்பதைப் புரிந்து கொள்ளப் பல வினாடிகள் பிடித்தன. இரண்டாம் முறை குறுக்கிட முயன்றான்.

மீண்டும் இரண்டு அறை. நாற்காலியொன்றில் சுருண்டு விழுந்தான் ரமணன். இவள் சாதாரணப் பெண்ணல்ல. ஜுடோ மாதிரி ஏதோவொரு ரகசிய முறையைக் கற்றுத் தேர்ந்துள்ள கைகாரி! எங்கே அறைந்தால் பொறி கலங்கும் என்று தெரிந்து வைத்திருக்கும் தந்திரக்காரி.

தாவூதின் குரல் எந்தச் சொப்பன உலகத்திலிருந்தோ கேட்டது! ''அலட்டிக்காதீங்க மாஸ்டர். இந்தப் பூச்சிக் கெல்லாம் நான் பயந்திடமாட்டேன்.''

கண்ணைப் பல தடவை இமைத்துக் கொண்டான். ரமணன். தாவூதின் உருவமா அது? தண்ணீரைக் கலைத்தால் பிரதிபிம்பம் கலைகிற மாதிரி அந்த உருவம் வளைந்து வளைந்து ஓடியது.

''நிறுத்து! நிறுத்து!'' என்று குழறினான். ''உங்களுக்கு வேண்டியது வைர முருகன்தானே? கிடைத்ததும் கொண்டு வந்து தருகிறேன். விடு பையனை.''

ஸ்வான் பெரிதாக நகைத்தாள்: "உன் வாக்குறுதியை ஊர்ஜிதம் பண்ணத்தான் இந்த ஊசி மருந்து. எப்படியும் நீ எங்களிடம் வரும்படி இது செய்து விடும்."

ரமணன் முழுநிதானம் பெற்றபோது - ஊசியை உருவி எடுத்துக் கொண்டிருந்தான் கிழவன். வேலை முடிந்து விட்டது.

உயிரற்ற கட்டைபோல் வெறுந்தரையில் கிடந்தான் தாஹூது. பேச்சு மூச்சைக் காணோம். மார்புக் கூடு மட்டும். ஏறியிறங்கிக் கொண்டிருந்தது. இந்தப் பக்கம் கிழவன். அந்தப் பக்கம் ஸ்வான். மண்டியிட்ட மாதிரி இருவரும் அமர்ந்திருந்தார்கள். கிழவன் ஒரு பழைய பாக்கெட் வாட்சை வைத்துக்கொண்டு நேரம் பார்த்தவா றிருந்தான்.

என்ன பண்ணினீர்கள் அவனை? பாவிகளே! என்னடா செய்தீர்கள்? இப்படிக் கேட்க நினைத்தான் ரமணன். ஆனால் என்ன கத்தினாலும் அவர்களுடைய மௌனத்தைக் குலைக்க முடியாதென்று புலப்பட்டது. இருவரும் கல்லில் வடித்த சிலையாக அல்லவா இருக்கிறார்கள்? நேரம் ஓடியது. ரமணனின் கழுத்திலும் முதுகிலும்வலி கண்டது. விலாவில் வியர்வை, வெள்ளமாய் ஓடியது. முனகலுடன் தாஹூது புரண்டான். அடுத்த நிமிடம் கண்ணைத் திறந்தான். சடக்கென்று எழுந்து உட்கார்ந்தான். நின்றான்.

"சார்! பார்த்தீர்களா? பயந்து போனீங்களே! எனக்கு எதுவுமே நேரவில்லை. நல்லா இருக்கேன்! இந்த ஈ தின்னிப் பசங்களாலே நம்மை அசைச்சுக்கிட முடியாது மாஸ்டர்!" பெருமையுடன் படபடத்தான் பையன்.

ரமணன் வாய் திறக்கவில்லை. தாவூதின் ஒவ்வோர் அசைவையும் கவனித்தான். ஒவ்வோர் உறுப்பையும் ஆராய்ந்தான். அவனுக்கும் ஆச்சரியமாயிருந்தது.

தாவூதிடம் எத்தகைய மாறுதலையும் காணோமே?

இந்த ஒன்றுமில்லாத விஷயத்துக்காக கிழவனும் ஸுவானும் அத்தனை ஆர்ப்பாட்டம் செய்திருப்பார்கள்? அவ்வளவு பீடிகை போட்டிருப்பார்கள்? அவர்கள் ஊசி மருந்து அத்தனை ஏமாளித்தனமாகவா இருக்கும்?

ரமணன் அப்படி நினைக்கவில்லை. ஸுவான், தாவூதின் கையைப் பிடித்தாள் விரல்களை பிரித்தாள். நகத்தின் இடுக்கைப் பரிசோதித்தாள். தலையை அசைத்துப் புன்னகை செய்தாள். ''வெற்றி, வெற்றி'' என்று முறுவலித்தாள்.

இருவரும் சீன முறையில் ஒருவரை நோக்கி ஒருவர் குனிந்தார்கள். வணங்கினார்கள். கைகுலுக்கிப் பாராட்டிக் கொண்டார்கள்.

''நீங்கள் இனிமேல் தாராளமாய்ப் போகலாம். தடையே கிடையாது.'' ரமணனுக்கும் தாவூதுக்கும் வழிவிட்டு ஒதுங்கிக்கொண்டாள் ஸுவான்.

வெகு சாதாரணமாக முடிந்துவிட்ட நிகழ்ச்சியை ரமணன் நம்பத் தயாராயில்லை. ஏதோவொரு பயங்கரம் - கொடுமை - உள்ளூரை நடந்திருக்கிறது. என்ன அது? என்ன அது? அதைத் தெரிந்துகொள்ளாமல் வெளி யேறுவதா! மின் வெட்டில் சுழன்றது அவன் பார்வை. மின்வெட்டாகவே ஒரு திருப்தி - திடீர் மகிழ்ச்சி. வெட்டுப்போலவே அதை மறைத்துக்கொண்டான்.

''வா தாவூது, குபீரெனக் கையிலெடுத்தான் - இத்தனை நேரமும் ஸுவான் மறந்து விட்ட கத்தியை.

கண்ணிமைக்கும் அவகாசம். கிழவனைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டான். கேடயம் போல் அவனைத் தன் மார்புமீது சாத்திக் கொண்டான். கத்தி இப்போது கிழவனின் கழுத்தை நக்கலாயிற்று.

''ஸுவான்! கன்ஃபூஷியஸ் என்ன சொன்னார்? வய்தில் மூத்தவர்களுக்கு மதிப்பு தரும்படி தானே?''

ஸுவான் ஒரு மர்மப் புன்னகையுடன் மௌனமாக இருந்தாள்.

ரமணன் சொன்னான்: ''கிழவர்களின் உயிரைக் காப் பாற்றுவதும் கன்ஃபூஷியஸ் தத்துவத்துக்குள் அடங்கியது தானே? பத்து எண்ணுகிறேன். ஊசி மருந்து என்னவென்று நீ சொல்லத் தவறினால். பாவம் கிழவன்.''

ஸுவானின் புன்னகை பெருஞ்சிரிப்பாக உரு வெடுத்தது. கடகடவென்று நகைத்துவிட்டுச் சொன்னாள்: ''அந்தக் கத்தியிடம் நீ ஏமாந்த மாதிரி நான் ஏமாற மாட்டேன். எனக்குத் தெரியும் - அது வெறும் பிளாஸ்டிக் என்று.''

''என்ன?'' ரமணனின் பார்வை நொடி நேரம் இடம் மாறியது. நொடி நேரம்தான். அந்த அஜாக்கிரதை ஸுவானுக்குப் போதுமான தாயிருந்தது.

ஒரே தட்டலில் கத்தி எகிறியது ரமணனின் கையி லிருந்து. கிழவனும் அதே வினாடி திமிறி விடுபட்டான். ணங்கென்று விழுந்த எஃகுக் கத்தியைப் பாய்ந்தெடுத்துக் கொண்டாள் ஸுவான்.

நீ இத்தனை தூரம் மிரட்டியிருக்கவே தேவை யில்லை. போகும்போது, அந்த ஊசி மருந்தைப் பற்றிச் சொல்லத்தான் நினைத்திருந்தேன். சொல்லாவிட்டால் எனக்கென்ன பிடிப்பு உன்னிடம்?''

தன் மடத்தனத்தினால் தலைகீழாகி விட்ட நிலை மையை எண்ணிப் புழுங்கினான் ரமணன். அதே சமயம், ஸுவானின் பேச்சிலும் கவனம் சென்றது.

அவள் விவரித்தாள்:

''நான்கு மாத காலத்தில் இந்தப் பையன், உலகத் திலேயே மகா கோரமான ஒரு நோய்க்கு ஆட்படுவான். பிறகு எந்த வைத்தியமும், எப்படிப்பட்ட சிகிச்சையும் மீட்க முடியாது.''

''நாயே!'' உறுமிக்கொண்டு முட்டியை ஓங்கினான் ரமணன். நிலைகுலையாது நின்றாள் ஸுவான். ''இப்போது பாய்ந்தென்ன பயன்? கம்மென்று அடங்கி, இனியாவது சொன்ன பேச்சைக் கேள்.''

''மாஸ்டர், நீ சும்மா இரு. பொம்பளை ஜோக் காட்டுறா. நீ அம்பிட்டுக்காதே. எனக்கு ஒண்ணுமில்லை'' என்றான் தாவூது.

''இப்போது ஒன்றும் இருக்காதுதான்.'' அவனைத் தட்டிக் கொடுத்தாள் ஸுவான். ரமணனிடம் மேற் கொண்டு கூறினாள்: ''நாலு மாத அவகாசம் என்று சொன்னேன். நினைவு வைத்துக்கொள். இதற்கு முறி மருந்து என்னிடம் - என்னிடம் மட்டும்தான் - இருக்கிறது. என்ன ரத்தப் பரிசோதனை வேண்டுமானாலும் செய்து பார். இவன் உடம்பில் புகுந்திருக்கிற கிருமி

எப்படிப்பட்டதென்று கண்டுபிடிக்க முடியாது. ஆகவே அதற்கு மாற்று மருந்தும் எவராலும் கொடுக்க முடியாது. அதற்கு நீ என்னிடம்தான் வர வேண்டும். வெறும் கையோடு அல்ல வைர முருகன் காணிக்கையுடன் ஞாபகம் இருக்கிறதா? நாலு மாசம்.''

''உன்னை... உன்னை...'' பல்லைக் கடித்தான் ரமணன். பல்லைக் காட்டினான் கிழவன். ''எங்களை ஒன்றும் பண்ண முடியாது. போலீசில் போய்ச் சொல்லலாம். ஆனால் போலீசாருக்கு வைத்தியம் தெரியாது. எங்களுக்கோ போலீசாரின் தண்டனைகளுக்கு அடிபணியத் தெரியாது. போ! சமர்த்துப் பிள்ளையாய்ப் பிழைக்கும் வழி பார்.''

''நீ போகலாம்'' என்று உத்தரவு கொடுத்தாள் ஸுவான்.

தாவூதின் கையைப் பிடித்துக் கொண்டு கீழிறங்கி வந்தான் ரமணன். 'நான்கிங் ஒட்டல்' சாதுக் குழந்தை போல் அப்பாவி வேடம் போட்டியிருந்தது. ஓசை யில்லாமல் கண்ணியமாய் உணவு அருந்திக் கொண்டிருந் தார்கள் பல பேர். இவர்களில் எத்தனை பேர் உளவாளி களோ! எத்தனை பேர், தேனீர் நன்றாயிருக்குமென்று நம்பி வந்துள்ள அப்பாவிகளோ! அவர்களில் எத்தனை பேர் இந்தச் சதிக்காரச் சுழலில் சிக்கியிருக்கிறார்களோ சிக்கப் போகிறார்களோ!

மவுண்ட்ரோடின் சுதந்திரக்காற்றைச் சுவாசித்தான் ரமணன். பட்டப் பகல், கலகலப்பான பேச்சு, சுயேச்சையான மனிதர்கள் - சற்று முன் வசித்தது வேறோர் உலகத்தில் சற்று முன் கண்டதெல்லாம் கெட்ட கனா; சற்று

முன் கேட்ட பேச்சுக்கள், கற்பனை. இல்லை, நிஜம். அவன் கைப்பிடியில் ஒண்டி நிற்கம் சிறுவன் தாவூது, அவ்வளவும் மெய், மெய்யென்று நினைவூட்டிக் கொண்டிருந்தான்.

ரமணனின் கண் கலங்கவில்லை; குரல் தழுதழுக்க வில்லை. ஆனால் அதில் சோகத்தின் சாயை தென்பட்டது: ''தாவூது, என்னை மன்னித்து விடு. உனக்கு எந்தவித சம்பந்த முமில்லாத விஷயத்தில் உன்னை இழுத்துவிட்டேன்...''

''மாஸ்டர், நான் பயப்படறேன்னு நினைக்காதீங்க. ஆனால், ஏதோ வியாதி, கிருமின்னெல்லாம் அநதப் பொம்பளை சொல்லிச்சே, அது நிசமாயிருக்குமா?'' என்று தாவூது கேட்டான்.

''பொய்யாயிருக்குமென்று தோன்றவில்லை.''

''அப்டீன்னா எனக்கு ரொம்ப சந்தோசம் சார்!'' என்றான் தாவூது. அவனுடைய கள்ளங் கபடமற்ற முகத்தில், பெருமை சுடர்விட்டது. ''நான் உங்களைப் போலப் படிச்சவன் இல்லை, சார். மிலிடரி ஆள் கணக்கா வஸ்தாதும் இல்லை, சார். என் தேசத்துக்காக நான் வேறெப்படி சார் உதவி செய்யப் போறேன்? அந்த ஈ தின்னிப் பசங்க எப்படிப்பட்டவங்க என்கிறதை எல் லாருக்கும் எடுத்துக் காட்ட என் உடம்பு நல்லா உபயோகப் படட்டும் சார். என்னைக் காப்பாத்தறதுக்காக நீங்க கொஞ்சமும் முயற்சி பண்ணாதீங்க.''

ரமணனுக்கு நெஞ்சில் எதுவோ அடைத்தது. பேசுவது. தாவூதல்ல; பிறந்து கொண்டிருக்கும் புதிய சமுதாயத்தின் குரல் அது.

சிறுவனைத் தட்டிக் கொடுத்தான்: ''அடுத்த இரண்டு மாதமும் இந்தத் தைரியத்தை விட்டுவிடாமல் இரு. என் உயிரைக் கொடுத்தாவது உன்னைக் காப்பாற்றுகிறேன்.'' பாண்ட் பையிலிருந்து ஒரு சிறு டிக்கெட் புத்தகத்தை எடுத்தான். தாவூதிடம் தந்தான்.

''என்ன மாஸ்டர் இது?''

''ஒட்டல் அசுவமேதாவில் சாப்பாடு டிக்கெட். தினம் இரண்டு வேளையும் நீ இங்கே போய்ச் சாப்பிட வேண்டியது. எந்தவேலையாவது நீ வரத் தவறினால் எனக்கு அவர்கள் தெரிவித்துவிடுவார்கள். உனக்கு ஏதோ ஆபத்து என்று நான் தெரிந்து கொள்வேன்.''

''அசுவமேதா ஒட்டலா மாஸ்டர்? ஒரு மீல்ஸ் மூணு ரூபாயில்லே, அங்கே?'' தாவூதின் கண்கள் விரிந்தன.

''உனக்கு முன்னூறு ரூபாய் சாப்பாடு கூடப் போடலாம்'' எனறான் ரமணன்.

விட்ட இடத்தில் பத்திரமாய் இருந்தது மோட்டார் பைக். ஸுவானை நினைத்துக் கொண்டு உதை விட்டான். சீறிக்கொண்டு கிளம்பியது. வைர முருகனும் பறக்கும் சிங்கமும் மாறி மாறி அவன் கண் முன் எழுந்தன. நிச்சயம், சுழல்தான் இது. சுகுமாரியின் கொலை - அறிந்தோ அறியாமலோ - அகில உலகச் சதியில் ஓர் அங்கமாகி விட்டது.

மூர்மார்கெட்டருகே, நிற்க வேண்டியதாயிற்று. பாதசாரிகள் சாலையைக் கடந்து கொண்டிருந்தார்கள்.

தற்செயலாகத்தான் கவனித்தான், சாலையைக் கடப்பவர்களை. அத்தனை பேரில், ஒரே ஒரு பாதசாரியின்

உருவம் அவன் கண் வழியே சென்றது; மூளையைத் தாக்கியது.

மறுவினாடி ரமணனின் முகம் கேள்விக் குறியாக மாறியது.



குழந்தைப் பாண்டியன் அறை துப்புரவாயிருந்தது. வாரத்தில் இரண்டு நாள் அதைக் காலோடு தலை புரட்டிவிடுவது நர்ஸ் அம்மணியின் வழக்கம். பக்கத்தி லிருந்து பாத்ரூமிலிருந்து பினாயிலின் நெடிமூக்கைத் துளைத்தது.

''இரண்டு நிமிஷம் தூங்கக்கூட விட மாட்டே னென்கிறாயே, அம்மா?'' என்று குழந்தைப் பாண்டியன் முணுமுணுத்துக் கொண்டிருந்தார்.

''ஸாரி, ஸார்,'' என்றாள் அம்மணி. ''ஈ கொசு தொல்லையில்லாமல் இன்னும் சௌகரியமாய்த் தூங்கலாம் நீங்கள். பார்க்கப் போனால், உங்கள் படுக்கை யைக் கூட மாற்றவேண்டும். ரொம்ப நாளாகிறது.''

''வேண்டாம், வேண்டாம்'' அவசரமாகத் தடுத்தார் குழந்தைப் பாண்டியன். ''என் வேலைக்காரன்தான் இரண்டு நாளைக்கொரு தடவை, உறைகளையெல்லாம் மாற்றுகிறானே? அது போதும். நீ என் பக்கமே வராதே உன்னால் ரொம்ப உபத்திரவமாய்ப் போய்விட்டது!''

நர்ஸ் சிரித்தாள் மெதுவாக. ''சரி, நான் வரவில்லை.'' குழந்தைப் பாண்டியனின் கோபதாபங்கள் நெஞ்சாழத்திலிருந்து வருபவையல்ல. அவளுக்குத் தெரியும். ''மேஸ்திரியொருவர் அடிக்கடி வருவாரே உங்களைப் பார்க்க, அவர் வெகு நேரமாய் காத்திருக்கிறார்'' என்றாள்.

குழந்தைப் பாண்டியன் சூள் கொட்டினார். புது வீடு கட்டும் ஆர்வம் எப்போதோ போய்விட்டது அவரிடமிருந்து. அருமை மகள் சுகுமாரி அங்கே போனதாலல்லவா அநியாயமாய் இறக்க நேரிட்டது? 'தொலைத்துத் தலைமுழுக வேண்டியதுதான்' என்று நினைக்கத் தொடங்கியிருந்தார். ''என்ன பெயிண்ட் அடிக்க வேண்டுமென்று கேட்பதற்காக வந்திருப்பான். அவனுக்கு இஷ்டமானதை அடித்துக் கொள்ளச் சொல்.''

''நான் ஸ்கூலுக்குப் போய்வருகிறேன், அப்பா.'' சொல்லிக் கொண்டு செல்வதற்காக உள்ளே வந்தாள் ரேணுகா. கிளர்ச்சிகள் காரணமாகப் பதினைந்து நாள் மூடப்பட்டிருந்த பள்ளி அன்று திறக்கிறது. ''ஒரு நிமிஷம் இப்படி உட்காரம்மா.'' மன நெகிழ்ச்சியுடன் மகளை அழைத்தார் குழந்தைப் பாண்டியன். அருகிலமர்ந்த பெண்ணின் தலையைக் கோதிவிட வேண்டும்போல் கைகள் குறுகுறுத்தன. இயலாமையினால் கண்ணில் நீர் தளும்பியது.

''நீ முன்போலவே இல்லை ரேணு'' என்றார் குரல் தழுதழுக்க. ''சுகுமாரி உனக்குச் சகோதரியாக மட்டுமிருக்கவில்லை. உயிர்த் தோழியாகக்கூடத்தான் இருந்தாள். அவளைப் பிரிந்தது உனக்குப் பெரிய இடிதான். ஆனால் அதற்காக நீ இப்படி மனம் தளரலாமா?

மலைபோல் பறி கொடுத்த தகப்பன், நானே தாங்கிக் கொள்ளவில்லையா? மனதைச் தேற்றிக் கொள்ளம்மா.''

''ஆகட்டும், அப்பா.''

''எனக்குப் போலீஸ் இலாகாவில் அதிக நம்பிக்கை யில்லை. நீ புத்திசாலித் தனமாக ஒரு காரியம் செய்தாயே, அதுதான் எனக்கு ஒரே ஆறுதல்.''

''எதைச் சொல்கிறீர்கள்?''

''நஞ்சுண்டன் - ரமணன் - நம் வீட்டோடே இருப் பதைத்தான் சொல்கிறனே். ரொம்பப் புத்திசாலித்தனமான காரியம். பார்த்துக் கொண்டேயிரு. அவர்தாம் நம் வஞ்சத்தைத் தீர்க்கப்போகிறார். அவர்தான், சுகுமாரியைக் கொன்றவைனப் 'பழிக்குப் பழி வாங்கப் போகிறார்.'' குழந்தைப்பாண்டியன் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்.

''அப்பா...'' என்றாள் ரேணுகா. அதற்குமேல் சொற்கள் வராமல் தொண்டையில் சிக்கின. அவள் செய்த மாபெரும் மடத்தனத்தை அப்பா பாராட்டுகிறார். பச்சைப் பாம்பை வீட்டில் அழைத்து வந்தவள் அவள். பாலும் பழமும் தருகிறவள் அவள். அடுத்து யாரைத் தீண்டப் போகிறதோ அது என்று திகில் பட்டுக் கொண்டிருப்பவள் அவள். அவள் வேதனை அவளுக்குத்தான் தெரியும்.

''என்னம்மா ரேணுகா? சும்மா சொல்லு, மனசிலிருப் பதை'' என்று குழந்தைப் பாண்டியன் தூண்டினார்.

மகள், தந்தையை ஏறிட்டு நோக்கினாள். ஒரே சமயத்தில் இருவர் மனத்தினுள்ளும் ஒரே எண்ணம்தான் ஓடியது: சுகுமாரி போன பின்னர். நாம் தான் ஒருவருக்கொருவர் இருக்கிறோம்.

நான் மனசிலிருப்பதைச் சொல்வது இருக்கட்டும். நீங்கள் எவ்வளவு தூரம் அப்படி இருக்கிறீர்கள்?'' என்று வினவினாள் ரேணுகா.

''ஏனம்மா அப்படிக் கேட்கிறாய்?''

''இதனால்தான்.'' இடுப்பில் செருகியிருந்த ஒரு இன்லண்ட் தபாலுறையை எடுத்து நீட்டினாள் தந்தையிடம். ''பாபனாசம் பட்டாமணியத்திடமிருந்து கடிதம் வந்திருக்கிறது, அப்பா.''

குழந்தைப் பாண்டியனின் கண்கள் இடுங்கின. ''நர்ஸ்!'' என்று கூப்பிட்டார், கடுமையான குரலில்.

''அவளைக் கோபிக்காதீர்கள், அப்பா. உங்களுக்கு வருகிற கடிதங்களை நேரில் உங்களிடம்தான் கொடுக்க வேண்டும் என்று தபால்காரரிடம் சொல்லச் சொல்லியிருந்தீர்கள். அம்மணியும் சொல்லிவிட்டாள். நான்தான் சற்றுமுன் தபால்காரரைப் பார்த்தேன். நீங்கள் தூங்கிக் கொண்டிருந்ததால் வாங்கிக் கொண்டேன்.''

கீழுதட்டைக் கடித்துக் கொண்டு சற்று மௌனமாக இருந்தார் குழந்தைப் பாண்டியன். ரேணுகாதான் நிசப்தத்தைக் கலைத்தாள். ''நீங்கள் இப்படி நோய்ப் படுக்கையில் விழுந்து பல வருடமாகிறது. இத்தனை நாளும் நானோ சுகமாரியோ தானே உங்களுக்காகக் கடிதங்கள் எழுதுவது வழக்கம்? பதில்களும் எங்களுக்குத் தானே வருவது வழக்கம்.''

''ஆமாம். ஆனால் பட்டாமணியத்திடம் சில தகவல்கள் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது. அதனால்

யாரிடமும் சொல்லாமல் நானே ரகசியமாகக் கடிதம் எழுதிப் போட்டேன். பதிலும் எனக்கே வந்திருக்கிறது.''

''நீங்களே எழுதினீர்ளா?''

''ஆமாம். ஒற்றையொற்றை வரியாக எழுதி, எட்டு நாளில் முடித்தேன். வைர முருகனைப் பற்றியும் பாபனாசம் மைனர்களின் குடும்பத்தைப் பற்றியும் சில சந்தேகங்கள் இருந்தது எனக்கு அதைப் பற்றிக் கேட்டிருந்தேன். அது சம்பந்தமாய்த்தான் பதில் வந்திருக்கும். பிரித்துவிட்டாயா?''

''அந்தக் காரியத்தை மட்டும் செய்யவில்லை, அப்பா.''

''பரவாயில்லை, பிரித்துப் படி.''

''நான் தெரிந்துகொள்ள ஆசைப்படவில்லை. பிரித்து, உங்கள் கண் முன்னால் பிடிக்கிறேன். நீங்கள் படித்துக் கொள்ளுங்கள்.'' என்றாள் ரேணுகா.

''தேவையில்லை. நீயேபடி'' என்றார் குழந்தைப் பாண்டியன். அதன் பின்னரும் ரேணுகா தயங்கினாள்.

''நான் இருக்கிறேனே என்று யோசிக்கிறாயா?''-வாசல் புறத்திலிருந்து குரல் வந்தது.

நிலைப்படியில் சாய்ந்தவாறு நஞ்சுண்டன்தான் நின்றிருந்தான்.

''நீயும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம்தான்.'' தலையை அசைத்து. அவனை உள்ளே வந்து அமருமாறு சாடை காட்டினார் குழந்தைப் பாண்டியன். ''வைர முருகனைப் பற்றி உனக்கு ரேணுகா எல்லாம் சொல்லி

யிருப்பாளே? பாபனாசம் பட்டாமணியத்துக்கு அதைப் பற்றி ரகசியமாக எழுதியிருந்தேன். நீ ஒரு துப்பறியும் வீரன் இந்த வீட்டிலேயே இருப்பது அப்போது எனக்குத் தெரியாது. அதனால் எழுதினேன். பதில் வந்திருக்கிறது... ரேணு, நீ படியம்மா.''

''எனக்கு ஸ்கூலுக்கு ரேநமாகிறது, அப்பா.'' எழுந்து கொண்டாள் ரேணுகா. ''முக்கியமான கடிதம் என்கிறீர்கள். ரகசியமான கடிதம் என்றீர்கள். நாங்கள் போகிறோம். நர்ஸைப் பிரித்துத் தரச் சொல்லி நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்.''குழந்தைப் பாண்டியன் சிரித்தார். ''நஞ்சுண்டனுக்கு மிஞ்சி ஒரு ரகசியம் இருக்கலாமா ரேணுகா? இருக்கத்தான் முடியுமா?'' நஞ்சுண்டனின் பொறுமையின்மை கொஞ்சம்கூட வெளித்தெரியவில்லை. ''உண்மைதான். நீங்கள் என்னிடம் எதையும் ஒளிக்காமலிருப்பது உங்களுக்கேதான் நல்லது.'' ரேணுகா விடமிருந்து உறையை வாங்கிக் கொண்டான். விரலை விட்டுக் கிழித்து பிரித்தான் படித்தான்.

''உங்கள் கடிதம் கிடைத்தது. உங்கள் குடும்பத்தில் நேரிட்ட விபத்து பெரிய மைனர், சின்ன மைனர் இருவரையுமே கலக்கிவிட்டது. வைர முருகனை உங்களிடம் கொடுத்து வைத்ததால்தான் இந்த ஆபத்து நேரிட்டது என்று வருத்தப்படுகிறார்கள். இனியும் அதைத் தங்களிடம் விட்டு வைத்தால், மேலும் பல ஆபத்துக்கள் நேரக்கூடுமோ என்று பயப்படுகிறார்கள். ஆகவே அதைப் பெற்றுச் செல்ல அவர்கள் இருவருமோ அல்லது ஒருவரோ அங்கே வருவார்கள். அவர்களிடம் வைர முருகனைச் சேர்ப்பித்து விடுங்கள். தாங்கள் கேட்டுள்ள சந்தேகங்களையும் அவர்களே தீர்ப்பார்கள்.''

''அப்'' என்று ஆரம்பித்தாள் ரேணுகா. ஆனால் நஞ்சுண்டனின் பார்வையைச் சந்தித்ததால் அத்துடன் நிறுத்திக் கொண்டாள்.

''சொல்ல வந்ததைச் சொல்லிவிடு. ரேணுகா'' என்றான் நஞ்சுண்டன்.

குழந்தைப் பாண்டியன் திகைத்தார். ''என்ன... என்ன சொல்ல வந்தாள்?''

நஞ்சுண்டனே கூறினான்: ''வைர முருகனை வாங்கிப்போக வரப்போகிறார்களல்லவா?''

''ஆமாம்.''

''அவர்களிடம் எப்படிக் கொடுப்பீர்கள்?''

''ஏன்? எடுத்துத் தர வேண்டியதுதான்''

''அதுதான் எப்படி...'' என்றவனை ரேணுகா இடை மறித்தாள். ''வேண்டாம். அப்பாவுக்கு அதிர்ச்சி தாங்காது.''

''பரவாயில்லை, சொல்லு'' குழந்தைப் பாண்டியனின் முகம் அமைதியாகவே இருந்தது.

''அப்பா அந்த வைர முருகனை காணோம், அப்பா.

குழந்தைப் பாண்டியன் நிதானமாக, ''ஊம், அப்புறம்?'' என்றார்.

''அது... அது... அதிர்ச்சியாயில்லையா உங்களுக்கு? வைர முருகன் காணாமல் திருட்டுப் போயிருக்கிறது, அப்பா!...''

''உன் ஊகம் - அல்லது நஞ்சுண்டனின் ஊகமா யிருந்தால், அது முற்றிலும் தப்பு. வைர முருகன் திருட்டுப் போகவில்லை. பத்திரமாக இருக்கிறது.''

சடக்கென்று நிமிர்ந்து உட்கார்ந்தான் நஞ்சுண்டன். அவன் முகம் அக்கினிப் பிழம்பாக பளபளத்தது, பேராசை யால். ஆனால் அதைக் கவனித்தவள் ரேணுகா ஒருத்திதான். தந்தை நிஜமாகத்தான் சொல்கிறாரா அல்லது ஏதேனும் தந்திரமா? அவளால் கண்டுபிடிக்க முடியவில்லை.

நஞ்சுண்டன் புன்னகை புரிந்தான். ''ரொம்ப நன்றி என்னுடைய அனாவசியக் கவலைகளில் ஒன்றைக் குறைத்து விட்டீர்கள். சரி, வைர முருகன் இப்போது எங்கே, யாரிடம் இருக்கிறது என்பதையும் சொல்லி விடுங்கள்.''

புதிர்ப் புன்னகையொன்று முளைத்தது குழந்தைப் பாண்டியனின் உதட்டிலை. ''எனக்கென்றும் ஒரு ரகசியம் இருக்க வேண்டாமா? பாபனாசம் மைனர்கள் வரட்டும். அப்போது சொல்கிறேன்.''

''நீங்கள் ரொம்ப அழுத்தமானவர் தான்'' என்று சிரித்தாற் போல் சொல்லிவிட்டு நஞ்சுண்டன் வெளியே வந்தான். ரேணுகா, உடனே அவனைப் பின்தொடர வில்லை. சிலிநிமிடங்கள் கழித்தே வந்தாள்.

''பாலசந்தரிடம் உனக்குள்ள காதல் இவ்வளவு சீக்கிரம் குறைந்துவிடும் என்று நான் நினைக்கவில்லை.'' என்றான் நஞ்சுண்டன்.

''அது குறையவில்லை. எப்போது போல்தான் இருக்கிறது.''

''அப்படியா!'' நஞ்சுண்டனின் புருவங்கள் நெற்றிக்கு ஏறின. ''கொஞ்சம் முன்னால், உன் அப்பா எதிரில் நீ நடந்து கொண்ட விதம் அப்படிக் காட்ட வில்லையே! என் மீது வெறுப்பைக் கொட்டுற மாதிரி யல்லவா இருந்தது உன் பேச்சும் பார்வையும் பாலசந்தரைக் காப்பாற்ற வேண்டுமென்ற அக்கறைக்கு அறிகுறியா அது!''

பல்லைக் கடித்துக்கொண்டு பேசாதிருந்தாள். ரேணுகா. நஞ்சண்டன் தொடர்ந்தான்: ''உனக்குக் கொடுத்த கெடு நெருங்கிக் கொண்டேயிருக்கிறது. என் லேடஸ்டு சந்தேகம் என்னவென்றால், வைர முருகன் எங்கேயிருக்கிறதென்று உனக்கு நன்றாகத் தெரியும்...''

''இல்லை! என்னை நம்பு. சத்தியமாய் எனக்குத் தெரியாது'' என்று குறுக்கிட்டாள் ரேணுகா. ''அப்படி யானால் சீக்கிரமாய்த் தெரிந்துகொள். அவ்வளவுதான் சொல்வேன்'' சிகரெட்டைக் கூழாகத் தேய்த்துவிட்டு அகன்றான் நஞ்சுண்டன்

ரேணுகாவின் உள்ளம் புலம்பியது. பாலசந்தர்! உங்கள் பிடிவாதத்தினால் தாமே இத்தனை சிக்கலும்! நீங்கள் குறற மற்றவர் என்பதற்கு நீஙகளே ஆதாரம் தர முடியும். ஏன் தர மறுக்கிர்கள்? உங்கள் ஆருயிர்க் காதலியிடம்கூட உண்மையைக் கூறக் கூடாதா?

பாலசந்தரை மீண்டுமொருமுறை சந்திக்கலாமா? அந்த எண்ணத்துடன்தான் ரேணுகா புறப்பட்டாள்.

மூர் மார்கெட்டினருகே பாதையைக் கடக்கும்போது.

யாரந்தக் குறுந்தாடி இளைஞன்? மோட்டார் பைக்கில் ஒரு காலும். தரையில் ஒரு காலுமாக இருக்கும் அவன், தன்னை ஏன் முறைக்கு வேண்டும்?

ரேணுகா வேகமாய் நடந்தாள். சிறிய நடை பாதையில் ஏகப்பட்ட நெரிசல். கும்பலோடு கும்பலாய்க் கலந்துவிட்டோம் என்ற திருப்தி ஏற்பட்டது. ஆயினும் திரும்பிப் பார்த்த போது-! அவன் அவளைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தான். மோட்டார் பைக்கை எங்கோ நிறுத்திவிட்டு நடந்து வருகிறான் போலும்,

கூவம் பாலத்தைக் கடந்தாள். அவன், அவள் தோளை இடித்தாற்போல் வந்துவிட்டான்.

''பயந்து ஓடாதே, ரேணுகா. நான்தான் ரமணன்'' என்ற குரல் அவள் காதில் இதமாக விழுந்தது. சட்டையின் உட்புறத்திலிருந்து, போலீஸ் அத்தாட்சியையும் அவன் காட்டினான். ஆச்சரியத்துடன் பேச வாய் திறந்தாள் ரேணுகா.

''இங்கே வேண்டாம். ஸெண்டிரல் ஸ்டேஷன் தான் சரி. அந்தக் கூட்டமும் இரைச்சலும் நம் பேச்சுக்குச் சௌகரியமாயிருக்கும். வா'' என்றான் ரமணன். இருவரும் ஸென்டிரல் ஸ்டேஷனின் ஜனத்திரளுக்குள புகுந்து கலந்தார்கள். யாரோ பிரயாணியைத் தேடுகிற மாதிரி இருவரும் நடந்தார்கள் பிளாட்பாரத்தில் குறுக்கும் நெடுக்குமாக.

ரமணன் எதுவும் பேசவில்லை. ரேணுகா தன், மனச் சுமை மொத்தத்தையும் இறக்கினாள். தன் ரட்சகன் என்று முதன் முதலில் யாரை நம்பிச் சென்றாளோ,

அவனேயல்லவா வந்துவிட்டான்! விரைவில் பாபனாசம் மைனர்கள் வரப்போகிறார்கள், வைர முருகனை வாங்கிச் செல்ல என்பதுவரை நடந்த அனைத்தையும் ஒப்பித்தாள்.

ரமணன் அபயம் கொடுத்தான்: ''சரி, நீ வீட்டுக்கு திரும்பு. பாலசந்தரைப் பார்ப்பதால் ஒரு பயனுமில்லை. நஞ்சுண்டனுக்கு எதிராக எதுவும் செய்யாதே. கம்மென்றிரு. அவன் என்ன சூழ்ச்சி செய்தாலும் ஆட்சேபிக்காதே. எதிர்க்காதே தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளாதே.''

ரேணுகா அவநம்பிக்கை கொள்ளவில்லை. ரமணனின் அமைதி, அவளுக்கு மலைபோன்ற தைரியத்தைத் தந்தது. இந்தக் குறுந்தாடிக்காரன் ஆரம்ப முதலே எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டல்லவா இருந்திருக்கிறான்? அந்தப் பிரமிப்புடன் திரும்பிச் சென்றாள்.

ரமணனும் வீடு திரம்பினான். ''அப்பாவு!'' கட்டிலில் கால் நீட்டிப் படுத்தவாறு கூப்பிட்டான் தன் காரியதரிசியை. ''நான்கிங் ஓட்டலுக்கு டெலிபோன் பண்ணு. மிஸ் ஸூவான் இருக்கிறாளா, கேள்.''

''ஐய! சீனாக்காரங்களையா கூப்பிடச் சொல்றீங்க? தேனிக்கோசரம்?'' என்று அப்பாவு அருவருத்தான். ''அப்பாவு! சின்னப் பையனொருவன் இரண்டு வஸ்தாதுகளை வீழ்த்திய கதை தெரியுமா உனக்கு?''

''தெரியாது, சார்.''

''ஒளிந்துகொண்டு இரண்டு வஸ்தாதுகளின் மேலும் மாறி மாறிக் கல்லெறிவான் அந்தப் பையன். இவன் எறிகிறானென்று அவனும், அவன் எறிவதாக இவனும் நினைத்து, வஸ்தாதுகள் ஒருவரை யொருவர் அடித்துக்

கொள்வார்கள், கடைசியில் இரண்டு பேரும் சாவார்கள்.''

''ஆ மாரி?''

''இப்போது நான்தான் அந்தச் சிறுவன்'' என்றான் ரமணன்.



''அப்படீன்னா, நஞ்சுண்டனுக்கும் சீனாக் காரனுக்கும் முடிஞ்சிடப் போறீங்க?'' என்றான் அப்பாவு.

''அதே'' என்றான் ரமணன். ''நீ'' நான் சொன்னதைச் செய். நான்கிங் ஓட்டல் நம்பர் தெரியுமா?''

''அதுதான் டைரக்டரியைப் பார்க்கிறேனே?'' சலித்துக் கொண்டே பக்கங்களைப் புரட்டினான் அப்பாவு.

ரமணன் புன்னகை செய்தான்: ''கோபிக்காதே. என் எண்ணத்தைச் சொல்லிவிடுகிறேன். அந்த வைர முருகனை எப்படியும் நஞ்சுண்டன் கண்டு பிடிக்கத்தான் போகிறான். குழந்தைப் பாண்டியனின் வீட்டோடு இருப்பதால், அவனால்தான் அந்தக் காரியம் முடியும். புரிகிறதா?''

''புரியுது. அவ்வத்தாலே?''

''வேலை முடிந்ததும் அவன் கம்பி நீட்டிவிட்டால்? ஸுவானும் ஒரு கண் வைத்திருக்கட்டும். வைர முருகன் இவன் கையிலிருந்து அவள் கைக்கு மாறுகிற சமயத்தில் நான் நுழைந்துகொள்கிறேன்.''

''கொக்கு தலையிலே வெண்ணெய் வைச்ச மாதிரி இருக்குது!'' டொக் டொக்கென்று போனைத் தட்டினான் அப்பாவு; ''ஏரா இதிகஷ்டம்? ஒரு சத்தமும் இல்லையே?''

ரமணன் ரிஸீவரை எடுத்துக் கேட்டான். டயல் சத்தமே காணோம். ''அவுட் ஆஃப் ஆர்டர் போலிருக்கிறது. பக்கத்துக் கடைக்குப் போய் ஒரு கம்ப்ளையிண்ட் கொடுத்துவிட்டு வா.''

அப்பாவு புகார் கொடுத்துவிட்டுத் திரும்பினான். சில நிமிடங்களுக்கெல்லாம் டெலிபோன் துறை சிப்பந்தி யொருவர் வந்தார். ''என்ன சார் டிரபிள்?'' என்று கேட்டு விட்டுச் சரி செய்தார்.

காத்திருந்தான் ரமணன். சரியாகிவிட்டதா என்று செக் செய்வதற்காக, டெலிபோன் ஊழியர் ஒரு நம்பரைச் சுழற்றினார்: ''ஆமாம் சார்... நான்தான் லைன்மேன் வெங்கடாசலம் பேசுகிறேன்... நேற்று டியூட்டிக்கு வர முடியலை, சார். வீட்டிலே, பாவம், ஒரு கிழவர்... நான் போட்டால் தான் இரண்டு உருண்டையாவது சோறு தின்கிறார், சார். நேற்று ரொம்ப ஜாஸ்தி கலாட்டா... நேரில் வந்து சொல்றேன் சார்.'' போனை வைத்தார் ஊழியர். ரமணனின் பக்கம் திரும்பினார். ''சரியாகிவிட்டது. சார்.''

இரண்டு ரூபாயை நீட்டினான் ரமணன்.

''வழக்கமில்லை, சார். மன்னியுங்க'' என்றார் அந்தச் சிப்பந்தி.

''உன் தாத்தாவோ யாரோ உடம்பு சரியில்லை என்று சொன்னாயே? அவருக்கு நாலு சாத்துக்குடி வாங்கி எடுத்துப் போ'' என்றான் ரமைணன். ''பரவாயில்லை, சார்.

வேண்டாம்.'' என்றார் அந்த ஊழியர். ''அவர் என் தாத்தா இல்லை, சார். பக்கத்து வீட்டுக்காரர். டாக்டர் பாலசந்தர்னு கேள்விப்பட்டிருக்கிறீங்களா?'' அப்பாவுவும் ரமணனும் அவசரமாகப் பார்த்துக் கொண்டார்கள்.

''ஒரு பெண்ணைக் கொலை செய்ததாக...? ரமணன் தெரியாத மாதிரி கேட்டான்.

''அவரேதான். அவரோட மாமா இந்தப் பெரியவர். ஆனால் டாக்டரோடு இல்லை. எங்க வீட்டுக்கு அடுத்த வீட்டிலே தனியா இருக்கிறார். இவர்தான் அந்த டாக்டரை வளர்த்து, படிக்க வைச்சு, காப்பாத்தினாராம். டாக்டரை ஜெயில்லே போட்ட அன்னைக்கு, பித்துப் பிடிச்சவர் மாதிரி ஆனவர்தான் - பாவம் அப்படியே பொம்மைக் கணக்கா இருக்கிறார். யாராச்சும் கட்டாயப்படுத்திச் சாப்பிடச் சொன்னால்தான் உண்டு. எனக்குக் கொஞ்சம் கட்டுப்படுவார்...''

''உன் விலாசத்தைக் கொடு. நான் வந்து பார்க்கிறேன்.'' என்றான் ரமணன். ''நான் வைத்தியனல்ல. இருந்தாலும் எந்த வைத்தியரிடம் காட்டலாமென்று யோசனை சொல்வேன்.''

கட்டாயம் வாங்க சார்.'' டெலிபோன் ஊழியர் ஒரு காகிதத்தில் தன் முகவரியைக் குறித்துத் தந்தார். ''பெரியவரைப் பார்த்தால் ரொம்ப பரிதாபமாய் இருக்குது.''

''நான் வருகிறேன்'' என்று ரமணன் மீண்டும் உறுதியளித்தான். ஊழியர் போய்விட்டார்.

அப்பாவு பொறாமை ததும்பும் குரலில், ''அதிர்ஷ்டக்காரர்!'' என்றான் ரமணனை நோக்கி.

''எவனோ வந்து என்னவோ தகவல் கொடுத்திட்டுப் போறான், பாருங்களேன்!''

''துப்பறியும் தொழில் என்றாலே அப்படித்தான். பாதி திறமை, பாதி அதிர்ஷ்டம்... நீ நகர்ந்து கொள். ராசியில்லை.

அப்பாவுவிடம் ஒப்படைத்த வேலையைத் தானே ஏற்றுக் கொண்டான் ரமணன்.

ஓட்டல் நான்கிங்கில் மணி அடிப்பது கேட்டது.

''மிஸ் ஸூவான்? உன் அருமை நண்பன் ரமணன் பேசுகிறேன்.''

''உறவு, உரிமை எதுவும் தேவையில்லை. விஷயத்துக்கு வா'' என்றாள் ஸூவான்.

''வந்தேன். கடைசியாக உனக்குக் கிடைத்த தகவலின்படி, வைர முருகன் எங்கே இருக்கிறது?''

மறுமுனையில் மௌனம். ஸூவான் யோசிக்கிறாள் போலும்.

''தயங்காமல் சொல்லு. உனக்குத் தான் நன்மை.''

ஸூவான் பதிலளித்தாள்: ''தஞ்சாவூர் ஜில்லாவில் ஒரு மிராசுதார் குடும்பத்தில் இருந்ததாகக் கேள்வி.''

''அதற்கப்புறம் உன் ஆட்கள் எவ்வித தகவலும் தரவில்லை?'' ''ஊகூம். அவர்கள் அத்தோடு காணாமல் போய்விட்டார்கள்.''

''ஸூவான்! நீ போன நூற்றாண்டில் இருக்கிறாய்! குழந்தைப் பாண்டியனைத் தெரியுமா?''

''குழந்தை...?''

''நஞ்சுண்டன் என்றாவது?''

''நஞ்சு...?''

''கவனமாய்க் கேள்'' என்று ரமணன் சொல்லத் தொடங்கினான். அன்று இரவு அதற்கப் பலன் கிடைத்தது.

தொற்றிக்கொண்டிருக்கும் சிகரெட்டிலிருந்து புகைக் கம்பி பறந்தது. கால்சராயில் கை விட்டபடி சென்று கொண்டிருந்தான் நஞ்சுண்டன். அதுதான் கையிலிருந்து கடைசி சிகரெட். அடுத்த பாக்கெட் வாங்கிவரச் சொல்லலாமென்றால், இரவு பதினொரு மணிக்கு எந்த வேலைக்காரன் விழித்துக் கொண்டிருக்கிறான்? சாலைத் திருப்பத்தில் இருந்த கடை பூட்டியிருந்தது. அடுத்த தெருவில் ஒரு கடையைக் கண்டதாக நினைவு. மேலும் நடந்தான். வீட்டிலிருந்து புறப்பட்டது முதல் ஒரு டாக்ஸி தன்னைப் பின்தொடர்வது அவனுக்குத் தெரியாது. தயங்கித் தயங்கி வந்தது அந்த வண்டி. டிரைவரும், அவன் பக்கத்தில் அமர்ந்திருந்தவனும் மிக எச்சரிக்கையாக ஓட்டி வந்தார்கள்.

நஞ்சுண்டன் மேலும் சில கெஜ தூரம் போயிருப் பான். சட்டென்று வேகமெடுத்த டாக்ஸி, அவனை உராய்ந்தாற் போல் நின்றது.

டாக்ஸியோட்டியின் குரல் மிகப் பணிவாக இருந்தது. ''ஸார், சற்று முன்னால் டாக்ஸியில் வந்து இறங்கிக் கொண்டவர் நீங்கள்தானே?''

''நோ.'' அழுத்தமாகக் கூறிவிட்டு நடையைத் தொடர்ந்தான் நஞ்சுண்டன்.

தயங்கிய டாக்ஸி மறுபடி ஒரு தாவலுடன் அவனை நெருங்கியது. ''மன்னிக்கணும், சார். உங்களைப் போலவே

இருந்தார் அவர். தெருக்கோடியில் இறங்கிக்கொண்டு விட்டார். ஸூட் கேஸைப் பின் ஸீட்டிலேயே வைத்து விட்டதால் கேட்டேன். கொஞ்சம் முன்னால்தான் கவனித்தேன் அதை.''

''ஸூட் கேஸா?'' நஞ்சுண்டனுக்கு ஆவல் பிறந்தது. ''எங்கே, காட்டு,''

''இதோ ஸார்.'' பின் ஸீட்டுக் கதவைத் திறந்துவிட்டான். ''உள்ளே பாருங்கள்.''

நஞ்சுண்டன் தலையை உள்ளுக்கு நீட்டினான். அவ்வளவுதான் அவனுக்குத் தெரியும். இடிபோல ஓர் அடி அவன் பின் மண்டையில் இறங்கியது. ''அம்மா! செத்தேன்!'' என்று அலறுவதாக நினைத்துக் கொண்டான். ஆனால் அப்படி அலறு முன்பே மயக்கம் அவனை ஆட்கொண்டது.

தள்ளாடித் தொய்ந்தவனைச் சரக்கென்று இழுத்துப் போட்டுக் கொண்டது பின் ஸீட்டிலிருந்த இன்னோர் உருவம். படக். கதவும் சாத்திக் கொள்ளப்பட்டது. டர்ரென்று தவ்விப் பாய்ந்தது டாக்ஸி. வெகு நேரம் கழித்து நினைவு திரும்பியது. மண்டையில், அப்பப்பா! என்ன குடைசல்! என்ன தெறிப்பு! கண்ணையே திறக்க முடிய வில்லையே!

கஷ்டப்பட்டு இமைகளை விலக்கிக் கொண்டான். ஒரு நாற்காலியில் உட்கார்த்தி வைக்கப்பட்டிருப்பது தெரிந்தது. மேஜையில் ஒரு மெழுகுவர்த்தி, கிழவன் போல் ஆடி ஆடித் தளர்ந்து கொண்டிருந்தது. மேஜை, அருகில்தான் இருந்தது. இருந்தாலும் அந்த மஞ்சள் சுடர் ரொம்பத் தூரத்திலிருந்து வருகிற மாதிரி ஒரு பிரமை. கையும் காலும் கட்டுண்டிருக்கவில்லை. சுதந்திரமாகவே

இருந்தன. ஆனால் எழுந்து நடமாட முடியாத மாதிரி ஓர் அசதி.

சுற்றிலும் இருள்: தனிமை; நிசப்தம். என்ன இடம் இது? நஞ்சுண்டனால் ஊகிக்க முடியவில்டலை. யாரா யிருக்கும் அவனை மடக்கியயவர்கள்? சென்ற பல ஆண்டு களில் அவனுக்கு முளைத்த விரோதிகளின் எண்ணிக்கை கணக்கிலடங்கா. எந்தெந்த இடுக்குகளில் எந்தெந்தப் பகைவன் ஒளிந்திருக்கிறானோ - சந்தர்ப்பம் கிடைக்கும் போது தாக்குவதற்கு?

யோசிப்பதுகூட மூளையை வலிக்க வைத்தது. கை விரல்களைக் கோத்துக் கொண்டான். கண்ணை மூடிக் கொண்டான். தன்னாலே களைப்புத் தீரட்டும் என்று காத்திருந்தான்.

கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது. யாரோ பின்னால் வந்தார்கள். ''இந்தா, குடி'' என்று அவன் வாய்க்கு நேரே ஒரு கிளாஸை நீட்டினார்கள்.

சூடான தேனீரின் ஆவியும் மணமும் அவன் முகத்திலடித்தன. அரையிருட்டில் முகம் தெரியவில்லை; ஆணின் குரல்தான். ஆனால் வாலிபமாகத் தோன்ற வில்லை. தளர்ந்த கிழட்டுக் குரலுமல்ல. தேனீர் கிளாஸை வாங்கிக் கொண்டான். சுரீலென்று கையில் சுட்டது. அம்மாடி! எத்தனை சூடு!

நஞ்சுண்டனின் மூளை சுற்றுப் புரண்டு கொடுத்தது. ஓசையிலிருந்து இவன் ஒருவன்தான் வந்திருக்கிறானென்று தெரிகிறது. வெளியே யிருந்து வேறு சந்தடியே காணோம். ஆகவே எங்கோ காதில் விழாத தொலைவில்தான் இந்த அறை இருக்கிறது... ''ஊம். குடி!'' எதிரிலிருந்தவன் அதட்டினான்.

மின்னல்போல் நஞ்சுண்டன் வீசினான் கிளாஸ் டம்ளரை.

கொதிக்கத் கொதிக்கவிருந்த தேனீர் அந்த ஆளின் முகத்தை நனைத்தது.

''ஆ'' பின்னடைந்தவன், வழியும் தேனீரைத் துடைத்துக் கொண்டான். நஞ்சுண்டன் மீது பாய வந்தான். அந்த அளவுக்கு அவகாசம் தரவில்லை நஞ்சுண்டன்.

முந்திக்கொண்டு, மோதி வீழ்த்தினான் தரையில். அவனுடைய சட்டையை டர்ரென்று மார்புப் பக்கத்தில் கிழித்தான். முதுகுப் பக்கத்தில் மடித்தான். முடிச்சிட்டான், கைகளை அசைக்க முடியாதபடி. தன் கைக்குட்டையால் அவன் வாயையும் அடைத்தான்.

காலை உதைத்துக் கொண்டு அவன் சுற்றிச் சுற்றி உருண்டான். அதற்குமேல் எதுவும் செய்ய முடியவில்லை.

நஞ்சுண்டன் நிதானித்தான். கதவு திறந்து கிடந்தது. வாசல் பக்கமாகவே போகலாம். ஆனால் வெளியேறும் வழியில் யாராவது எதிர்ப்பட்டால்?

ஜன்னலைத் திறந்து பார்த்தான். இது மாடி அறை என்பது தெரிந்தது. கையை நீட்டினான். ஏதோ ஒரு மரத்தின் கிளைகள் அவனைத் தொட்டன. கம்பியில்லாத ஜன்னல் அது. மெல்ல வெளியே காலை வைத்தான். ஒரு விளிம்பு தட்டுப்பட்டது. உள் பக்கம் பிடித்துக் கொண்டு மற்றக் காலையும் வெளிக் கொணர்ந்தான். காலால் துழாவினான். ஒரு குழாய் அகப்பட்டது. சாக்கடைக் குழாய் போலும். இரு கைகளாலும் அதைப் பற்றிக் கொண்டான். கால்களால் அணைத்துக் தழுவிக்கொண்டு, சரசரவென்று கீழிறங்கினான்.

தரையைக் கால் கொட்டதுதான் தாமதம்.

குபீரென்று ஒரு கற்றை வெளிச்சம் அவன் முகத்தில் மோதியது. டார்ச் விளக்கின் வெளிச்சம்!

''வருக!'' என்றது ஒரு பெண் குரல். ''என் பெயர் ஸுவான். இவர்தான் என் மாமா... மாமா! இவர்தான் மிஸ்டர் நஞ்சுண்டன்.''

விளக்குப் படக்கென்று அணைந்தது. ஆகாயத்திலிருந்த அரைச் சந்திரனின் ஒளியில் நஞ்சுண்டன் பார்த்தான். எதிரில் நிற்பவள், ஒரு சீனப் பெண். அவளருகில் இருப்பவன் ஒரு சீனக் கிழவன். சொப்பனத்திலும் அவன் நினைக்கவில்லை - தன் எதிரிகள் அப்படி இருப்பார்களென்று.

''உனக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தோம். மேலே அந்த ஆளை நீ கட்டிப் போட்டதுமே நாங்கள் இங்கே வந்தாயிற்று'' என்றாள் ஸுவான்.

''உங்களுக்கு - உனக்குத் தெரியுமா நான் நான் அவனை மடக்கினது?''

''ஓ! அதைக்கூடச் செய்யாவிட்டால் நீ என்ன ஆண் பிள்ளை?''

''பின்னே அங்கேயே ஏன் என்னைத் தடுக்கவில்லை?''

ஸுவான், நஞ்சுண்டனின் முதுகில் தட்டினாள்: ''பிரெய்ன்வாஷ் என்று கேள்விப்பட்டிருக்கிறாயா? மூளைச் சலவை?''

''அது-''

''இதுதான். வா, போகலாம்.'' அவள் முன்னே சென்றாள்: சீனக் கிழவன் பின்னே வந்தான். நடுவில்

நஞ்சுண்டன் செல்லவேண்டியதாயிற்று. அவள் பேசிக் கொண்டே போனாள் ''தப்புவதற்காகச் செய்கிற எந்த முயற்சியையும் முளையிலேயே கிள்ளக்கூடாது. அதிலே என்ன அழகு இருக்கிறது? நீ திட்டமிட வேண்டும். பாடுபட வேண்டும். இதோ வெற்றி, இதோ வெற்றி என்று குதூகலிக்க வேண்டும். அப்போது பார்த்து நான் அதைக் குலைக்க வேண்டும். நாலு தடவை இந்த மாதிரி புரட்டிப் போட்டால் போதும். மூளை பளபளவென்று சலவை ஆகிவிடும்.''

'நான்கிங் ஓட்ட'லின் விலாப்புறத்து வழியே மறுபடி மேலே சென்றார்கள் அவர்கள்.

அதே பழைய அறை.

மெழுகுவத்தியின் உயரம் மேலும் இரண்டங்குலம் குறைந்திருந்தது. விழுந்து கிடந்தவனை இப்போது காணோம். சுத்தமாய் அப்புறப்படுத்தியிருந்தார்கள்.

''உட்கார்!'' என்றாள் ஸுவான்.

நஞ்சுண்டனால் அந்தக் குரலின் ஆணையை எதிர்க்க முடியவில்லை.

''கிடைத்துவிட்டதா?''

என்று கேட்டாள் ஸுவான்.

''எது?''

''தெரிந்த விடைக்குக் கேள்வி கேட்காதே.'' ஸுவானின் பேச்சல் கடுமை எதிரொலித்தது. ''வைர முருகனைத்தான் சொல்கிறேன்.''

நஞ்சுண்டனின் கண்கள் அகல விரிந்தன. ''அது... உனக்கு... எதற்கு?''

''உன்னைக் காட்டிலும் எங்களுக்குத் தான் மிக அவசியம். நீ பூஜைகூடம் பண்ணப் போவதில்லை அதை வைத்துக் கொண்டு. எங்களுக்கு அதனால் அடையக் கூடிய அரசியல் ஆதாயம் ஏராளம்.''

நஞ்சுண்டன் சிறிது நேரம் பேசாதிருந்தான். பிறகு சொன்னான்: ''இது வரை கிடைக்கவில்லை என் கையில்.''

''கிடைத்ததும் இங்கே கொண்டுவந்து கொடு. உன்னால் அதை வேறெங்கும் விற்க முடியாது. விற்றாலும் ஏமாந்து போவாய்.'' நாங்கள் பேச்சை நிறுத்திக் கொண்டு விரலை இரண்டு முறை சொடுக்கினாள் ஸுவான். வேறொருவன் உள்ளே வந்தான் - ஒரு ஸூட் கேஸுடன். மெழுகுவர்த்தி, கடைசி இம்மியில் உயிரை வைத்துக் கொண்டிருந்தது. அதனால் அதன் வெளிச்சம் சற்றுக் கூடுதலாகவே இருந்தது.

பெட்டியை நஞ்சுண்டனின் முகத்தெதிரே பிரித்தான் வந்தவன். ஸுவான் தன் டார்ச் விளக்கை அதன்மீது அடித்தாள்.

''அம்மா!'' மார்பைப் பிடித்துக் கொண்டான் நஞ்சுண்டன். ஸூட் கேசுக்குள் கற்றை கற்றையாக எத்தனை கரென்ஸி நோட்டு! அடுத்த நிமிடமே தன் பிரமிப்பை மறைத்துக் கொண்டான். ''பேப்பரில் படித் திருக்கிறேன் இதைப்பற்றி'' என்றான்.

''எதைப்பற்றி?''

''அச்சுக் கலையில் நீங்கள் அடைந்திருக்கும் முன்னேற்றத்தைப் பற்றி - குறிப்பாக, கரென்ஸி அச்சடிக்கும் கலையில்.'' நஞ்சுண்டனின் பேச்சில் ஏளனம் கொட்டியது. ''உங்கள் வேலைகளுக்கும் செலவுகளுக்கும் இந்திய சர்க்காரின் கையை எதிர்பார்த்து நிற்பதில்லை யாமே!''

''மூடு வாயை! இதில் ஒன்றுகூடக் கள்ள நோட்டு இல்லை!'' சீறினாள் ஸூவான். ''உனக்குச் சந்தேகமா யிருந்தால், மொத்தத்தையும் தங்கக் கட்டிகளாக வேண்டு மானாலும் தருகிறேன். அந்த வைர முருகனை அக்கக்காகப் பிரித்து, தனித் தனி வைரமாக விற்றால்கூட ஐந்து லட்சத்துக்குமேல் உனக்குக் கிடைக்காது. நான் எட்டு லட்சம் தருகிறேன்.

கரென்ஸிப் பெட்டியை இடது கையால் மூடினான் நஞ்சுண்டன். எடுத்துப் போகும்படி கையை ஆட்டினான் அலட்சியமாக.

எழுந்து கொண்டான் இருக்கையினின்றும். ''எட்டு லட்சம் ரூபாய் தருவதாக நீ வாக்களிப்பதால், அந்த வைர முருகனின் மதிப்பு எண்பது லட்சமாவது இருக்கும்.''

''ஏய்!'' என்றாள் ஸூவான்.

''மிரட்டாதே. எங்கே பேரத்துக்கு இடம் இருக்கிறது, எங்கே இல்லை என்று எனக்குத் தெரியும்.'' ஸூவானின் கையைத் தானாகவே பிடித்துக் குலுக்கினான் நஞ்சுண்டன்.

''என்னைத் தவிர வேறு யாராலும் அந்த வைர முருகனைக் கண்டுபிடிக்க முடியாது என்ற முடிவுக்கு நீ வந்திருக்கிறாய். உன் புத்திசாலித்தனமான முடிவைப் பாராட்டுகிறேன்.''

''விடு.'' அவன் கையை உதறினாள் ஸூவான். ''நீ என்னதான் சொல்கிறாய் முடிவாக?''

''உன்னால் என்னை விட முடியாது. என்னாலும் உன்னை விட முடியாது.''

கசங்கியிருந்த ஸ்லாக்கை உதறி விட்டுக் கொண்டான் நஞ்சுண்டன். கிராப்பைக் கையால் அழுத்திக் கொண்டான்.

''வைர முருகன் கிடைத்ததும் எடுத்துக் கொண்டு இங்கே வருகிறேன். நான் கேட்கிற விலையை அப்போது கொடு.''

பின் கை கட்டிக்கொண்டு அசையாது நின்றாள் ஸுவான். நஞ்சுண்டன் வெளியேறினான். மாடிப்படியில் அவன் இறங்கும் ஓசை கேட்டது. கிழவன் சரேலென அவனைப் பின் தொடரச் சென்றான். கைகளைப் பிடித்துத் தடுத்து நிறுத்தினாள் ஸுவான்.

''வேண்டாம்.''

''ஏன்? அவன் பேச்சில் உனக்கு அத்தனை நம்பிக்கையா?'' என்று கிழவன் கேட்டான்.

''அவன் முடையில் அத்தனை நம்பிக்கை. அவன் பயந்தாங்கொள்ளி, பேராசைக்காரன். ஆகவே அந்த வைர முருகனை எடுத்துக்கொண்டு நம்மிடம் தான் வருவான்.''

''வராவிட்டால்?''

''டாக்ஸியில் அவனை அழைத்துவர என்ன உபயோகித்தாய்?'' அறைக்கு வெளியிலிருந்து இரும்புத் தடியொன்றை எடுத்து வந்தான் கிழவன்.

''இதை.''

''நஞ்சுண்டன் வரத் தவறினால் இதை இன்னொரு தடவை உபயோகப்படுத்து - ஆனால் இன்னும் ஆழமாக, வலுவாக, வேகமாக, முடிவாக'' என்றாள் ஸுவான்.

கிழவன் இளித்தான். ரத்தம் குடிக்கும் காட்டேரியின் இளிப்பு மாதிரி இருந்தது அது.

நிறைந்தது